# பழங்கதைகளில் வாழ்வியல்










டாக்டர் நல்லி குப்புசாமி செட்டியார்

# பழங்கதைகளில் வாழ்வியல்

பத்மஸ்ரீ, கலைமாமணி
டாக்டர் நல்லி குப்புசாமி செட்டியார்

பதிப்பு

**BRAIN BANK**

*16/2, ஜெகதாம்பாள் தெரு,*
*தி. நகர், சென்னை - 600017.*
Ph : 044-28151160/28150033

Pazhankathaikalil Vaazhviyal ◇ Values in Ancient Tales ◇ Dr. Nalli Kuppuswami Chettiar ◇ Brain Bank, 16/2, Jagadambal Street, Chennai-17. Ph: 044 - 28151160 ◇ Manivasagar Offset Printers, Chennai ◇ 1999, 2003, 2007
Price: Rs. 60

பழங்கதைகளில் வாழ்வியல் ◇ நல்லி குப்புசாமி செட்டியார் ◇ ப்ரெய்ன் பேங்க், 16/2, ஜெகதாம்பாள் தெரு, சென்னை–17. ✆: 044–2815 1160 / 2815 0033 ◇ மணிவாசகர் ஆஃப்செட் பிரிண்டர்ஸ், சென்னை–21. ◇ 1999, 2003, 2007 ◇ ரூ. 60

# பதிப்புரை

உரையாடல்களிலும் மேடைப் பேச்சிலும் டாக்டர் நல்லி குப்புசாமி செட்டியார் அவர்கள் பல கதைகளைச் சொல்வதுண்டு. பயணங்களிலும், ஓய்வு நேரங்களிலும் நெருங்கிய நண்பர்களுடன் அவர் சில கதைகளையும் நிகழ்ச்சிகளையும் பகிர்ந்து கொள்வார். கதைகளுக்குப் பின்னே உள்ள தாத்பர்யங்களையும் நன்கு அறிந்தவர் அவர். நண்பர்களுக்கு அது மிகவும் சுவையான அனுபவம்.

அட, அந்தக் கதைக்கு இவ்வளவு அர்த்தமா என்று நாம் வியந்துபோகும் அளவுக்கு கதைகள், கதைகளை ஒட்டிய கிளைக் கதைகள், நிகழ்ச்சிகள் என்றபடி பழங் கதைகளை வாழ்வியல், நிர்வாகவியல் கண்ணோட்டத்தில் விளக்கியுள்ளார் நூலாசிரியர். காலம் காலமாக நிற்கும் நூல்களையே படைக்க வேண்டும் என்று சங்கல்பம் செய்து கொண்டுள்ளார். அவை வாசகர்களின் சிந்தனையை வளப்படுத்தும்.

பழமைக்கும் புதுமைக்கும் பாலம் அமைக்கும் "பழங்கதைகளில் வாழ்வியல்" என்ற இந்த நூல் தமிழ் வாசகர்களின் சிந்தனையை வளப்படுத்தும் என்பது எங்கள் நம்பிக்கை.

தங்கள் ஆதரவை நாடும்,

சாவித்திரி நடராஜன்

சென்னை-17

BRAIN BANK

# முன்னுரை

வாழ்க்கையில் வெற்றி பெற வழிகள் எவை என்பதை உணர்த்தும் பல ஆங்கில நூல்கள் வெளி வந்துள்ளன. ஆனால் தமிழிலும் வேறு இந்திய மொழி களிலும் இப்படிப்பட்ட செய்திகள் வெகு காலத்திற்கு முன்பு கதைகளாகச் சொல்லப்பட்டன. அவை கேள்விச் செல்வமாக தலைமுறை தலைமுறையாகக் கொண்டு செல்லப்பட்டன. பின்னர் அச்சிடப்பட்டன. அவற்றில் சில பாடப்புத்தகங்களில் இடம்பெற்றன. வேறு சில வற்றை ஆசிரியர்கள் வகுப்பறைகளில் சுவாரசியமாகச் சொல்லிக் கொடுத்து வந்தார்கள். இன்று அவை பாடங் களாகவோ, பாடங்களுக்கு அப்பாற்பட்ட செய்தி களாகவோ கல்விக் களங்களில் நுழையவில்லை.

இப்படிக் கதைகள் சொல்லும் பழக்கம் எல்லா நாடுகளிலும் எத்தனையோ வருடங்களாக இருந்து வருகிறது. அந்தந்த நாடுகளின் பழக்க வழக்கங் களையும் பண்பாட்டுக் கண்ணோட்டங்களையும் அவை வெளிப்படுத்துகின்றன. நம் நாட்டில் உபநிஷத, மகாபாரத, பஞ்ச தந்திரக் கதைகள் என்றால் மற்ற நாடுகளில் பைபிள் கதைகள், ஜென் கதைகள், முல்லா கதைகள் என்றபடி வாழ்வியல் கூறுகள் கதைகளாகி இருக்கின்றன. பறவைகளும், விலங்குகளும்கூட, கதா பாத்திரங்களாகி மனித இயல்புகளை விளக்கியுள்ளன.

சிலவற்றின் மூல ஆசிரியர்கள் யார் என்பதை உறுதிப்படுத்துவது கடினம். மேலும் ஒரே மாதிரியான கதைகள் உலகின் வெவ்வேறு பகுதிகளில் புழங்கி வந்துள்ளன.

இந்த நூலுக்காக சுமார் ஐம்பது பழங்கதை களைத் தேர்வு செய்தேன். ஒத்த கருத்துள்ள கதை களை ஒரே அத்தியாயத்தில் குறிப்பிட விரும்பினேன். எழுதத் தொடங்கிய பொழுது இன்னும் எவ்வளவோ எழுதிக் கொண்டு போகலாம் என்று தோன்றியது. இருப்பினும் சுவாரசியம் குறையாமல், தாத்பர்யம் தவறாமல் சொல்ல வேண்டும் என்ற நோக்கத்தில் கதைகளுக்கும் குறிப்புகளுக்கும் ஒரு எல்லை வகுத்துக் கொண்டேன்.

இவற்றை நிரல்படுத்துவதில் எனக்கு உதவியவர் என் இலக்கிய வட்ட நண்பர் டாக்டர் ஆர். நடராஜன். அவருக்கும் அவரது Brain Bank நிறுவனத்திற்கும் மூன்றாம் பதிப்பு வெளியிடும் இந்த நேரத்தில் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இதுபோல் இன்னும் பல தொகுதிகளுக்கு நம் நாட்டில் கதை வளம் இருக்கிறது. சில கதைகளையும் அவை உணர்த்தும் கருத்துக்களையும் விளக்கும் வகையில் இது என் எளிய முனைவு.

அன்பன்

நல்லி குப்புசாமி செட்டி

## உள்ளே


9 இறைவன் அருளால்
18 ஞானம் கைகூட
27 அறிவது அறிந்து
34 சுய புத்தி
39 அதீத சிக்கனம்
43 துரோக புத்தி
47 பிறப்பும் வளர்ப்பும்
51 நம்பிக்கை துரோகம்
60 ஆடும் கழுதையும்
66 மன்னவனே ஆனாலும்
71 வாக்கினிலே இனிமை
77 எது துறவு?
81 கோட்டையும் கோப்பையும்
86 கற்பனை சந்தோஷத்தில்
95 சிறியோராயினும்
104 பாவமன்னிப்பு
111 எது தானம்?
118 கிள்ளி, அள்ளி
125 எது போனாலும்
131 உறவும் பிரிவும்
138 தந்தையும் மகனும்
145 கடமை தவறாமல்
152 ஏட்டோடு நின்றால்
165 கல்வியும் நல்வழியும்
174 முதுமையின் மேன்மை
181 எல்லோரும் சமமா?
186 இழி பிறப்பெடுத்தாலும்
192 விழிப்புணர்வு
197 மிகை ஒரு பகை
202 பதவியும் தகுதியும்
218 குணம் நாடி
222 எல்லாம் நன்மைக்கே

# 1. இறைவன் அருளால்

அனைத்தும் இறைவனால் என்ற நம்பிக்கை மனிதனுக்கு இருக்க வேண்டும். அது வாழ்க்கையில் முன்னேறுவதற்கு உந்து சக்தியாக இருக்கும். தர்க்க ரீதியாகக் கேள்விகள் கேட்டு விவாதித்து முடிவு செய்ய முடியாது. அனுபவங்களிலிருந்தே உணர்ந்து கொள்ள வேண்டும். காற்றைப் பார்க்க முடியாது; அதை உணர்ந்துகொள்ளலாம், அதன் தாக்கத்தைக் காணலாம் என்பது போலவே கடவுளின் கிருபை அமையும். இறையனுபவம் சில சமயங்களில் நமக்கு சித்திக்கும்; வேறு சில சமயங்களில் மற்றவர்களுக்கு அது வாய்க்கும். அவர்களிடமிருந்தும் கடவுள் நம்பிக்கை பற்றிய பாடங்களை நாம் பெற முடியும். நாத்திகர்களாக வாழ்க்கையைத் தொடங்கிய வர்கள்கூடப் பிற்காலத்தில் ஆத்திகர்கள் ஆகி யிருக்கிறார்கள். அது பற்றி இங்கே ஒரு கதை:

அந்த ஊரின் அமைதியான மூலையில் ஓர் ஆலயம் இருந்தது. அங்கே ஒரு திருவிழா நடந்து கொண்டிருந்தது. பக்தர்கள் ஒன்றுகூடி இறைவனின்

திருநாமத்தை ஓதிக் கொண்டிருந்தார்கள். சிலர் பக்திப் பரவசத்தில் ஆடிப்பாடிக் கொண்டிருந் தார்கள். ஒரு இளைஞன் அந்த இடத்தைக் கடந்த போது, 'இதென்ன கூச்சல்' என்று எரிச்சல்பட்டான். அவனுக்கு இவற்றில் நம்பிக்கை கிடையாது. எனவே அவன் கேட்டான், "ஏன் இப்படிக் கூச்சல் போடு கிறீர்கள்? இதனால் என்ன கிடைத்துவிடும்?"

இதைக் கேட்ட முதியவர், "தம்பி பகவானது இனிய நாமத்தைப் பழிக்காதே, பகவானைவிட அவரது திவ்யநாமம் உயர்ந்தது. அதனால் ஆகாதது ஒன்றுமில்லை."

"அப்படியா, பகவான் நாமம் நமக்குச் சோறு போடுமோ?"

"உனக்கு நம்பிக்கையிருந்தால், பகவான் ஊட்டி விடுவார்," என்றார் பெரியவர்.

இளைஞன் இதைச் சோதனை செய்ய விரும்பினான். நாட்டுக்குள் இருந்தால்தானே கடவுள் சோறு ஊட்டுவார்; காட்டுக்குப் போவோம், அங்கு வந்து ஊட்டுவாரா என்று பார்க்கலாம் என்று யோசித்துப் பார்த்துக் காட்டுக்குப் போனான். அங்கே தரையில் உட்கார்ந்தால் யாராவது இரக்கப்பட்டு சோறு தரக்கூடும். அதையும் தவிர்க்கலாம் என்ற எண்ணத்தில் ஒரு மரத்தின் மீது ஏறி அமர்ந்து கொண்டான். தான் யார் கண்ணிலும் படுவதற்கில்லை என்பதையும் உறுதிபடுத்திக் கொண்டான். 'இங்கு இறைவன்

எப்படி உணவுதரப் போகிறான் என்று பார்ப்போம்' என்று தனக்குள் சொல்லிக்கொண்டு இறைவன் திருநாமத்தை ஓதிக்கொண்டே இருந்தான்.

இரண்டு நாட்கள் எதுவும் நடக்கவில்லை. மூன்றாம் நாள் மதியம் இளைஞன் ஏறியிருந்த மரத்தடியில் அந்தப் பகுதியில் போய்க்கொண்டிருந்த ஒரு வழிப்போக்கன் ஓய்வு எடுத்துக்கொண்டான். கொண்டு வந்திருந்த கட்டுச்சாத மூட்டையை அவிழ்த்தான். சாப்பிட்டான். அங்கேயே உறங்கினான். மாலையில் தன் வழியே நடந்தான்; கட்டுச் சாதக் கூடையை அங்கேயே மறந்து விட்டுவிட்டான். அதை எடுத்துக் கொள்ளத் திரும்பி வரவில்லை. மரத் தடியில் என்ன நடக்கிறது என்பதை அறியாமல், இளைஞன் இறைவன் திருநாமத்தை உச்சரித்தபடியே தனிமையில் பொழுதைக் கழித்துக் கொண்டிருந்தான்.

ஊருக்குள் கொள்ளையடித்து விட்டு இரவில் காட்டில் ஒளிந்து கொள்ளும் ஒரு கொள்ளைக் கூட்டம் அன்று இரவு அந்த மரத்தடிக்கு வந்தது. முதலில் அவர்கள் தாங்கள் கொள்ளையடித்து வந்த பொருட்களைப் பங்கிட்டுக் கொண்டார்கள். அப்பொழுது வழிப்போக்கன் விட்டுச் சென்ற சாத மூட்டையை ஒருவன் பார்த்தான். அவர்களுக்கு ஒரே சந்தோஷம்; ஏனென்றால் எல்லோருக்கும் பசி. ஒருவன் சாத மூட்டையை அவிழ்த்தான். கூட்டத்தின் தலைவன் சொன்னான்; "இதில் நாம் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ஒருவேளை

ஊரார் நம்மைக் கொல்வதற்காக உணவில் விஷம் கலந்து வைத்திருக்கலாம்."

சுற்றும் முற்றும் பார்த்த கள்வர்கள் அங்கே யாருமில்லை என்று நினைத்தபோது, மரத்தில் ஏதோ சலசலத்தது. இளைஞன் அங்கே அமர்ந்திருப்பது அவர்களுக்குத் தெரியவந்தது. உணவை அங்கேயே பரீட்சித்துப் பார்த்தது அவன்தான் என்ற முடிவுக்கு வந்தார்கள். எல்லோரும் அவனை மிரட்டினார்கள். அவன் விழித்தான். கள்வர் தலைவன் யோசித்துப் பார்த்து ஒரு முடிவுக்கு வந்தான். அதாவது கட்டுச் சாதத்தின் ஒரு பகுதியை அவனையே சாப்பிடச் செய்தால் அது விஷச் சோறா அல்லவா என்பது தெரிந்து விடும் என்ற எண்ணத்தில்.

இளைஞன் சாப்பிட மறுத்தான். அது அவர்களது சந்தேகத்தைக் கிளறியது. "இவனைப் பிடித்து, சோற்றை வாயில் ஊட்டுங்கள்," என்று கட்டளையிட்டான். அவர்கள் அவ்வாறே செய்தனர். அந்தக் கட்டாயத்திற்கு உட்பட்டு இளைஞன் பசியாறினான், இது இறைவன் மகிமையே என்பதை அந்த இளைஞன் அப்போது புரிந்து கொண்டான்.

பகவான் பெயரைச் சொல்வதன் பயன் பற்றி மகா பெரியவாள் காஞ்சி பரமாச்சார்ய சுவாமிகள் சொன்னதையும் இங்கே குறிப்பிட விரும்புகிறேன்:

"வாயால் பகவந் நாமாவைச் சொல்லிப் புண்ணியம் செய்ய வேண்டும்." சம்பாதிப்பதிலேயே பொழுதெல்லாம் போய்விடுகிறது; அவகாசம்

இல்லையே என்பீர்கள். சம்பாதிப்பது கிருஹஸ்தர்களுக்கு அவசியம்தான். ஆனால் யோசித்துப் பார்த்தால் அதற்கே பொழுது முழுதும் போய் விடவில்லை என்று தெரியும். வீண்பேச்சு, பரிகாசம், வேடிக்கை பார்ப்பது, நியூஸ் பேப்பர் விமரிசனம் இவற்றில் எவ்வளவு பொழுது வீணாகிறது? அதையெல்லாம் பகவந் நாம ஸ்மரணையில் செலவிடலாமே. இதற்கென்று தனியே பொழுது ஏற்படுத்திக்கொள்ள முடியாவிட்டாலும் பரவா யில்லை, காரியாலயத்திற்கு பஸ்ஸிலோ, ரயிலிலோ போகும்போது பகவந் நாமாவை ஜபித்துக் கொண்டே போகலாமே. ஓடி ஓடிச் சம்பாதிப்பதில் ஒரு பைசாகூடப் பிற்பாடு உடன் வராதே. மறு உலகத்தில் செலாவணி பகவந் நாமா ஒன்றுதானே."

மறு உலகத்தில் என்று மட்டுமில்லை. இந்த உலகத்திலும் நம்பிக்கை உள்ளவர்களுக்கு இறைவன் திருநாமம் கை கொடுக்கும். இதற்கு இறை நம்பிக்கை யுள்ள என் நண்பர் ஒருவரின் இளமைக்கால நிகழ்ச்சிகளே அத்தாட்சி. அவருக்கு 1970–ல் ஏற்பட்ட அனுபவம் இது. மதுரையில் உள்ள ஒரு கல்லூரியில் 'ட்யூட்டர்' வேலைக்காக அவருக்கு இன்டர்வியூ கடிதம் வந்திருந்தது. தஞ்சையிலிருந்து மதுரைக்கு வந்த அவர் தன் நண்பர் வீட்டுக்குப் போனார். அவரும் இவரைப்போல அப்பொழுது பட்ட மேற்படிப்பு முடித்த இளைஞர். அவரிடம் தன் இன்டர்வியூ விஷயத்தைச் சொல்லி, அந்தக் கல்லூரியின் ஆங்கிலப் பேராசிரியரைச் சந்திக்க

ஏற்பாடு செய்யமுடியுமா என்று கேட்டார். பேராசிரியர் அண்மையில் வீடு மாறியிருக்கிறார், புதிய முகவரி தெரியாது என்று மதுரைக்காரரர் சொல்ல, விடாப்பிடியாக, தஞ்சை நண்பர் சொன்னார்: "வா, வெளியே போகலாம்; தெரிந்து கொள்ளலாம்."

"ஆமாம்ப்பா, ரோடுல போறவன் யாராவது சொல்வானா?" என்று கேட்டார்.

நண்பர் கொஞ்சமும் அலட்டிக் கொள்ளாமல், "முருகன் இருக்கிறான்; கவலைப்படாதே, ரோடுல போறவன் சொல்வான்" என்று சொல்லி நண்பரை அழைத்துக் கொண்டு, அந்த மாலை நேரத்தில் டவுன்ஹால் ரோடு பக்கம் வந்திருக்கிறார்.

அவர்கள் நடந்து போய்க் கொண்டிருந்த நான்கைந்து நிமிடங்களில் தஞ்சை நண்பருக்கு அறிமுகமான வேறு ஒரு நண்பர் அங்கே எதிர்ப் பட்டார். அவரிடம் நண்பர் கேட்டார்:

"ஆமாம்; அண்ணாச்சி, இப்போ என்ன பண்றீங்க?"

"மதுரைக் கல்லூரியில் இங்லீஷ் ட்யூட்டராக இருக்கிறேன்."

"சரி, பேராசிரியர் கே. ஆர். நாராயணன் வீடு மாறிவிட்டாராமே; புதிய முகவரி தெரியுமா அண்ணாச்சி?"

அண்ணாச்சி புதிய முகவரியைச் சொன்னார். என் தஞ்சை நண்பர் தன் மதுரை நண்பரைப் பார்த்துக் கேட்டார். "ஏனப்பா, ரோடுல போறவன் சொல்வானான்னு அப்போ கேட்டியே, இப்போ பார், ரோடுல போனவன்தான் சொன்னான். முருகன் இருக்கார்; பார்த்துப்பார் என்றேனே, நமக்கு முகவரி கொடுத்த அந்த நண்பரின் பெயர் வேலாயுதப் பெருமாள்." இது நிஜமாக நடந்த நிகழ்ச்சி. மறுநாள் இன்டர்வியூ. என் நண்பர் அதில் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பதவியில் அமர்ந்தார்.

அடுத்த சில வருடங்களில் அதே போல் அவருக்கு இன்னொரு அனுபவம் ஏற்பட்டது. மாநிலமெங்கும் கடை அடைப்பு. ஓட்டல்களும் மூடப்பட்டிருந்தன. என் நண்பர் ஒரு லாட்ஜில் தங்கி இருந்தார். பக்கத்து அறையில் எழுத்தாளரும் இலக்கிய விமரிசகருமான சேவற்கொடியோன் வசித்து வந்தார். அவருக்கு வழக்கப்படி ஒரு 'மெஸ்'சிலிருந்து வந்தது. அசைவச் சாப்பாடு. இவரோ சுத்த சைவம். பக்கத்து அறையில் நண்பர் பசியோடு இருந்ததனால் சேவற்கொடியோன் சாப்பாட்டைத் தொடவில்லை. இவரோ "பரவா யில்லை; சாப்பிடுங்கள். கடவுள் இருக்கிறார். எனக்கு அப்புறம் ஏதாவது கிடைக்கும். சாப்பாட்டைச் சூட்டோடு சாப்பிடுங்கள்" என்று வற்புறுத்தினார்.

அவர் தயங்கித் தயங்கி டிஃபன் கேரியரைத் திறக்கும் நேரம் என் நண்பருடன் பணியாற்றும் சக

ஆசிரியர் மிகச் சரியாக அங்கு வந்து சேர்ந்தார். அவர் கையில் ஒரு பொட்டலம். அது வேறு எதுவுமில்லை. மீனாட்சி அம்மன் கோயில் பிரசாத உருண்டை. கொண்டுவந்து தந்தவர் பெயர் சுப்பிரமணியன். நண்பர் அதை எடுத்துக் கொள்ள, கொண்டு வந்தவர் அசைவச் சாப்பாட்டைப் பகிர்ந்து கொண்டார். என் நண்பருக்கு மீனாட்சி கோயில் பிரசாதம் சுப்பிரமணியன் என்பவர் மூலம் கிடைத்தது. கிடைக்கும் என்று நம்பினார். கிடைத்தது. அதுதான் இறைவன் அருள். இதுபோன்று பலருக்குக் கடவுள் தோன்றாத் துணையாக அருள் புரிகிறார். இதையேதான் பாரதியாரும்,

'மழைக்குக் குடை
பசிநேரத்திற்கு உணவு,
எங்கள் வாழ்விற்கு
எந்தன் கண்ணன்' என்றார்.

இறை தேடினால் இரை தேட வேண்டாம். இறைவன் அருள் புரிவார். அதனால்தான் வாரியார் சுவாமிகள் 'இரை தேடுவதோடு இறையும் தேடு' என்றார். இறைவனின் பெயரைச் சொன்னால் அவ்வளவு மகிமை. ஆனால் பெயரைச் சொல்வது மட்டுமல்ல நம் வேலை. நம்பிக்கையுடன் செயல் படவும் வேண்டும்.





## 2. ஞானம் கைகூட

இறைவனிடம் முழுமையாக ஈடுபட்டுள்ள மனம் சுகம், துக்கம் இரண்டையும் சமமாகவே எடுத்து கொள்கிறது. அதனால் அவர்களுக்கு வாழ்க்கையில் சோகம் என்பது இல்லை. யோகிகளும் தவசிரேஷ்டர்களும் அப்படி நடந்து கொள்ள முடியும். பாமரனால் முடியாது. ஆயினும் பகவத் கீதையில் சொல்லியிருப்பது போல் துக்கத்தினால் நிலைகுலைந்து போய்விடாமல் சுகத்தில் தலைகால் புரியாது ஆடாமல் இதற்கு எல்லை இன்னது என்பதைப் புரிந்து கொண்டு நடக்க வேண்டும்.

சாதாரண மனிதனுக்கும் அது கைவரக் கூடியதுதான். அசாதாரணமானவர்கள் அந்த அளவுக்கு இல்லாவிட்டாலும் ஓரளவுக்காவது அப்படி நடந்து கொள்ள முடியும். நடந்து கொள்ள வேண்டும். அதற்கு இங்கே ஒரு முன்னுதாரணக் கதை: மகரிஷி வியாசர் மகாபாரதத்தை எழுதியவர், ஞானி. எல்லாம் வல்ல விநாயகரே அவருக்கு 'ஸ்டேனோ கிராஃபராக' இருந்திருக்கிறார்!

வியாசர் உயர்ந்த குடும்பத்திலிருந்து வந்தவர். எனினும் சுக துக்கங்களைக் கடந்த நிலையை அவர் தந்தை அடையவில்லை. பாட்டன் அடைந்திருக்க வில்லை. முப்பாட்டனுக்கும் அது முடியாமல் போயிற்று. ஆனால் வியாசருக்கு ஓரளவுக்கு அது கைவரப் பெற்றது. எனினும் தான் முழுமையின் முழுமையை அடையவில்லை. எல்லைகளை மட்டுமே தொட முடிந்தது என்றார். (மகாபாரதம் போன்ற அற்புதமான உலக மகா காவியம் படைத்தவரே உன்னத நிலைமையை அடைந்து விட்டதாக நினைத்துக் கொள்ளவில்லை) ஆனாலும்

*'ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு*
*எழுமைக்கும் ஏமாப்பு டைத்து'*

என்று வள்ளுவர் சொல்வது போல் வியாசரின் ஏக்கம் அவர் மகன் சுகருக்கு ஞான சித்தியாக வாய்த்தது.

நிறைநிலை எய்தியவனாகத் தன் மகன் சுகர் பிறந்திருக்கிறான் என்பதை அறிந்துகொண்ட வியாசர் சுகருக்கு பாலபருவத்தில் தானே குருவாக ஞானோபதேசம் செய்தார். தத்துவ சாஸ்திரங்களை போதித்தார். பின்னர் மன்னர்களிடையே ஞானியாகவும் ஞானியர்களிடையே மன்னராகவும் இருந்துவந்த ஜனகரிடம் அனுப்பி வைத்தார். 'ஞானி' என்பதற்கும் மேலாக 'விதேகர்' என்ற நிலையில் வாழ்ந்து வந்தவர் ஜனகர்—அதாவது உடம்பு இருந்தாலும் அதை மறந்து விட்டவராக

வெறும் ஆன்மாவாகவே—ஸ்தூல சரீரத்தைப் பொருட்படுத்தாதவராகவே வாழ்ந்து வந்தார். அவரிடம் ஞானம் பெற சுகர் அனுப்பப்பட்டார்.

பிரம்ம ஞானத்தைக் கற்க சுகர் தம்மிடம் வரப்போவதை திரிகால ஞானியான ஜனகர் அறிந்து கொண்டார். எனவே சில முன்னேற்பாடுகளைச் செய்தார்.

சுகர் அரண்மனை வாசலுக்கு வந்தபோது அவரைக் காவலர்கள் கண்டுகொள்ளவில்லை. சற்று நேரம் கழித்து அவருக்கு ஒரு ஆசனம் அளித்தனர். ஒருவரும் அவருடன் பேசவில்லை — நீ யார், எதற்கு வந்தாய்? — என்றுகூட ஒருவரும் கேட்கவில்லை.

இத்தனைக்கும் சுகர் மகரிஷி வியாசரின் மகன். வியாசரோ நாடு முழுவதும் அறியப்பட்ட பேரறிஞர். சுகரும் தன்னளவில் மரியாதைக்குரியவரே. ஆனால் தொடர்ந்து சில நாட்கள் அவரைக் கடைநிலைக் காவலர்கள் கூடப் பொருட்படுத்தவில்லை.

பின்னர் ஒரு நாள் திடீரென்று மந்திரிகளும், உயர் அதிகாரிகளும் அவரை சகல மரியாதை களுடன் அரண்மனைக்கு அழைத்துச் சென்றார்கள். அழகிய, அலங்காரமான அறைகளைக் காட்டி னார்கள். வாசனை திரவியங்கள் கலந்த நீரில் ஸ்நானம் செய்வித்தார்கள். அற்புதமான ஆடைகளை அணிவித்தார்கள். எட்டு நாட்கள் ஆடம்பரச் சூழலில் வைத்திருந்தார்கள்.

சுகர் முகத்தில் தொடர்ந்து ஒரு கம்பீரமான அமைதி இருந்தது தொடக்க நாட்களின் உதாசீனமோ அடுத்துவந்த உபசரணைகளோ முகத்தில், நடை உடை பாவனைகளில் எந்தவித மாற்றத்தையும் கொண்டுவந்து விடவில்லை.

பிறகு அவர் மன்னரைச் சந்திக்க அழைத்து வரப்பட்டார். ஜனகர் சிம்மாசனத்தில் அமர்ந்திருக்க, ராஜ சபையில் இசையும், நடனமும் வேறு சில கேளிக்கை நிகழ்ச்சிகளும் நடந்து கொண்டிருந்தன. இதற்கிடையே ஜனகர் சுகரை அழைத்து, ஒரு கிண்ணத்தில் விளிம்பை நிறைக்கும் அளவுக்குப் பாலை ஊற்றிக் கொடுத்து அந்த சபையை ஏழு முறை சுற்றிவரும்படிச் சொன்னார்.

பாலகனாகிய சுகர் அந்தக் கிண்ணத்தைக் கையிலெடுத்துக் கொண்டு இசையும் இனிய முகங்களும் அலைமோதும் அந்த சபையை வலம் வரத் தொடங்கினார். மன்னர் ஆணையிட்டபடியே ஏழு முறை வலம் வந்தார். ஒரு துளி பால்கூடச் சிந்தவில்லை. கிண்ணத்தை அப்படியே மன்னரிடம் கொடுத்தார். அது எப்படிச் சாத்தியமாயிற்று?

தான் அனுமதிக்காமல் எதுவும் தன் மனத்தை பாதிக்க முடியாது. தான் அப்படிப்பட்ட ஸ்தித ப்ரக்ஞன் என்பதை வெகு இயல்பாக நிரூபித்தார் இளம் வயது சுகர். அப்பொழுது ஜனகர் சொன்னார்: “உன் தந்தை உனக்கு என்ன கற்றுக் கொடுத்தாரோ, நீயாக எவற்றைக் கற்றுக்

கொண்டிருக்கிறாயோ, அதைத்தான் என்னால் மீண்டும் கற்றுத்தர முடியும். நீயோ உண்மையை நன்கு உணர்ந்தவன். உனக்கு தீட்சிப்பதற்கு என்னிடம் எதுவும் இல்லை; விடைபெறுவாய்; வீடு செல்வாய்" என்றார் ஜனகர்.

போதிப்பதற்கும் போதனை பெறுவதற்கும் தகுதி வேண்டும் என்ற ஒரு நியதி இருந்த காலத்தில் ஜனகர்களும் சுகர்களும் இருந்தார்கள். காலச் சக்கரச் சுழற்சியில் நிலைமை மாறிவிட்டது. இரு தரப்பிலும் தகுதியில்லாதவர்களே அதிகம் பேர் இருக்கிறார்கள். காலம் கடந்த பிறகே மக்களும் போலியான குரு நாதர்களைப் புரிந்து கொள்கிறார்கள். ஆனால் போலிகளுக்கு அடியார் கூட்டம் இருக்கிறது. அடுத்துப் பட்டத்திற்கு வருவதில் சிஷ்யர்களிடையே போட்டியும் இருக்கிறது. அது பற்றி ஒரு கதை:

தீயவன் ஒருவன் குற்றம் செய்துவிட்டுப் பிடிபட்டான். தண்டனையாக அவனது மூக்கு அறுக்கப்பட்டது. மூக்கில்லாத முகத்தை வெளியே காட்ட வெட்கப்பட்டு, தன்னையே வெறுக்கத் தொடங்கிய அவன் காட்டுக்கு ஓடிவிட்டான்.

தன் அருகே யாராவது வருவதுபோல் தோன்றினால் தரையில் ஒரு புலித்தோலை விரித்து, அதில் அமர்ந்து ஆழ்ந்த தியானத்தில் இருப்பது போலப் பாசாங்கு செய்வான். காட்டில் தனியே உள்ள பாசாங்குச் சாமியாரான தன்னை நோக்கி யார் வரப்போகிறார்கள் என்று அவன் அலட்சிய

மாக இருக்க, விபரம் புரியாத மக்கள் அவனைத் தேடி கும்பல் கும்பலாக வரத் தொடங்கினார்கள். காடானாலும் அவன் வாழ்க்கை அன்பர்கள் தயவினால் வசதியானதாயிற்று.

அவனோ பாசாங்குச் சாமியாராயிற்றே. எதுவும் பேசத் தெரியாது என்பதால் வாயைத் திறப்பதே இல்லை. அந்த அஞ்ஞானத்தையும் மக்கள் மௌன விரதம் என்றே போற்றினார்கள். அவனது நெறியில் தீட்சை பெறுவதற்குப் பலர் விரும்பினார்கள். அதில் ஒரு இளைஞன் மிகவும் துடிப்பாக இருந்தான்.

மேலும் அங்கே தங்கியிருந்தால் குட்டு வெளிப் பட்டுவிடும் என்று நினைத்த போலிச்சாமியாருக்கு என்ன சொல்வது, என்ன செய்வது என்று தெரியவில்லை. ஆனாலும் தீட்சைபெற விரும்பிய இளைஞனைப் பார்த்து, "நாளை வரும்பொழுது ஒரு கூரான கத்தி கொண்டு வா," என்றார்.

வாழ்க்கையின் லட்சியம் விரைவில் நிறை வேறப் போகிறது என்ற எண்ணத்தில் இளைஞனும் மறுநாள் அதிகாலையிலேயே கத்தியுடன் வந்தான். போலிச் சாமியார் அவனைக் காட்டிற்குள்ளே தனியாக அழைத்துச் சென்று அவன் கத்தியை வாங்கி அவன் மூக்கை ஒரே சீவாகச் சீவி விட்டான். இளைஞன் துடிதுடித்தபோது அந்தப் போலிச் சாமியார் சொன்னான்: "இளைஞனே, இதுதான் நான் பெற்ற தீட்சை. இதையே நான் உனக்குத் தந்தேன். வேளை வரும் பொழுது நீயும் மற்றவர்

களுக்கு இந்த தீட்சையைச் செய்விப்பாயாக," என்றான்.

மூக்கறுபட்ட இளைஞன் தன் நிலைமையை யாரிடமும் சொல்லிக் கொள்ள முடியவில்லை. தான் பெற்ற தீட்சையைப் பலருக்கும் கொடுத்தான். இப்படியாக மூக்கறுந்த மகான்களின் திருக்கூட்டம் நாடெங்கிலும் பரவியது. அகத்தை அறுப்பது அறிவு என்பது போல முகத்தை அறுப்பது அறிவு என்று ஒரு புதுப் பழக்கமும் தோன்றியது.

இது புதுக் கதையல்ல. சென்ற நூற்றாண்டில் இதைச் சொன்னவர் காசிக்கு அருகில் காஜிபூர் என்ற இடத்தில் ஒரு குகையில் வாழ்ந்துவந்த பவாஹாரி பாபா என்ற மகான். "உலக நன்மைக்காக நீங்கள் ஏன் வெளியே வந்து செயல்படக் கூடாது?" என்று கேட்கப்பட்டபோது அவர் சொன்ன கதை இது.

அது சரி, கேள்வி கேட்டு இந்தக் கதையைத் தெரிந்து கொண்டவர் யார்? சுவாமி விவேகானந்தர். தாங்கள் போதிப்பதற்கோ, கொடுப்பதற்கோ எதுவும் இல்லாத நிலையிலும் போதனை செய்யும் போலி மகான்களைப் பற்றிய கதை இது.

சமயங்களில் அசல்களும் போலிகளை நம்பிப் பின்பற்றக் கூடிய அபாயம் இருக்கிறது. ஏனென்றால் போலிகள் பேசுவதில் வல்லவர்கள். தமக்கெனக் கைதட்டுவதற்கு ஆள் திரட்டும் ஒரு கூட்டத்தையும் கூடவே வைத்திருப்பார்கள். அசல்கள் ஏமாந்து

போனால் தம் ஏமாற்றத்தை வெளிக்காட்டிவிடாமல் தாமும் போலிகளாகிப் போலிகளை உருவாக்கு வதுண்டு. அதற்காகச் சொல்லப்பட்டதே மேற் குறிப்பிடப்பட்ட கதை. இதே வகையில் இன்னொரு கதையும் சொல்லப்படுகிறது.

கருவுற்ற ஒரு பெண் சிங்கம் ஒரு சமயம் காட்டில் இரை தேடி அலைந்து கொண்டிருந்தது. அப்பொழுது ஒரு ஆட்டு மந்தை மீது ஏடாகூடமாகப் பாய்ந்ததில் ஒரு பாறை இடறிக் கீழே விழுந்து இறந்தது. அந்த நிலையில் அது தன் குட்டியையும் ஈன்றது. குட்டி ஆட்டு மந்தைகளுடன் சேர்ந்து கொண்டு ஆட்டுக்குட்டியாகவே வளர்ந்து வந்தது. சில வருடங்களுக்குப் பிறகு யதேச்சையாக அந்தப் பகுதிக்கு வந்த சிங்கம் ஆட்டுக் குட்டியை அழைத்துப் பேசி, ஏரிக்கரைக்கு இழுத்துச் சென்று, தன் பிம்பத்தைப் பார்க்கவைத்து, கர்ஜிக்கச் செய்து அது சிங்கக்குட்டியே என்பதை உணர்த்தியது.

நம்மில் பலர் நாம் சிங்கக் குட்டிகள் என்பதை உணராமலேயே வாழ்ந்து வருகிறாம். யாராவது அதை உணர்த்த முன்வரும்பொழுது அவர்கள் பேச்சைக் கேட்டு, தன்னிலை உணர்ந்து முன்னேற வேண்டும். அதற்கான வாய்ப்புகள் அநேகமாக எல்லோருக்கும் கிடைக்கின்றன.

## 3. அறிவது அறிந்து

கீழோர் என்றும் கீழோராக இருப்பதில்லை. மேலோர் என்றும் மேலோராகத் தொடர்வதில்லை. வாழ்க்கைச் சக்கரம் நிலைப்பாடுகளை மாற்றி விடுகிறது. உரிய நேரத்தில் ஒருவனுக்குக் கிடைக்கும் ஞானப் பொறி அவனை உயர்த்தி விடுகிறது. அதே நேரம் தவறான கண்ணோட்டம் மேலே இருக்கும் மனிதனைக் கீழே தள்ளி விடுகிறது. பிறகு அவனால் எழ முடியாமல் போகிறது. ஆனால் ஏதோ ஒரு உந்துதலினால் கீழேயிருந்து மேலே ஏறியவன் என்றும் தாழ்ந்து போவதில்லை.

அது தொடர்பாக ஒரு நிகழ்ச்சி. அதைக் கதை யென்று குறிப்பிட மனம் வரவில்லை. கதையோ, வரலாறோ அது தரும் பாடமே இங்கு முக்கியம்.

ஒரு காலத்தில் சகவாச தோஷத்தினால் ரத்னாகரன் என்ற ஒரு அந்தணன் திருடன் ஆகிவிட்டான். அடர்ந்த காட்டினுள்ளே ஏதாவது ஒரு ஒற்றையடிப் பாதையில் ஒளிந்து கொண்டு வழிமறிப்பது அவன் பழக்கம். அந்த வழியாக

வருபவர்களை அவன் கொல்வான். அவர்களது உடைமைகளை எடுத்துச் செல்வான். இது மாதிரி அவன் பலரைக் கொன்றிருக்கிறான். எத்தனையோ பொருட்களைக் கொள்ளையடித்திருக்கிறான்.

ஒருமுறை தேவரிஷி நாரதர் அந்தக் காட்டுப் பாதை வழியே வந்து கொண்டிருந்தார். அவரைக் கண்டதும் அவர் மீது பாய்ந்த ரத்னாகரன் அவரைக் கொல்லத் தன் கத்தியை உருவினான்.

"நீ எதற்காக என்னைக் கொல்ல வருகிறாய்? உனக்கு நான் என்ன கெடுதல் செய்தேன்?" என்று கேட்டார் நாரதர்.

"நீங்கள் எனக்கு ஒரு கெடுதலும் செய்ய வில்லை. ஆனால் என் பிழைப்புக்கு வழி?"

"ஏன் இந்தக் காட்டில் கிடைக்கும் காய் கனிகளை உண்டு வாழமுடியாதா?

"என்னால் முடியும். ஆனால் என் மனைவி, பெற்றோர், குழந்தைகள் இவர்களைக் காப்பாற்ற வெறும் காய்கனிகள் போதாவே."

"அது சரி; ஆனால் யாருக்காகத் திருடு கிறாயோ, அவர்கள் யாரும் உன் பாவத்தில் பங்கு கொள்ள மாட்டார்களே. உன் பாவங்களை நீயே அல்லவா போக்கிக் கொள்ள வேண்டும்?"

"அப்படிச் சொல்லமுடியுமா, நான் செய்யும் பாவத்தில் கிடைக்கும் பொருட்களைக் கொண்டு

யார் வாழ்க்கை நடத்துகிறார்களோ அவர்கள் எல்லோரும் என் பாவத்திலும் பங்கு கொள்ள வேண்டியதுதான்."

"அது அப்படியல்ல என்பதை நீ புரிந்து கொள்ள வேண்டும். உன் பாவத்தில் யாரும் பங்கெடுத்துக் கொள்ள மாட்டார்கள். சந்தேகமாக இருந்தால் நான் இங்கேயே நிற்கிறேன். நீ வீட்டிற்குப் போய் இதைக் கேட்டுவிட்டு வா."

"ஐயா, பெரியவரே, என்னை என்ன மடையன் என்று நினைத்துக் கொண்டீரா? என்னை வீட்டுக்கு அனுப்பும் சாக்கில் நீங்கள் தப்பித்துப் போகலாம் என்று பார்க்கிறீர்களா? நான் உங்களை விடமாட்டேன்."

"அப்படியும் ஒரு சந்தேகமா? கவலைப்படாதே. நான் எங்கும் ஓடிப்போக மாட்டேன். நம்பாவிட்டால் என்னை இந்த மரத்தோடு கட்டிப்போட்டுவிட்டு, நீ வீட்டுக்குப் போய்த் திரும்பி வா," என்று சொல்லிய நாரதர் மரத்தோடு மரமாக நின்று கொண்டார்.

சந்தேகத்திற்கு இடம கொடுக்க விரும்பாத ரத்னாகரன் நாரதரை மரத்தோடு மரமாகக் காட்டுக் கொடியினால் கட்டிவிட்டு வீட்டுக்கு ஓடினான். முதலில் தந்தையைச் சந்தித்தான். அவரைக் கேட்டான்: "அப்பா, நான் தினமும் பாவமான கொலைத் தொழிலைச் செய்துதான் உங்களை யெல்லாம் காப்பாற்றி வருகிறேன். அந்தப் பாவத்தில் உங்களுக்கும் பங்கு உண்டா, இல்லையா?"

தந்தை சற்றுநேரம் யோசித்துவிட்டுச் சொன்னார்: "மகனே, நாங்கள் உன்னை வளர்த்துப் பெரியவனாக்கினோம். இப்பொழுது எங்களுக்கு வயதாகிவிட்டது. நாங்கள் முன்பு உன்னைக் காப்பாற்றியதுபோல, நீ எங்களை இப்பொழுது காப்பாற்ற வேண்டியது கடமை. அதற்கான பணத்தை எப்படிச் சம்பாதிக்கிறாய் என்பது பற்றி எங்களுக்குக் கவலை இல்லை. அதனால், உன் பாவத்திலோ, புண்ணியத்திலோ எங்களுக்குப் பங்கு ஏதும் இல்லை."

ரத்னாகரன் இந்த பதிலை எதிர்பார்க்கவில்லை. தாயாரிடம் அதே கேள்வியைக் கேட்டான். தாயாரும் தந்தை சொன்னதையே சொன்னாள். தன் மனைவியிடம் அதே கேள்வியைக் கேட்டான்.

"மனைவியைக் காப்பாற்றுவது கணவனின் கடமை. அதை ஒழுங்காகச் செய்யும் வரை அதற்கான பொருளை நீங்கள் எப்படிச் சம்பாதிப்பீர்கள் என்பது பற்றியெல்லாம் நான் கவலைப்பட முடியுமா? ஏதோ என்னால் முடிந்த பணிவிடையை உங்களுக்குச் செய்கிறேன். மற்றபடி, உங்கள் பாவத்தில் எனக்கு எப்படிப் பங்கு வரும்?" என்றாள் மனைவி. கடைசியில் மகனிடம் அதே கேள்வியைக் கேட்டான் ரத்னாகரன். "அப்பா, நான் இப்பொழுது சிறுவன். தாங்கள் என்னை இப்பொழுது காப்பாற்றி வருகிறீர்கள். அதுபோல, நாளைக்கு நான் பெரியவனானதும் உங்களைக் காப்பாற்றுவேன். இதில் உங்கள் பாவம் ஏதும் இருந்தால் அதில் எனக்குப் பங்கு ஒன்றும் கிடையாதே," என்றான்.

தன் குடும்பத்தார் பாவத்தைப் பங்கு போட்டுக் கொள்வதில் இப்படி ஒதுங்கி நிற்பதைக் கண்டு அதிர்ந்துபோன ரத்னாகரன் நாரதரைக் கட்டிப் போட்டிருந்த இடத்திற்கு ஓடோடி வந்தான். மரத்திலிருந்து அவரை விடுவித்தான். கால்களில் விழுந்தான், கதறினான். "சுவாமி, இப்பொழுது புரிந்து கொண்டேன். நான் பாவி – நான் மட்டுமே பாவி – என் பாவங்களில் பங்கு கொள்ள சொந்த பந்தங்கள் தயாராக இல்லை. என் பாவங்களிலிருந்து நான் மீள்வதற்கும் செய்த பாவங்களுக்குப் பிராயச் சித்தம் செய்வதற்கும் தாங்கள் வழி சொல்லி அருளவேண்டும்."

இறுதியில் நல்ல இடம் சேர்ந்த ரத்னாகரனுக்கு நன்மையே விளைந்தது. நாரதர் சொன்ன ஒரு பிராயச்சித்தம், "தினம் தினம் ராமா, ராமா என்று ராம நாமத்தை ஜபி" என்பதே. ரத்னாகரனால் 'ராம' என்ற வார்த்தையைச் சரியாக உச்சரிக்க முடியவில்லை. நாரதர் கேட்டார்: "என்னைக் கட்டிப் போட்டிருந்தாயே, இந்த மரத்தின் பெயர் தெரியுமா?

"தெரியுமே; மரா மரம்."

"இப்பொழுது சொல், மரா, மரா"

ரத்னாகரன் அதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்தான். மரா, மரா, ராம, ராம என்று மாறியது. விடாமல் ரத்னாகரன் ராமஜபம் செய்து கொண்டிருந்தான். அவனைச் சுற்றி ஒரு புற்று உருவாகியது. அதையும் கண்டு கொள்ளாமல்

வருஷக் கணக்கில் ரத்னாகரன் ராமஜபம் செய்து கொண்டிருக்க, அவன் தவத்தை மெச்சி பிரம்ம தேவன் ப்ரத்யக்ஷமாகி அந்தத் தவசியைப் புற்றிலிருந்து வெளியே வரச் செய்தார். புற்றிலிருந்து வந்த ரத்னாகரன் (வல்மீகம் என்றால் புற்று) ராமாயணத்தை சமஸ்கிருதத்தில் எழுதி ஆதிகவி வால்மீகி என்று பெயர் பெற்றார்.

சிங்கத்தை ஆடு அல்ல; சிங்கமே என்று சொல்வதற்கு ஒரு சிங்கம் தேவைப்பட்டது போல, ரத்னாகரன் வால்மீகியாக நாரதர் தேவைப்பட்டார். ஆனாலும் ஆட்டுக்குட்டி சிங்கமாக மாறுவதற்கில்லை. பிறந்தபோதே அது சிங்கக்குட்டி. பிறந்தவுடன் சூழல் மாறியதனால் ஆட்டுக்குட்டிகளுடன் அலைந்து திரிந்தது. தான் யார் எனப் புரிந்து கொண்டதும் பழையபடி சிங்கமாகி விட்டது. ஒரு கவிக்குரிய குணங்கள் ஏற்கெனவே ரத்னாகரனிடம் இருந்தன; வாழ்வில் திசை திரும்பியதால் அவை வெளிப்படவில்லை. தன்னைத்தானே உணர்ந்து கொண்டதனால் அவர் ஆதிகவி ஆனார்.

அதனால்தான் சாக்ரடீஸ் "உன்னையே நீ அறிவாய்" என்றார். ஆதி சங்கரர் "ஆத்ம தீபோ பவ" – உனக்கு நீயே விளக்கு என்றார்.

ஆக நம்மை நாம் சரியாகப் புரிந்து கொள்வது மிக மிக முக்கியமானது.

# 4. சுயபுத்தி

நாம் யார் என்பது நமக்கு முதலில் புரிந்திருக்க வேண்டும். நம் இலக்கு எது, நம் கருவி எது; எதை எப்படிப் பயன்படுத்தி வெற்றிபெற வேண்டும் என்பதும் நமக்குத் தெரிந்திருக்க வேண்டும். இதற்கு சரியான நபர்களின் அறிவுரையைப் பெறவேண்டும். சமயங்களில் கேளாமலேயேயும் சிலர் வலிந்து அறிவுரை தருவார்கள். அவர்களுக்கு நம் மீது அக்கறை உண்டா என்பதை நாம் முதலில் புரிந்துகொள்ள வேண்டும். நமக்கென்று சுயபுத்தி இருந்தால் சொல்வார் பேச்சையெல்லாம் கேட்டுக் கவலைப்பட வேண்டாம்; கஷ்டப்பட, நஷ்டப்பட வேண்டாம். அதற்கு ஒரு கதை:

ஒரு ஊரில் ஒரு ஏழை விவசாயி இருந்தார். வாலிபப் பருவத்தில் நன்றாக உழைத்தவர். வயதானதும் அந்த அளவுக்கு உழைக்க முடியவில்லை. நண்பர்களிடம் யோசனை கேட்டார். ஒரு நண்பர் நல்ல வெள்ளாடு வாங்கி வளர்த்தால், செலவு இல்லை, சிரமம் இல்லை. கிடைக்கும் இலை, தழைகளைத் தின்று அது வாழ்ந்து கொள்ளும்;

அடுத்தடுத்துப் பல குட்டிகள் போடும். அவற்றை விற்று லாபம் பெறலாம் என்றார். விவசாயி அடுத்த சில நாட்களில் சந்தையில் மலிவான விலைக்கு வந்த ஒரு வெள்ளாட்டை வாங்கித் தோளில் தூக்கி வீட்டுக்குச் சென்று கொண்டிருந்தார். சந்தையில் வெட்டிப்பொழுது போக்கிக் கொண்டிருந்த மூன்று நபர்கள் விவசாயியைப் பின்தொடர்ந்தார்கள்.

விவசாயி வெகுளி என்பது அவர்களுக்குப் புரியவந்தது. ஒருவன் அந்த விவசாயியைப் பார்த்துச் சொன்னான்: “என்ன ஐயா, நாயோ காவல் காக்கக்கூடியது. பின்னாலேயே ஓடி வரக்கூடியது. அதைப் போய்த் தோளில் சுமந்துகொண்டு போகிறீரே, அவ்வளவுதானா உமது புத்தி?” என்று கேட்க விவசாயி எகிறினார்:

“உமக்குத்தானய்யா கண்ணில்லை. ஆட்டைப் போய் நாய் என்கிறீரே!” என்று பதில் கொடுத்தார். இருப்பினும் மனத்தில் கொஞ்சம் குறுகுறுப்பு. தோளில் உள்ள பிராணி வெள்ளாடுதானா என்பதைப் பார்த்துக் கொண்டார். சிறிது தொலைவு சென்றதும் இரண்டாவது நபர் எதிரே வந்தார். “என்னய்யா இது, போயும், போயும் பன்றியை யாராவது தோளில் தூக்கித் திரிவார்களா?” என்று கேலி செய்தார்.

இப்பொழுது விவசாயிக்குக் கொஞ்சம் சந்தேகம் வந்தது. “என்னடா இது, ஒருவன் இதை நாய் என்கிறான், மற்றவன் பன்றி என்கிறானே,”

என்று நினைத்துக் கொஞ்சம் குழம்பிப் போனார். இருப்பினும் தோளில் ஆட்டுடன் பயணத்தைத் தொடர்ந்தார். இன்னும் சிறிது தொலைவு சென்றதும் மூன்றாவது மனிதன் எதிர்ப்பட்டான். மற்றவர்களைப் போல அவன் எடுத்த எடுப்பில் எதுவும் சொல்லவில்லை. கெக்கேபிக்கே என்று சிரித்தான். "ஏன் சிரிக்கிறீர்?" என்று விவசாயியே கேட்கும்படியாயிற்று. அந்த மனிதன் சொன்னான்.

"உம்மைப் பார்த்து யார், ஐயா, சிரிக்காமல் இருப்பார்கள்? தோளில் கழுதையைச் சுமக்கும் கோமாளியைக் கண்டால் எல்லோருக்குமேதான் சிரிப்பு வரும்," என்று சொல்லி நகர்ந்து நின்றான்.

விவசாயிக்கு இப்பொழுது சந்தேகம், குழப்பத்துடன் பயமும் சேர்ந்து கொண்டது: தோளில் இருப்பது ஒருவருக்கு நாயாகத் தெரிகிறது; மற்றவர் பன்றி என்கிறார்; மூன்றாமவர் கழுதை என்று சொல்லிச் சிரிக்கிறார். நாயோ, பன்றியோ, கழுதையோ, இது நிச்சயம் ஆடாக இருக்காது; ஏதோ பேய், பிசாசாக இருக்கக் கூடும் என்று நினைத்தார். நிச்சயம் இது நமக்கு நன்மை செய்யப் போவதில்லை என்ற முடிவுக்கு வந்தார். அத்துடன் ஆட்டைத் தலையைச் சுற்றி வீசியெறிந்தார். வெறுங்கையுடன் வீடு நோக்கி நடந்தார்.

நண்பர்கள் மூவரும் கிடைத்தவரை லாபம் என்று சொல்லி அந்த வெள்ளாட்டைத் தூக்கிச் சென்று விட்டார்கள்.

நல்ல வியாபாரம் செய்துவந்த நபர் காலப் போக்கில் ஏதாவது சில காரணங்களுக்காக ஒரு புதிய வியாபாரத்தைத் தொடங்க நேரிடலாம். அது தவறு அல்ல. எளிய வியாபாரம் என்றால் புதிய வியாபாரத்தின் நெளிவு, சுளிவுகள் பற்றிக் கவலைப்பட வேண்டாம். வெள்ளாடு தழை தின்று தானே வளர்வது போல புதிய வியாபாரமும் தழைக்கும். அந்த வியாபாரிக்கு நம்பிக்கை இருக்க வேண்டும். எதிர்ப்படுகிற யார் யாரோ ஏதேதோ சொல்கிறார்கள் என்பது பற்றிக் கவலைப்படக் கூடாது.

இந்தக் கதையில் வருவது போல சிலருக்கு உள்நோக்கம் இருக்கலாம். அதை அறிந்து கொள்ள வேண்டும். தோளில் உள்ளது ஆடுதான் என்ற நம்பிக்கை விவசாயிக்கு வராமல் போனது போல வியாபாரிக்கும் புதிய வியாபாரம் லாபம் தரும் என்ற நம்பிக்கை வரவில்லையென்றால் அந்த வியாபாரி தன் மொத்த முதலீட்டையே இழக்க வேண்டியிருக்கும்.

யார் யார் எது எது சொன்னாலும், வள்ளுவர் வழி காட்டியது போல், மெய்ப்பொருள் காண்பதே அறிவு. அதற்கு சுய புத்தி வேண்டும்.

சுய புத்தியைப் போன்றதொரு மூலதனம் வேறு எதுவும் இல்லை. இதைப் புரிந்து கொண்டால் எதிலும் லாபம் உண்டு.

## 5. அதீத சிக்கனம்

வெள்ளாட்டுக் கதை போல ஒரு செம்மறி ஆட்டுக் கதையும் சொல்கிறேன், கேளுங்கள். விதவைப் பெண்மணி ஒருத்தி செம்மறியாடு வளர்த்து வந்தாள். அதற்கு அடர்த்தியான ரோமம் இருந்தது. தோழி ஒருத்தி சொன்னாள்: "வெட்டிவிட வெட்டிவிடத்தான் ரோமம் வளரும்; அதிக ரோமம், அதிக லாபம், கம்பளி நெய்பவர்களுக்கு ரோமத்தை விற்று விடலாம்." இந்த யோசனை விதவைக்குப் பிடித்திருந்தது.

ஆட்டு ரோமம் கத்தரிப்பதற்கென்றே சில நபர்கள் இருக்கிறார்கள். அவர்களை அழைத்து ரோமம் வெட்டும் கட்டணம் பற்றி விசாரித்தார். அந்தத் தொகை சற்று அதிகமாக இருப்பதுபோலத் தோன்றியது. உண்மையில் கூலி சொற்பம்தான். இருப்பினும் அதை மிச்சப்படுத்தினால் லாபத் தொகை கூடுமே என்று யோசித்து தானே ரோமத்தைக் கத்தரிப்பது என்ற முடிவுக்கு வந்தார் விதவை – இது என்ன பிரமாதமான வேலை என்ற நினைப்பில்.

மறுநாள் கத்தரிக்கோலை எடுத்துத் தானே ஆட்டு ரோமத்தை வெட்ட ஆரம்பித்தார். பழக்க மில்லாத வேலை. ஆடும் முரண்டு பிடித்தது. கத்தரிக்கோல் ஆட்டின் உடலைக் காயப்படுத்தியது. ஆடு வேதனை தாளாமல் கத்தியது. உடனே ரோமம் வெட்டுவதை அந்தப் பெண்மணி நிறுத்திவிட்டார்.

ஆனால் காயம்பட்ட ஆட்டை மிருக வைத்தியரிடம் காட்டவில்லை. புண் தானாக ஆறிவிடும்; வைத்தியர் கட்டணம் வெட்டிச் செலவு என்று நினைத்தார். எனவே ஆட்டுக்கு எந்த வைத்தியமும் செய்யவில்லை. சீழ்பிடித்து நோயுற்ற ஆடு அடுத்த சில தினங்களில் இறந்து போனது. எதையோ சிக்கனப்படுத்தப் போய்க் கை முதலை இழந்தார் அந்தக் கைம்பெண்.

கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். ஆடு வளர்ப்பது என்றாலும் அதிலும் சில நுணுக்கங்கள் இருக்கின்றன. ரோமம் வெட்டும் கூலி சொற்பம். அதைக் கொடுக்க மனமில்லாத காரணத்தினால் அந்தப் பெண்மணி ஆட்டைக் காயப்படுத்தினாள். வைத்தியத்திற்குச் செலவழிக்க தரித்திரப்பட்டு ஆட்டை இழந்தாள்.

இதே பெண்மணி ஆடு வளர்த்ததற்கு பதில் தென்னை மரங்கள் வளர்த்திருந்தால், தேய்காய் பறிக்கும் கூலியை மிச்சப்படுத்தலாம் என்ற நினைப்பில் மரமேறியிருக்கமாட்டார். கீழே விழுந்து விட்டால் அடிபடுமோ, உயிர் போய் விடுமோ என்ற

பயம் அவரை மரமேறவிடாமல் தடுக்கும். ஆனால் கத்திரிக்கோல் கொண்டு ஆட்டு ரோமம் வெட்டுவது எளிது என்ற நினைப்பும், தரித்திர குணமும் அவளுக்கு நஷ்டத்தை ஏற்படுத்தியது.

பல வியாபாரங்களில் இதேபோன்ற சூழ் நிலைகள் உண்டு. இதற்கு கூலிக்கு ஏன் ஆள் வைத்துக் கொள்ளவேண்டும், நாமே செய்துவிட முடியாதா என்ற நினைப்பு எழக்கூடும். உரிய முறையில் செய்யும் திறமை இல்லாவிட்டால், காசு மிச்சம் என்பதற்காக மட்டும் ஒரு தொழிலதிபரோ வியாபாரியோ சில வேலைகளில் இறங்கக் கூடாது. பார்ப்பதற்குச் சிறிய வேலை என்றாலும் பழக்கப் பட்டவர்களைச் செய்யவைத்துக் கூலி கொடுப்பதே புத்திசாலித்தனம்.

இதைத்தான் ஆங்கிலத்தில் பென்னி வொய்ஸ் அண்டு பவுண்ட் ஃபூலிஷ் என்பார்கள் – அதாவது சில்லறையை மிச்சப்படுத்த நினைத்துப் பெருந் தொகைகளை இழக்கும் அறிவீனம் – இது எந்த வியாபாரத்திற்கும் ஒத்து வராத குணம்.

எவற்றை யார் யார் செய்ய வேண்டுமோ, அவற்றை அவர் அவர்களிடம் விட்டுவிட வேண்டும். ஆனால் தேவைப்படும் வெளி உதவியை ஏற்றேயாக வேண்டும். நாமே எல்லாவற்றையும் செய்வதென்பது இன்றைய நிலையில் இயலாத காரியம், குறிப்பாகத் தொழில் வர்த்தகத் துறையில்.

## 6. துரோக புத்தி

இன்னொரு கதை. இதில் ஆடுகள் உண்டு; அவற்றுடன் ஓநாயும் உண்டு. இவை மூலம் நமக்குப் பாடமும் உண்டு.

காட்டில் ஆதரவற்றுக் கிடந்த ஒரு ஓநாய்க் குட்டியை ஒரு இடையன் வீட்டுக்கு எடுத்து வந்து வளர்த்தான். குட்டி ஓநாய் வளர்ந்த பிறகு பிறரது மந்தைகளிடமிருந்து ஆட்டுக் குட்டிகளைத் திருடிக் கொண்டுவரப் பழக்கினான். அந்தக் குட்டிகளைத் தன் மந்தையுடன் சேர்த்துக் கொண்டான். இதற்குக் கைமாறாகத் திருடி வந்த ஆடுகளில் ஒவ்வொன்றை அவ்வப்போது ஓநாய்க்குத் தின்னக் கொடுப்பான்.

எத்தனை நாட்களுக்குத்தான் பிற மந்தைக் காரர்கள் ஆடுகளை இழந்துகொண்டிருப்பார்கள்? அவர்கள் தம் மந்தைகளைக் காப்பாற்ற வலுவான காவல் போட்டார்கள். ஓநாயால் ஆடுகளை திருட முடியவில்லை. எனவே ஓநாய்க்குத் தீனியும் கிடைக்க வில்லை. இடையனும் ஓநாயைச் சரிவர கவனிக்க வில்லை. வேறு எங்காவது தீனி கிடைக்குமா என்று

யோசித்த ஓநாய் காட்டில் அலைந்து திரிந்தது. எங்கும் ஒரு ஆடும் கிடைக்கவில்லை. ஆட்டு மாமிச ருசிகண்ட ஓநாய் தனக்குப் பழக்கமான இடையனின் கொட்டிலுக்கே தினம் தினம் வந்து ஆடுகளைத் தூக்கிச் சென்று தின்று வந்தது. இடையனால் அந்த ஓநாயைத் தடுக்கமுடியவில்லை.

ஒரு கட்டத்தில் இடையன் தன் மந்தையைக் கொஞ்சம் கொஞ்சமாக இழந்தான். திருட்டு ஆடுகளுடன் சொந்த ஆடுகளையும் பறிகொடுத்தான். தீட்டிய மரத்தில் கூர்பார்த்த ஓநாயே அதற்குக் காரணம் என்பது புரிய வந்தபோது அவன் மிகவும் நொந்துபோனான். காலம் கடந்து புத்தி வந்து என்ன, அவனால் இழப்பை ஈடுகட்ட முடியவில்லை.

மிகச் சாதாரணமாகத் தோன்றினாலும் இந்தக் கதையில் நிறைய உள்ளர்த்தம் உண்டு.

சிறிய கடைகளில் முதலாளிக்கு துரோகம் செய்து வெளியாரிடமிருந்து கமிஷன் தொகை பெறும் ஊழியர்கள் சிலர் உண்டு. கமிஷன் தொகை கணிசமாகச் சேர்ந்ததும் அதையே ஒரு முதலீடாக வைத்துத் தாமே தொழில் தொடங்குவார்கள். அப்பொழுது அதே கடையில் பழக்கமானவர்களை உதவிக்கு வைத்துக் கொள்வார்கள்.

காலப்போக்கில் உதவியாளர்களும் திருடித் தொழில் தொடங்கிய முதலாளியைப் போலவே தம் கைவரிசையைக் காட்டப் புதிய தொழிலும் நொடித்துவிடும். அப்பொழுது அந்த முதலாளி

ஊழியரைக் கடிந்து கொண்டால், ஓநாய்க் கதை கொஞ்சம் மாறும். வாயில்லாததனால் ஓநாய் பேச வில்லை. ஓநாய் போல் நடந்து கொண்ட மனிதன் புதிய முதலாளியைப் பார்த்துக் கேட்கக்கூடும்: “நீ மட்டும் ரொம்ப யோக்கியமோ?”

இதுபோல அரசாங்க அதிகாரிகள் ஓய்வு பெறுவதற்குச் சில காலம் முன்போ, ஓய்வுபெற்ற பின்போ அரசுத் துறையுடன் தொடர்புள்ள தனியார் நிறுவனத்தில் சேர்ந்து கொள்வார்கள். அரசுக்கு எப்படி நஷ்டம் ஏற்படுத்துவது என்பதைப் புதிய முதலாளிக்குச் சொல்லிக் கொடுப்பார்கள். சிலரைப் பொருத்தவரை ஓய்வுபெற்று வெளியேற வேண்டும் என்ற அவசியமே இல்லை – உள்ளே இருந்தபடியே வெளியேயும் சம்பளம் வாங்கிக் கொள்வார்கள்.

ஒரு வர்த்தகத் துறை நண்பரிடம் முன்பு கேட்டேன்: “தங்கள் மேனேஜர் திருவாளர்.... நாணயமாக நடந்து கொள்வதில் முன் பின்னாக இருக்கிறாரே, அது உங்களுக்குத் தெரியுமா?”

அவர் சொன்னார்: “தெரியும்; இந்த மேனேஜர் போய் இன்னொருத்தன் வந்தால் அவன் எவ்வளவு திருடுவானோ, எந்த மாதிரித் திருடுவானோ என்பது தெரியாததனால் இவனையே வைத்திருக்கிறேன்.”

ஆக, நவீன வர்த்தகத்தில் ஓநாய்களுக்கும் இடம் இருக்கிறது.



## 7. பிறப்பும் வளர்ப்பும்

திருடனிடத்திலே வளர்ந்த ஓநாய் திருடியது என்பது புதிதல்ல. வேறு எங்காவது வளர்ந்திருந் தாலும் ஓநாய் திருடியிருக்கும். அதுதான் நாய்க்கும், ஓநாய்க்கும் உள்ள வித்தியாசம். ஆனாலும் நல்லவர் சேர்க்கை சேர்ந்தவர்களுக்கு நன்மையையே தரும். அதைச் சொல்கிறது ஒரு கதை.

காட்டில் ஒரு பெண்கிளி வளர்ந்து வந்தது. அதற்கு இரண்டு குஞ்சுகள் பிறந்தன. தாய்க்கிளி வெளியே சென்ற நேரம் ஒரு வேடன் குஞ்சுகளைக் எடுத்து வந்தான். வழியிலே ஒரு குஞ்சு கீழே விழுந்து விட்டது. ஒன்றை வேடன் வளர்த்து வர, கீழே விழுந்த குஞ்சை ஒரு முனிவர் வளர்த்து வந்தார்.

ஆக, இரண்டும் வெவ்வேறு சூழ்நிலைகளில் வளர்ந்து வந்தன.

சில மாதங்கள் கழித்து அந்நாட்டு மன்னன் வேட்டையாடச் செல்லும் வழியில் வேடனின் வீட்டைத் தாண்ட வேண்டியிருந்தது. அப்பொழுது வேடன் வீட்டில் வளர்ந்து வந்த கிளி சொன்ன வார்த்தைகள்: "விடாதே, பிடி, அடி, கொல்."

மன்னன் சிறிது தூரம் சென்றதும் முனிவரின் குடில் எதிர்ப்பட்டது. மன்னனைக் கண்ட கிளி "வருக, வணக்கம், அமர்க, உண்க, மகிழ்க, என்று சொன்னது."

ஒரே மாதிரி இருந்த இரு கிளிகளின் நடத்தை வேறுபாடு பற்றி மன்னன் முனிவரிடம் கேட்க, அவரோ "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்; ஆயின் பண்பு என்பது பழக்கத்தின்பால் பட்டது" என்பதைக் கிளிக் குஞ்சுகளின் பிறப்பு வளர்ப்பு பற்றியது என்று உணர்த்தினார். இந்த நிகழ்ச்சி கண்ணதாசனின் பாடல் ஒன்றை நினைவுபடுத்துகிறது. 'இரு மலர்கள்' என்ற திரைப்படத்தில் ஒரு பாடல்:

"கடவுள் தந்த இரு மலர்கள்;
கண்மலர்ந்த பொன்மலர்கள்;
ஒன்று பாவை கூந்தலிலே;
ஒன்று பாதை ஓரத்திலே."

இப்படி இரண்டும் இடம் மாறினாலும் – தரையில் விழுந்த மலரை இறைவன் சூடிக் கொண்டான் என்பார் கவிஞர். அதுபோலவே கீழே விழுந்த கிளிக்குஞ்சு முனிவன் கையில் பட்டதனால் பண்புடன் வளர்ந்தது.

கற்கள் எல்லாம் ஒன்றுதான். ஆயினும், விக்கிரகத்திற்கு ஸ்தபதிகள் ஆராய்ந்து, ஆராய்ந்து பார்த்துக் கற்களைத் தேர்ந்தெடுப்பார்கள். அதனால் ஒரு சில கற்கள் கோயிலின் வாசற்படிகளாகி மிதிபடுகின்றன. மற்ற கற்கள் விக்கிரகங்களாகி அபிஷேகத்தையும் ஆராதனையையும் பெறுகின்றன.

மானிடப் பிறப்பும் வளர்ப்பும் அப்படியே – பாரதியும் அதைத்தான் சொன்னார் இப்படி:

"ஆங்கொரு கல்லை வாயிற்படி என்று
அமைத்தனன் சிற்பி, மற்றொன்றை
ஓங்கிய பெருமைக் கடவுளின் வடிவென்று
உயர்த்தினான்."

அதையேதான் திருவள்ளுவர்,

"தான் சிறிதாயினும் தக்கார்கை பட்டக்கால்
வான் சிறிதரப் போர்த்து விடும்" – என்றார்.

வாழ்க்கையில் வளர வேண்டிய பருவத்தில் இளைஞர்கள் சரியான இடங்களில் பணியில் அமர வேண்டும். இல்லையென்றால் அவர்களது பாதை மாறிவிடும். பண்பும் குறைந்துவிடும். சேரும் இடம் என்பது வாழ்க்கைப் பாதையையே மாற்றக்கூடியது.

பிரபல சிம்ஸன் நிறுவனத்தில் உதவியாளராகச் சேர்ந்த திரு. அனந்தராமகிருஷ்ணன் அவர்கள் பின்னர் அதன் உரிமையாளராக உயர்ந்தார். நல்ல அனுபவத்துடன் மோசடி நிதி நிறுவனங்களில் கூடுதல் சம்பளத்திற்கு ஆசைப்பட்டுப் பதவியேற்று அவமானப்பட்ட சில அதிகாரிகளும் உண்டு. அந்த நிறுவனங்களுக்கு ஏற்பட்ட கெட்ட பெயர் அவர்கள் மீதும் நிழலாகப் படியும். இன்ன இடத்தில் வேலை பார்த்தோம் என்பதைச் சொல்லிக் கொள்வதே அவமானம் என்றாகிவிடும். சேராத இடத்தில் சேர்ப வர்களின் கதி அதுவே.

## 8. நம்பிக்கை துரோகம்

பிறப்பும் நல்லவிதமான வளர்ப்பும் ஒருவரைப் பெருமைப்படுத்தும் என்பது உண்மையானாலும், சேரும் இடம் சிறப்பளிக்கும் என்பதும் அதே போன்று உண்மையாகிறது, சேரும் நபரிடம் சிறப்பும், வாய்மையும் இல்லையென்றால் சேரும் இடம் எந்த நன்மையையும் செய்துவிடாது. அதை உணர்த்துகிறது ஒரு பழங்கதை.

இரவு பகல் பாராமல் குடித்தே பொழுதைக் கழித்து வந்தான் வாட்டசாட்டமான ஒரு குயவன். ஒருநாள் போதையின் உச்சக்கட்டத்தில் தான் செய்து வைத்திருந்த விற்பனைக்கான பானைகள் மீது விழுந்துவிட்டான். உடைந்த பானைகளில் ஒன்று அவன் நெற்றியில் நீளமான, ஆழமான காயத்தை ஏற்படுத்தியது. காயம் ஆறினாலும் தழும்பு அகல வில்லை. செய்துவைத்த பானைகளும் உடைந்து போய், புதிய பானைகளைச் செய்தும் அவற்றை விற்க முடியாமல் தவித்த குயவன் தன் வேலையை விட்டான்; சொந்த ஊரையும் விட்டு விட்டான்.

திக்குத் தெரியாமல் சென்று கொண்டிருந்த குயவனுக்கு ஒரு அயல் நாட்டைப் பார்த்ததும் புதிய யோசனை பிறந்தது. தன் கம்பீரமான தோற்றத்தை முதலீடாக்கிப் பொய் சொல்லி வேலை தேடிப் பிழைக்க நினைத்தான். மன்னனைப் பார்த்து தான் ஒரு போர் வீரனாக வாழ்க்கையைக் கழித்திருப்ப தாகவும் விழுப் புண்கள் பெற்றதாகச் சொல்லி, நெற்றித் தழும்பைக் காட்டினான். நிராயுதபாணியாக எதிரியை மடக்கிய போது பட்ட புண் அது என்றான். மன்னனும் அதை நம்பி அவனைத் தன் படைத் தளபதி ஆக்கினான்.

அவனுடைய நல்ல காலம் அப்போது அந்த நாடு போரிடவேண்டிய நிலையில் இல்லை. தளபதியாக மாறிய அந்தக் குயவன் நன்றாகச் சாப்பிட்டு உடம்பைத் தேற்றிக் கொண்டு வந்தான். திடீரென்று அந்த நாடு அயல் நாட்டுடன் போரிட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. மன்னன் தளபதியைப் போருக்குத் தயாராகும்படி உத்தர விட்டான். தன் திண்டாட்டத்தை வாய் சாதுர்யத் தினால் சமாளித்துக் கொண்டு, “மன்னரே, கவலைப் படாதீர்கள்; எதிரிகளை ஓட ஓட விரட்டுவேன்,” என்றான்.

தனியே பாசறைக்கு வந்ததும் இனி என்ன செய்வது என்ற நினைப்பில் திகைத்துப் போனான். ஆயினும் இயல்பான குயுக்தி அவனைவிட்டுப் போகவில்லை. புதிய திட்டம் வகுத்தான். அதன்படி எதிரிப் படைகள் முகாமில் இருந்த மன்னனைத்

தனித்துச் சந்தித்தான். "நான் உங்கள் எதிரி நாட்டுத் தளபதி. இருந்தாலும், அந்த மன்னன் என் விரோதி. எனக்குப் புகலிடம் கொடுத்தீர்கள் என்றால் அந்த மன்னனின் படை பற்றிய ரகசியம் அனைத்தையும் சொல்லிவிடுவேன். அப்புறம் நீங்கள் ஜெயிப்பது எளிது," என்றான். எப்படியோ போரிட வேண்டிய அவசியமில்லாமல் தப்பித்தால் போதும் என்பதே அவன் நினைப்பு.

பொய்த் தளபதியை உண்மையான தளபதி என்று நினைத்துக் கொண்டாலும் எதிரி நாட்டு மன்னவன் புத்திசாலி, நேர்மையானவன். அவன் உடனே முடிவெடுத்தான். "போர் தொடங்கும் முன்பே மன்னனைக் கைவிடும் நீ ஒரு துரோகி. எதிரிகளை மன்னிக்கலாம்; துரோகிகளை அல்ல," என்று சொல்லியபடியே தன் உடைவாளை உருவி அந்தப் பொய்த் தளபதியின் தலையைத் துண்டித்தான்.

பழங்காலக் கதையாகத் தோன்றினாலும், ராஜா, ராணி காலத்தில் புனையப்பட்டிருந்தாலும், இது இன்றைக்கும் பொருந்திவரக் கூடியது. அன்றும் இன்றும், கிழக்கிலும் மேற்கிலும் துரோகிகள் மன்னிக்கப்படுவதில்லை. மன்னிப்பதில்லை என்ற முடிவை எடுப்பவனே மன்னன்! ஏமாந்து போகக் கூடியவர்கள் சாதாரண மனிதர்கள்.

நெற்றித்தழும்பையும், சாதுர்யமான பேச்சையும் கேட்ட ஒரு மன்னன் குயவனைத் தளபதியாக்கு

கிறான். இன்னொரு மன்னனோ படை ரகசியங்களை எதிரி நாட்டுத் தளபதி சொல்ல முன்வந்தும் எதையும் கேட்டுக் கொள்ளாமல் கொன்று விடுகிறான். பின்னவனே மன்னவன். அவன் முடிவே சரி.

அப்படி ஒரு முடிவு எடுக்க முடியாமல் தவித்த நவீன நிர்வாகி ஒருவரைப் பற்றி கென்னத் ப்ளண் சார்டு, நார்மன் வின்செண்ட் பீல் என்ற அமெரிக்க நிர்வாகிகள் "அறவியல் நிர்வாக முறையின் ஆற்றல்" என்ற நூலில் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

இது பற்றி நானும் 'உறவு காக்கும் வணிகம்' என்ற என் முந்திய நூலில் குறிப்பிட்டிருக்கிறேன். பொருத்தம் கருதி அந்த நிகழ்ச்சியை இங்கே மீண்டும் சொல்ல விரும்புகிறேன்.

ஒரு பெரிய நிறுவனத்தின் தலைமை நிர்வாகி, தனக்கு அடுத்த நிலையில் இருந்த விற்பனைத் துறை அதிகாரியை வெளிநாட்டில் உள்ள கிளைக்கு முழுப் பொறுப்பு ஏற்க அனுப்ப விரும்பினார். அது ஒரு உயர் பதவி. அதனால் அந்த அதிகாரிக்குக் கூடுதல் வசதிகள், பொறுப்புகள், சலுகைகள் உண்டு. அவரது குழந்தைகள் வெளிநாட்டில் கல்வி கற்கும் வாய்ப்பும் உண்டு என்பதனால் அது மறு தலைமுறைக்கும் அதிர்ஷ்டம் என்றே சொல்ல வேண்டும். அதே நேரம் தனக்குப்பிறகு பொறுப்பேற்க வேண்டியவரை நியமிக்கும் பணியும் அவருக்குக் கொடுக்கப்பட்டது. புதியவரை நியமித்தபின் அவர் வெளிநாடு செல்ல

முடியும் என்ற நிலைமை. எனவே அவர் விரைந்து செயல்பட வேண்டியதாயிற்று. புதிய பதவிக்கு மனுக்கள் கோரி விளம்பரம் கொடுத்தார். வந்திருந்த மனுக்களை ஆராய்ந்தார். இரண்டு சுற்று நேர் காணல் தேர்வுகள் நடத்தினார். இரண்டாம் சுற்றில் ஒரு இளைஞனைத் தேர்ந்தெடுத்தார். அவர் போட்டி நிறுவனத்தில் பணிபுரிபவர்.

தொழில் துறையில் போட்டி நிறுவனங்களி லிருந்து ஆட்களைத் தேர்வு செய்வது இயல்பானது. சில சமயங்களில் தவிர்க்க முடியாததும்கூட. எனவே அந்த இளைஞரைத் தேர்வு செய்த அதிகாரி, பணிப் பொறுப்பு, சம்பளம், சலுகைகள் பற்றிப் பேச்சுக் கொடுத்தார்.

அந்த நேரத்தில் இளைஞர் தன் கைப் பையிலிருந்து ஒரு சிறிய கம்ப்யூட்டர் ஃப்ளாப்பியை எடுத்துக் காண்பித்து, "நான் இப்பொழுது வேலை பார்க்கும் நிறுவனத்தின் எல்லா வர்த்தக ரகசியங் களும் இதில் பதியப்பட்டுள்ளன. எனக்கு வேலை கொடுத்தால், இந்த ரகசியங்கள் இனி உங்கள் வசம். பிறகு உங்கள் நிறுவனமே இந்தத் துறையில் முதலிடம் பெறும்," என்றார்.

அந்த இளைஞருக்கு நியமன உத்தரவு வழங்க முடிவு செய்திருந்த அதிகாரி இளைஞரின் போக்கு குறித்துக் கொஞ்சம் குழம்பிப் போனார். போட்டி நிறுவனத்தின் ரகசியங்கள் வர்த்தக முறையில் உதவக் கூடியவை. ஆனாலும் ஏதோ ஒன்று அந்த

அதிகாரியைத் தடுமாறச் செய்தது. தம் மனோ நிலையைக் காட்டிக் கொள்ளாது அந்த இளைஞரை மறு வாரம் சந்திக்கும்படிச் சொன்னார். தன் முடிவை ஒத்தி வைத்தார்.

விவரங்களைச் சொல்லி அந்த இளைஞனைத் தான் ஏற்கத் தயங்கும் உண்மையை அந்த அதிகாரி தலைமை நிர்வாகியிடம் தெரிவித்தார். தலைமை நிர்வாகியோ "பழம் நழுவிப் பாலில் விழுந்தது. அந்த இளைஞரைப் பதவியில் அமர்த்துங்கள். போட்டி நிறுவன ரகசியங்கள் அடங்கிய ஃப்ளாப்பியை வாங்கி அனுப்புங்கள்," என்றார்.

அதை அப்படியே செய்துவிட்டால் அதிகாரி உடனே வெளிநாடு சென்று உயர் பொறுப்பை ஏற்கலாம். இருப்பினும் அவருக்குக் குழப்பம் நீங்கவில்லை.

தன் செயலாளரை அழைத்து அவருடன் ஆலோசித்தார். செயலாளரோ, "இதில் என்ன தயக்கம்; தலைமை நிர்வாகி சொல்வதைக் கேட்க வேண்டியதுதானே," என்றார். எப்பொழுதும் உயர் அதிகாரி சொன்னதைக் கேட்டுப் பழகியவர் அவர். அப்படியும் நியமனம் செய்யும் அதிகாரிக்கு மனம் தெளியவில்லை.

மேலும் இரண்டு மூன்று நாட்களும் குழம்பித் தவித்தார். பிறகு தன் மனைவியிடம் சஞ்சலத்தைப் பகிர்ந்து கொண்டார். மனைவியோ எடுத்த

எடுப்பில், "அந்த நபர் வேண்டாம்," என்று சொல்லி விட்டார். ஏன் என்று கேட்க, மனைவி சொன்னார் வெட்டு ஒன்று துண்டு இரண்டாக: "இப்பொழுது பணிபுரியும் நிறுவன ரகசியங்களை அவர் உங்களுக்குத் தருவது லாபகரமானது என்று நீங்கள் நினைக்கலாம். அங்கிருந்து இன்று அவர் உங்களிடம் வருவது போலவே, நாளை மறுபடியும் உங்களிட மிருந்து வேறு இடப்பணிக்காக வெளியேறலாம். அப்பொழுது அவர் உங்கள் நிறுவன ரகசியங்களை வேறு நிறுவனத்திற்குக் கடத்தலாம் அல்லவா?"

தன்னைத் தடுத்தது எது, தடுமாறச் செய்தது எது என்று அந்த அதிகாரிக்கு அப்பொழுதுதான் புரிந்தது. புதிய பொறுப்பைத் தாமதமாக ஏற்றாலும் பரவாயில்லை – தகுதியான நபரைத் தன் இடத்தில் அமர்த்துவதுதான் நல்லது என்ற முடிவுக்கு வந்தார். தகுதி என்று அவர் நினைத்தது திறமை மட்டுமல்ல, நேர்மையும் கூட.

அவர் அந்த முடிவுக்கு வர ஏன் இவ்வளவு தயங்கினார்? இளைஞரின் திறமை அவரைக் கவர்ந்ததால் பணி கொடுக்க முன்வந்தார். நாணயக் குறைவு பற்றித் தெரிய வந்ததும் பணியில் அமர்த்தத் தயங்கினார். தயங்காமல் செயல்பட்டிருந்தால், அதாவது அந்த இளைஞரைப் பணியில் அமர்த்தி யிருந்தால், முதலில் தயங்கினாலும் தலைமை நிர்வாகியின் பேச்சைக் கேட்டு இளைஞருக்கு வேலை வாய்ப்பு கொடுத்திருந்தால் அவர் தவறு

செய்திருப்பார். தயங்குவது தவறல்ல. தயக்கத்திற்குப் பிறகு மிகவும் சரியான முடிவை எடுத்ததனால் பாராட்டுக்குரியவர் ஆகிறார்.

ஏன் இந்த இளைஞனே இருக்கட்டும் என்றார் தலைமை நிர்வாகி?

பல நிர்வாகிகள் ஒருவரின் திறமைக்குத் தரும் மதிப்பினை அவரது நேர்மைக்குத் தருவதில்லை. இது ஒரு சோகம் தோய்ந்த உண்மை. ஆனால் நான் முன்பு சொன்ன கதையில் மன்னன் நேர்மையற்ற தளபதிக்கு உடனே சிரச்சேத தண்டனையைக் கொடுத்தானே, அது எப்படி? அன்று மன்னர்கள் நேர்மைக்கே முதலிடம் கொடுத்தார்கள்.

எல்லாம் சரி, மிகவும் தயங்கிய அதிகாரிக்கு இளைஞனின் நியமனம் பற்றி அவரது மனைவி சரியான யோசனை கொடுத்தது எப்படி? அது எப்படி சாத்யமாயிற்று?

அதற்கு நேர்மை மீது நாட்டம் என்பது மட்டும் காரணமல்ல. ஒரு தற்காப்பே. வேலைக்காரர்கள் உள்வீட்டுச் செய்தியையெல்லாம் ஊரம்பலத்தே உரைக்கக் கூடியவர்கள் என்பது பெண்களுக்கு அத்துப்படியான அனுபவ ஞானம். ஆண்களுக்கு அது வாய்ப்பதில்லை. எனவே அதில் வியப்புக்கு இடமில்லை.

# 9. ஆடும் கழுதையும்

பணிக்கு வருவதற்கு முன்பே சில ஊழியர்கள் தம் நேர்மையின்மையை நேரடியாகவோ மறைமுக மாகவோ வெளிப்படுத்துவது இருக்கட்டும். வந்த பின்பும் தம் குணக்கேடுகள் மூலம் நிறுவனத்தின் பிற ஊழியர்களைக் கெடுக்கும் கறுப்பு ஆடுகள் பல நிறுவனங்களில் உண்டு. இப்படிப்பட்டவர்கள் அந்தக் காலத்திலும் இருந்திருக்கிறார்கள். இதை மனிதர்களை அல்லாமல் மிருகங்களை உதாரணங் களாகக் காட்டி முன்னோர்கள் கதை சொல்லியிருக் கிறார்கள். அப்படி ஒரு கதை:

ஒரு சலவைத் தொழிலாளி கழுதையுடன் சேர்த்து ஒரு வெள்ளாட்டையும் வளர்த்து வந்தார். கழுதை சலவைத் தொழிலில் தினமும் உதவி வந்தது. எனவே அதற்குத் தனி கவனிப்பு இருந்தது. சலவைத் தொழிலாளி ஆட்டையும் கவனிக்காமல் இல்லை. ஆனாலும் தன் எஜமானன் கழுதைக்கு அதிக அளவு சலுகை தருகிறார் என்று ஆடு நினைத்தது. அதற்காக ஆடு எஜமானனிடம் கோபித்துக் கொள்ள

முடியாதே. ஆனாலும் பொறாமை கொண்ட ஆடு அந்தக் கழுதைக்குக் கெட்ட பெயர் வாங்கித்தர நினைத்தது. அதற்காகக் கழுதையிடம் நைச்சியமாகப் பேசியது.

"உம்மை நினைத்தால் எனக்குப் பரிதாபமாக இருக்கிறது. நீரும் எஜமானனுக்கு எவ்வளவோ உழைக்கிறீர். அதை எஜமானன் உணர்ந்து கொண்ட தாகவே தெரியவில்லை. மேலும் மேலும் உம் மீது சுமையைத் திணிக்கிறார். உமக்கு ஓய்வு நேரம் இருப்பதில்லை. உழைத்து உழைத்தே களைத்துப் போய் விட்டீர்."

சுய புத்தியில்லாத கழுதை ஆட்டின் பேச்சினை அப்படியே நம்பியது. எஜமானன் தன்னைக் கொடுமைப் படுத்துவதாக நினைத்துக் கொண்டது. அந்தக் கொடுமையிலிருந்து விடுபடவேண்டும் என்றும் முடிவு செய்தது. அதற்கு என்ன வழி என்று ஆட்டிடம் கேட்டது, ஆடு இப்படி உபதேசித்தது.

"நாளை முதல் ஒழுங்காக வேலை செய்யாதே. உடல் நலம் சரியில்லை என்பது போல் படுத்துக் கொள். ஏற்றப்படும் சுமைகளைக் கீழே தள்ளிவிடு. பிறகு எஜமானன் உனக்குக் குறைவாகவே வேலை தருவான். அத்துடன் உன் உடல்நலம் தேற மிகவும் சத்தான உணவும் தருவான்."

கழுதையும் அப்படியே நடிக்க ஆரம்பித்தது. "இனி எஜமானன் கழுதையைத் துரத்தி விடுவான்.

தான் அவன் அன்பையும் கவனிப்பையும் முழுமை யாகப் பெறமுடியும்," என்று நினைத்தது ஆடு.

கழுதைக்கு உடல் நலம் கெட்டு விட்டது என்று நம்பிய சலவைத் தொழிலாளி அதை ஒரு மிருக வைத்தியரிடம் அழைத்துப் போனார். கழுதையை நன்கு சோதித்துப் பார்த்த வைத்தியர் அது நலமாகவே இருப்பதை உணர்ந்து கொண்டார். இருப்பினும் கழுதை நன்றாகத்தான் இருக்கிறது என்ற உண்மையைச் சொல்வதனால் தனக்கென்ன லாபம், ஏதோ வைத்தியம் செய்வதுபோல் நடித்தால் சலவைத் தொழிலாளியிடமிருந்து பணம் கறக்கலாம் என்று திட்டமிட்டார். சலவைத் தொழிலாளியுடன் வந்த ஆடும் வைத்தியரின் கவனத்திலிருந்து தப்ப வில்லை. ஏதேதோ யோசித்துப் பார்த்த வைத்தியர் சலவைத் தொழிலாளியிடம் சொன்னார். "ஐயா, கழுதையின் உடல்நிலை மோசமாக பாதிக்கப் பட்டிருக்கிறது. அப்படியே விட்டுவிட்டால் ஆபத்து."

பயந்துபோன சலவைத் தொழிலாளி, என்ன வைத்தியம் செய்தாவது கழுதையைக் காப்பாற்றியாக வேண்டும் என்று சொல்ல, வைத்தியர் ஆறுதல் சொன்னார்: "கவலைப்படாதீர்கள்; இதை குணப் படுத்தி விடலாம். ஒரு லேகியம் தயார் செய்ய வேண்டும். அதற்கு ஆட்டு இறைச்சியும் மருந்துகள் வாங்கக் கொஞ்சம் பணமும் தேவை. லேகியம் சாப்பிட்டால் உங்கள் கழுதைக்குக் குதிரையின் சக்தி வந்து விடும்."

சலவைத் தொழிலாளி யோசித்துப் பார்த்தார். இன்றில்லாவிட்டால் என்றாவது ஒரு நாள் இந்த ஆட்டை அடித்துக் கறி சமைக்கப் போகிறோம். ஆக, கழுதை குணமாக இப்பொழுதே ஆட்டை இழப்பதே புத்திசாலித்தனம் என்று நினைத்து வைத்தியரிடம் ஆட்டை ஒப்படைத்து விட்டு மருந்துப் பொருட் களுக்காக நூறு ரூபாய் கொடுத்துவிட்டுச் சென்றார்.

மருத்துவர் மிகுந்த மகிழ்ச்சியுடன் ஆட்டை அடித்துக் கறி சமைத்துச் சாப்பிட்டார். பெயருக்கு ஏதோ ஒரு லேகியத்தைத் தயாரித்து சலவைத் தொழிலாளியிடம் கொடுத்தார்.

ஒழுங்காக வேலை செய்து வந்த கழுதையைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்கிய ஆடு தன் கேடான திட்டத்திற்குத் தானே இரையாகிப் போனது.

நிறுவனங்களிலும் இப்படி நடப்பது உண்டு. செய்துவரும் வேலை பிடிக்கவில்லையென்றால் விட்டு விடுவோம் என்று பலர் நினைப்பார்கள். சிலர் அப்படி நினைப்பதில்லை. ஏனென்றால் எங்கு சென்றாலும் அவர்களால் ஒழுங்காக வேலை செய்யமுடியாது. ஆகவே, அவர்களுக்குப் போக்கிடம் கிடையாது. சில நிறுவனங்களில் அவர்கள் எப்படி என்பது தெரிய வருவதில்லை. பல நிறுவனங்களில் அவர்களை வெளியேற்றுவதில் உள்ள சங்கடங்கள் காரணமாகச் சகித்துக் கொள்ளப்படுகிறார்கள்.

மேற்படி நபர் உள்ளே இருந்தால் ஆபத்து அதிகமா, வெளியே இருந்தால் ஆபத்து அதிகமா

என்பதைச் சிந்தித்துப் பார்த்து உள்ளேயே இருந்து விட்டுப்போகட்டும் என்று சில சமயம் நிர்வாகம் முடிவு எடுப்பதும் உண்டு. அப்படி நிறுவனங்களில் தங்கிவிடுவர்களில் பலர் கறுப்பு ஆடுகளாக மாறி விடுகிறார்கள். தமக்குப் படியளக்கும் நிறுவனங்கள் என்றுகூட நினைத்துப் பாராமல் நிர்வாகத்தினருக்கு அவர்கள் துரோகம் செய்கிறார்கள். நிறுவனத்தின் கட்டுக்கோப்பைக் குலைக்கிறார்கள். நேரடியாகவும் மறைமுகமாகவும் ஒழுங்கீனத்தை வளர்க்கிறார்கள்.

மேலும் இழப்பைத் தாங்க முடியாது என்ற நிலையை நிர்வாகம் எட்டும்பொழுது அவர்கள் எப்படியாவது வெளியேற்றப்படுகிறார்கள். அதற்குள் நிறுவனம் பெருமளவு பண நஷ்டத்தையும் ஊழியர்களுக்கிடையே ஒழுக்கக் கேட்டையும் சந்தித்து விடுகிறது. இந்தப் போக்கில் சில நல்ல ஊழியர்களும் கெட்டுப் போய்விடுகிறார்கள்.

“திருடனாய்ப் பார்த்துத் திருந்தாவிட்டால் திருட்டை ஒழிக்க முடியாது,” என்று பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடியது போல கறுப்பு ஆடு களைத் திருத்துவது கடினம். ஆனால் கழுதைகளைத் திருத்தலாம். அதற்காகத்தான் நிறுவனங்கள் பயிற்சி வகுப்புகளை அவ்வப்பொழுது நடத்தி வருகின்றன. அவை மேல்தட்டுடன் மட்டும் நின்று விடாது அடித் தட்டிற்கும் வரவேண்டும், அவரவர் தாய்மொழியில்!



ஃ ❦ ஃ

## 10. மன்னவனே ஆனாலும்

கழுதையின் புத்தியைக் கெடுத்த ஆடு ஒரு புறம் இருக்கட்டும். ஆடு தன் திட்டத்தைத் தொடரக் காரணம் கெட்டுப் போன கழுதைக்கு சுயபுத்தி இல்லை என்பதே.

உரிய பயிற்சி வகுப்புகள் கழுதைகள் கெட்டுப் போகாதபடி வழிகாட்ட உதவும். அதேநேரம் கறுப்பு ஆடுகள் பெரும்பாலும் தம் தவறுகளை உணர்வ தில்லை என்பதுதான் வாழ்விலும் வணிகத்திலும் கசப்பானதொரு உண்மை.

தம் குறைகளை அறிந்து கொள்பவர்கள் திருத்திக் கொள்கிறார்கள். அவர்கள் தாழ்வதில்லை. பலருக்குப் பிறர் குறைகள் தெரியும் அளவுக்குத் தம் குறைகள் தெரியவருவதில்லை.

அதற்கு ஒரு வேடிக்கையான கதை:

ஒரு நாட்டில் மன்னனும் பிரதான மந்திரியும் நண்பர்களாக இருந்து வந்தார்கள். இருவருமே தம் மனைவியருக்கு அடங்கிப் போனவர்கள். கணவன்

மனைவிக்கு இடையே அடிக்கடி ஊடல் வரும். எப்பொழுதும் விட்டுக் கொடுப்பவர் கணவரே. மன்னன், மந்திரி இருவர் வீட்டிலும் அப்படித்தான்.

மந்திரிக்கும், அவர் மனைவிக்கும் ஒருநாள் கடுமையான சண்டை. மந்திரி சொன்னார்: "நமக்குள் எதற்கு விவகாரம்? இது ஒன்றுமில்லாத சமாச்சாரம். இதற்கு நாம் இப்படிச் சண்டை போட்டுக் கொள்ள வேண்டாம். நான் என்ன செய்தால் நீ சமாதானம் ஆவாய் என்பதைச் சொல், செய்கிறேன்."

தயங்காமல் சொன்னாள் மனைவி: "தலையை மொட்டையடித்துக் கொண்டு என் காலில் விழ வேண்டும்," வேறு வழியில்லை. மந்திரி அப்படியே செய்தார்.

மறுநாள் மந்திரியைப் பார்த்த மன்னர், "காரண காரியம் இல்லாமல், நாளும் கிழமையும் இல்லாமல் மொட்டையடித்துக் கொண்டு வந்து நிற்கிறீரே," என்று கிண்டல் செய்தார்.

மந்திரி வீட்டில் என்ன நடந்திருக்கிறது என்பது மன்னனுக்குத் தெரியவந்துவிட்டதனால் அதை அவர் சொல்லாமல் சொல்லிக் காட்டினார். தன் வீட்டில் நடந்தது என்ன என்பதை மன்னர் தெரிந்து கொண்டுவிட்டார் என்பதைப் புரிந்து கொண்ட மந்திரி வெகு நிதானமாக பதில் சொன்னார்:

"அது சரி, சமயங்களில் மனிதர்கள்கூட குதிரை மாதிரிக் கடிவாளத்தை வாயில் மாட்டிக் கொண்டு

மனிதரை முதுகிலே சுமந்துகொண்டு குதிரை மாதிரி கனைத்து ஓடவும் வேண்டியிருக்கிறது."

இப்பொழுது தன் வீட்டில் என்ன நடந்ததை மந்திரி தெரிந்து கொண்டுவிட்டார் என்பதை மன்னர் புரிந்து கொண்டார்.

மன்னரின் அந்தப்புரத்தில் அப்படி என்ன நடந்தது? வேறென்ன? மகாராஜாவுக்கும், மகா ராணிக்கும் ஊடல், சமாதானத்திற்குக் கெஞ்சியவர் வழக்கம்போல் மன்னர்தான்.

"நான் என்னதான் செய்யவேண்டுமென்று சொல் – அப்படியே செய்கிறேன்" என்று மன்னர் மண்டியிட்டார்.

அதைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்ட மகாராணி, "நீர் என்னை முதுகில் சுமந்து கொண்டு, வாயில் கடிவாளத்தைக் கவ்விக் கொண்டு குதிரை மாதிரிக் கனைத்துக் கொண்டு, அந்தப்புரத்தைச் சுற்றி மூன்று முறை ஓடிவர வேண்டும்."

ராணிக்காக மன்னர் குதிரையாகிப் போனார்.

என்னதான் அந்தப்புர விஷயம் என்றாலும் உடனே வெளிவந்து விட்டது. மந்திரியின் காதுக்கும் சென்றுவிட்டது. அது மன்னருக்கும் புரிந்துவிட்டது. குட்டு வெளிப்பட்டுவிட்ட போதிலும் இருவருமே அதைக் காட்டிக் கொள்ளவில்லை. அந்தவிதமான நடத்தைக்குப் பெயர்தான் இங்கிதம்.

இந்தக் கதையை இன்றைய வர்த்தகவியல் வாழ்வியலுடன் கொஞ்சம் பொருத்திப் பார்ப்போம்.

மன்னரும், மந்திரியும் நெருக்கமாகவே இருந்தாக வேண்டும் – நிறுவனங்களின் சேர்மன், மேனேஜிங் டைரக்டர் போல. ஒருவர் குறை ஒருவருக்குத் தெரிய வரும்பொழுதிலும் அதை நயமாகக் காட்டிக் கொண்டால் அவர்கள் நட்புக்குப் பங்கம் வராது.

அதுபோல வீட்டினுள் உறவு என்பது விட்டுக் கொடுப்பது – கணவன் மனைவி, ராஜா, ராணியாக இருந்தாலும் உறவைச் சீர் செய்து கொள்வதுதான் லாபகரமானது; முறித்துக் கொள்வது அல்ல.

வியாபாரப் பங்காளிகளிடையேயும் இந்த மனப்பான்மை இருந்தால்தான் வியாபாரமும் நட்பும் உறவும் நிலைக்கும். குறைகளைப் பெரிதுபடுத்த ஆரம்பித்தால் வாழ்க்கை, வணிகம் இரண்டுமே பாழாகி விடும்.

துர்குணங்களுக்கு மிருகங்களை உதாரணங் களாகக் காட்டிக் கதை எழுதிய நம் முன்னோர்கள் நற்குணங்களுக்கு மன்னனையும், மந்திரியையும் கதாபாத்திரங்களாக்கி இருக்கிறார்கள் என்பது இங்கே குறிப்பிடத்தக்கது.



# 11. வாக்கினிலே இனிமை

எதை யாரிடம் சொல்வதென்றாலும் இங்கிதம் தேவை. இதை நயம்பட உரை என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். வர்த்தக நிறுவனங்களில் உள்ளவர்களுக்கு இந்த குணம் கண்டிப்பாக இருக்க வேண்டும். ஒரே விஷயத்தை எப்படிச் சொல்வது நல்லது என்பதற்கு இரண்டு கதைகளை சொல்ல விரும்புகிறேன். இரண்டுமே ஒரு கதையின் இருவேறு வெளிப்பாடுகள். முதலில் ஒரு ஜென் கதை.

ஜப்பானியர்களிடம் ஒரு வழக்கம் உண்டு. மத குருமார்களிடமிருந்து ஏதாவது ஒரு அமரவாசகம் எழுதி வாங்கி வைத்துக் கொள்வார்கள். அதைத் தம் வழிகாட்டி உபதேசமாக நினைத்துச் செயல் படுவார்கள். அந்த வகையில் ஒரு பணக்காரர் மத குருவிடம் ஒரு அமரவாசகம் எழுதித்தரும்படிக் கேட்டார்: மதகுரு எழுதிக் கொடுத்தார் இப்படி:

"தந்தை இறப்பார் மகன் இறப்பான்
அப்புறம் பேரன் இறப்பான்."

பணக்காரருக்கு செங்காய் என்ற அந்த மதகுரு எழுதிய வாசகத்தைக் கண்டு கடும் கோபம் வந்தது. ஆனால் ஞானி செங்காய் சிரித்தார். ஞானிகள் அந்த வாசகம் குறித்துச் சிரிக்கலாம். பாமரர்களுக்குப் பொருள் விளங்குவது கொஞ்சம் கஷ்டம். ஏன்?

அதைத் தெரிந்து கொள்ள, நீங்கள் இந்தக் கதையின் வேறு கோணத்தைப் பார்க்கலாம். மன்னன் ஓரிரவு படுபயங்கரமான கனவு கண்டான் – அதாவது தன் பற்கள் எல்லாம் விழுந்து விடுவது போல. அதிர்ந்து போன மன்னன் அறிஞர்களில் மூத்தவரை அழைத்து அந்தக் கனவுக்கு விளக்கம் கேட்டான்.

அறிஞர் சொன்னார்: "நீங்கள் இறப்பதற்கு முன்பே உங்கள் பிள்ளைகளும் உறவினர்களும் இறந்து விடுவார்கள்." மன்னனுக்கு இதைக் கேட்டதும் கோபம் பொங்கியது. அந்த அறிஞனைச் சிறையில் அடைக்கும்படி ஆணையிட்டான்.

மறுநாள் வெளியூரிலிருந்து வேறு ஒரு அறிஞனை அழைத்துவரச் செய்து கனவின் பலன் என்னவென்று கேட்டான். வெளியூர் அறிஞர் சொன்னார்: "உங்களுக்கு பாதகம் எதுவும் இல்லை, அரசே. உங்கள் பிள்ளைகள், உறவினர்களைவிட நீங்கள் அதிக காலம் வாழ்வீர்கள்."

பதிலைக் கேட்டு மனம் மகிழ்ந்த மன்னன் அந்த அறிஞனுக்கு ஏராளமான பரிசுகள் தந்து தன் அரசவையிலும் இடம் கொடுத்தான். இரண்டாம்

அறிஞர் ஏன் இப்படி பதில் சொன்னார்? முதல் அறிஞர் பெற்ற சிறை தண்டனை பற்றித் தெரிந்து கொண்டதனால்தான் அவர் இப்படிச் சொன்னார். பார்க்கப்போனால் இரண்டு பதில்களும் ஒரே விஷயத்தையே சொல்கின்றன. நான்கும், மூன்றும் ஏழு; மூன்றும், நான்கும் ஏழு. விடை ஒன்றுதான்; ஆனால் சொன்ன முறையின் தொடக்கம் வேறு.

இப்பொழுது ஜென் கதைக்குத் திரும்பி வருவோம். குரு செங்காய் என்ன சொன்னார்?

*தந்தை இறப்பார் மகன் இறப்பான்*
*அப்புறம் பேரன் இறப்பான்.*

இதைப் புரிந்து கொள்ளாத பணக்காரரிடம் குரு சொன்னார்: "நீங்கள் நினைப்பது போல இது அமங்கல வாசகமன்று. நீங்கள் உயிருடன் இருக்கும் பொழுது உங்கள் மகன் இறந்தால் சோகம் எப்படி இருக்கும்? நீங்கள் இருவரும் உயிருடன் இருக்கும் பொழுது உங்கள் பேரன் இறந்தால் சோகம் எப்படி இருக்கும்? மாறாக, முதலில் தந்தை, பிறகு மகன், அப்புறம் பேரன் என்று காலக்கிரமத்தில் இறந்தால் உங்களுக்கோ, உங்கள் மகனுக்கோ புத்திர சோகம் வரக்கூடாது என்றல்லவா சொல்லியிருக்கிறேன்." அப்பொழுதுதான் அது ஒரு மங்களவாசகம் என்பதை அந்தப் பணக்காரர் புரிந்து கொண்டார்.

இது தொடர்பாக ஸ்ரீராமகிருஷ்ண உபதேச மஞ்சரியிலிருந்து ஒரு குறிப்பு: "ராவணன் மடிந்த பிறகு அவனது பிரேதத்தை லக்ஷ்மணன் ஆவலோடு

சென்று பார்த்தான். ஒவ்வொரு எலும்பிலும் துளைகள் நிறைந்திருப்பதைக் கண்டு வியந்து ராம பாணத்தின் சிறப்பை ராமனிடம் எடுத்துச் சொன்னான். அப்பொழுது ராமபிரான் சொன்னார்: "நம் பாணம் எலும்புகளைத் துளைக்கவில்லை, அவனது புத்திரசோகம் எலும்புகளையும் விட்டு வைக்கவில்லை." இதை ஒரு உதாரணமாகக் காட்டி பகவான் ராமகிருஷ்ணர் சொல்கிறார்: "மனைவி மக்கள் மடிந்து போவது குறித்து உலகத்தவர் பெருந் துயருக்கு ஆளாகின்றனர். ஆனால் மனைவி மக்கள் சாஸ்வதமல்ல." ஆனாலும் சாதாரண மக்களுக்கும், ஏன், மன்னர்களுக்குமே புத்திரசோகம் என்பது சோகங்களின் சோகம்.

இப்பொழுது இந்த இரண்டு கதைகளையும் கொஞ்சம் அசை போடுங்கள். மன்னவன் தன் கனவின் பொருள் என்னவென்று கேட்டால் ஒரு அறிஞர் உள்ளது உள்ளபடியே சொல்லிவிட்டார். அது தவறு அல்ல; ஆனால் அது இங்கிதமான பதில் அல்ல. அதை இரண்டாவது அறிஞர் இங்கிதமாகச் சொன்னார். உண்மையைச் சொன்ன முன்னவர் சிறைக்குச் சென்றார். பின்னவர் நயமாகப் பேசிப் பதவியும் பரிசுகளும் பெற்றார்.

செங்காய் போன்ற ஜென் மதகுரு எதையும் பூடகமாகச் சொல்லலாம். ஞானிகள் அப்படித்தான் சொல்வார்கள். சாமானியர்களாகிய நாம் அப்படிச் சொல்லக்கூடாது. நமக்கு இதமும் இங்கிதமும்

தேவை. இல்லையென்றால் சிறைசென்ற அறிஞர் போல நாமும் சங்கடப்பட வேண்டியிருக்கும்.

எதையும் சரியாக எடுத்துச் சொல்லும் திறமை வியாபாரிகளுக்கும் நிர்வாகிகளுக்கும் தேவை. ஒரு ஊழியரைப் பார்த்து, அவன் அடி முட்டாள் என்று சொல்லலாம். புத்திசாலித்தனம் குறைவு என்று சொல்லலாம். அதையும்விட நயமாகச் சொல்வ தென்றால் "ஒரு முறைக்கு இரு முறை சொன்னால் அவர் புரிந்து கொள்வார்," என்றும் சொல்லலாம். இதனால் சம்பந்தப்பட்டவரிடமிருந்தும் சுற்றியுள்ள வர்களிடமிருந்தும் நாம் கெட்ட பெயர் வாங்காமல் தப்பிக்கலாம்.

வர்த்தக விஷயம் தொடர்பாக ஆலோசனை தருவதென்றால், "உஹூம், என்ன செய்தாலும், இதில் நீங்கள் லாபம் சம்பாதிக்க முடியாது," என்பதற்கு பதில், "நீங்கள் சிரமப்படத் தயார் என்று புரிகிறது. ஆனால் உங்கள் சிரமத்திற்குத் தகுந்த அளவு இதில் லாபம் பெற முடியுமா என்பதை யோசித்துப் பார்த்தால் எனக்குக் கொஞ்சம் சந்தேகமாக இருக்கிறது," என்று சொல்லலாம்.

சொல்லும் சங்கதி ஒன்றாக இருந்தாலும் சொல்லும் முறை சொல்பவரின் பண்பாட்டைக் காட்டுகிறது: கேட்பவரின் மனோநிலையையும் மாற்றுகிறது. இதைப் புரிந்து கொண்டால் பேச்சு வார்த்தைகளில் சண்டை சச்சரவு இராது.

## 12. எது துறவு?

ஜென் கதையும் நம் நாட்டுப்புறக் கதையும் ஒன்றாக இருப்பதில் வியப்பில்லை. பண்பாடு இரு நாடுகளுக்கும் பொது. முதலில் சொன்ன கதையைப் போலவே இன்னொரு ஜென் கதை. இதே மாதிரி நிகழ்ச்சி இராமகிருஷ்ண உபதேச மஞ்சரியிலும் உள்ளது. இப்பொழுது கதைக்கு வருவோம்.

துறவு மேற்கண்ட குருவும் சீடனும் பயணம் செய்து கொண்டிருந்தார்கள். வழியில் ஒரு ஆற்றங் கரையில் ஒரு அழகான பெண்ணைப் பார்த்தார்கள். அவள் கவலையின் வடிவமாக இருந்தாள். அவளது உடைமை ஏதோ ஆற்றோடு போய்விட்டது போலும் என்று இருவரும் நினைத்தார்கள். கவலைக்குக் காரணமென்ன என்று கேட்டபொழுது, அவள் சொன்னாள்: "சுவாமி, எனக்கு நீச்சல் தெரியாது. நானோ ஆற்றைக் கடந்து அக்கரைக்குச் செல்ல வேண்டும்."

"அதனாலென்ன, கவலைப்படாதே", என்று ஆறுதல் சொன்ன குருநாதர், அவளை அப்படியே

தூக்கிக் கொண்டு கழுத்தளவு நீரில் நடந்து சென்று அக்கரையில் இறக்கிவிட, அவள் நன்றி சொல்லிப் போய்விட்டாள். சீடனுக்கு குருவிடம் ஏதோ கேட்க வேண்டுமென்று தோன்றியது. ஆனால் மிகவும் தயங்கினான். இறுதியில் கேட்டுவிடுவது என்ற முடிவுக்கு வந்து கேட்டே விட்டான்: "குருவே, தாங்கள் துறவிகளின் குருநாதர். தாங்கள் ஒரு பெண்மணியைத் தொட்டுத் தூக்கலாமா?"

"அட, அதுவா உன் கவலை? எப்பொழுதோ நான் அதை இறக்கி வைத்து விட்டேனே," என்றார் குருநாதர்.

பெண்ணை உடலால் சுமப்பதா, மனத்தால் சுமப்பதா, எது துறவு என்ற கேள்வியை இந்தக் கதை எழுப்புகிறது. இதே போல இருநாட்டுப் பழங்கதைகளிலும் பொதுக்கருத்து கொண்ட இன்னொரு கதையும் உண்டு.

அதாவது ஒரு கோயில் சன்னதித் தெருவில் எதிர் எதிர் வீடுகளில் ஒரு பூசாரியும் தாசியும் வசித்து வந்தனர். பூசாரிக்கு பக்தர்கள் அதிகம்; தாசிக்கு வாடிக்கையாளர்கள் அதிகம். நேர் எதிர் வீடுகளில் வசித்துவந்த போதிலும், இருவரும் பேசிக் கொள்வதில்லை, உலக வாழ்வு முடிந்ததும் பலரைத் தீண்டிய தாசி சொர்க்கத்திற்கு அனுப்பப்பட்டாள். பூசாரி நரகத்திற்குச் சென்றார். இறைபணி செய்த தான் நரகத்திற்கு வந்ததும், தாசி சொர்க்கத்திற்குச் சென்றதும் நியாயமில்லை, ஏன் இப்படி என்று பூசாரி

தர்ம தேவதையிடம் முறையிட, தர்ம தேவதை சொன்னதாம்: "நீர் தினமும் கோயிலுக்குச் சென்று பூசை செய்தாலும் தாசியைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தீர். பலரைத் தீண்டினாள் தாசி; 'தினமும் கோயிலுக்குச் சென்று இறைவனைப் பூசிக்கும் இந்த மனிதர் எவ்வளவு புண்ணியம் செய்திருக்க வேண்டும்,' என்று நினைத்தார். நியாயத் தராசு செயல்பாடுகளை மட்டுமே எடைபோடுவதில்லை. சிந்தனைப் போக்கையும் கணக்கில் எடுத்துக் கொள்ளும்."

அதனால்தான் திருவள்ளுவர் 'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அறம்' என்றார். பாரதியாரும் 'நினைவு நல்லது வேண்டும்' என்றார். நல்ல சிந்தனை நல்ல செயல்பாடுகளுக்கு வழி. நல்ல செயல்பாட்டினால் நமக்கும் பிறருக்கும் நன்மை உண்டாகும். முதலில் சொன்ன கதையில் துறவிக்கு ஒரு பெண்ணைத் தொட்டுத் தூக்கினோம் என்ற உணர்வே இல்லை; ஆனால் சீடனின் மனத்தில் அழகான பெண்ணே இருந்தாள்.

பெண்ணை உடலில் சுமப்பதா — மனத்தில் சுமப்பதா? காந்திஜி இதற்கு நமக்கு வழிகாட்டி: "பெண்ணைத் தொட்டால் காகிதத்தைத் தொடுவது போல் உணரவேண்டும்." ஆனால் இன்று சில பத்திரிகைகள் காகிதத்தைப் பார்த்தால் போதும்; பெண்ணைத் தொட்ட உணர்வு வேண்டும் என்று நினைப்பதாகத் தெரிகிறது. இது காலத்தின் கோலம்.

## 13. கோட்டையும் கோப்பையும்

பெற்ற பிள்ளைகள் மீதான பாசத்தைக்கூட மனத்தில் சுமக்கக் கூடாது என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அப்படியிருக்க அல்ப விஷயங்களையே பொக்கிஷங்களாக நினைத்துக் கொண்டால் ஒருவன் மிகவும் துன்பப்பட வேண்டி யிருக்கும். துன்பம் நேராமல் இருக்க வேண்டு மென்றால் மனதில் எதையும் சுமக்கக் கூடாது.

"என் மனத்தில் எதுவுமே இல்லாவிட்டால், நான் என்ன செய்யட்டும்," என்று ஒரு சீடன் குருவிடம் கேட்டான். ஜென்குரு சொன்னார்: "அதைத் தூக்கி வெளியே எறி." "ஒன்றுமே இல்லாததை எப்படித் தூக்கி எறிவது?" "அப்படி யானால் சுமந்து திரி," என்றாராம் ஜென்.

'என் மனத்தில் ஒன்றுமில்லை' என்பதுகூட ஒரு சுமையான நினைப்புதான் என்பது ஞானிகளின் கருத்து. அதனால்தான் "சும்மா இரு," என்றார் ரமண மகரிஷி. "செத்தாரைப் போல் திரி," என்றார் பட்டினத்தார்.

எது ஒன்று மனதில் இருந்தாலும் அதன் மீது பற்று இருக்கும். பற்றினால் அதை இழக்கக் கூடாது என்ற பிடிமானம் வரும். இழந்து விடுவோமா என்ற அச்சம் வந்தால் மனமும் உடலும் சேர்ந்து பதை பதைக்கும். இதற்கும் ஒரு ஜென் கதை இருக்கிறது.

போரில் வெற்றிபெற்ற தளபதிக்கு அழகான கோப்பை பரிசாகக் கிடைத்தது. அதை அவர் தன் மேஜை மீது வைத்து, ரசித்து அழகு பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு அதைத் தூக்கி வைத்துக் கொண்டு தடவிப் பார்த்தார். கைகளில் உருட்டிப் பார்த்தார். ஆசை அடங்கவில்லை. அதை உற்சாக மிகுதியால் சற்றே உயரே தூக்கிப் போட்டுப் பிடித்துப் பார்த்தார். அவர் பிடிப்பதற்குள் அது கை நழுவிக் கீழே விழுந்துவிடும் போலிருந்தது. மனம் பதை பதைத்து, கைகள் பரபரக்க, அதை ஒருவாறாகப் பிடித்து, மேஜைமேல் வைத்துவிட்டு, இன்னமும் படபடப்பு அடங்காமல் அதையே பார்த்துக் கொண்டிருந்தார். சில நிமிடங்கள் கழித்துத் தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டார். பின்னர் யோசித்துப் பார்த்தார்: "என்னடா இது, கோட்டையைப் போரிட்டு வென்ற போது ஏற்படாத படபடப்பு கோப்பையைத் தூக்கிப் பிடிக்கும்போது ஏற்பட்டு விட்டதே, கோட்டை பெரிதா, கோப்பை பெரிதா," என்று யோசித்தார். அப்பொழுதுதான் அவருக்குப் புரிந்தது – கோட்டை மீது ஏற்பட்டிராத பற்று கோப்பை மீது ஏற்பட்டிருக்கிறது என்று. அந்தக் கோப்பையை உடனே தூக்கியெறிந்தார்

தளபதி. மனத்தில் கோப்பை பற்றிய நினைப்பு இல்லாவிட்டால், அது உடைந்து போகுமோ என்ற ஆதங்கமும் ஏற்பட வழியில்லை.

இதைத்தான் திருவள்ளுவரும்,

*"யாதெனின் யாதெனின் நீங்கியான் நோதல்*

*அதனின் அதனின் இலன்,"* என்றார்.

அடைய வேண்டிய இலக்கு எது; அடையாளம் எது; எது எதற்கு எவ்வளவு மரியாதை, எது எதன் மீது மனம் எப்படிச் செல்லவேண்டும் என்பதை உணர்ந்து கொண்டால் வாழ்க்கையிலும் வணிகத்திலும் வெற்றி உறுதி. கோட்டையை வென்றதற்குப் பரிசாகப் பெற்ற கோப்பையையே பார்த்துக் கொண்டு இருந்ததால் அடுத்த கோட்டையைப் பிடிக்க முடியாமல் போய்விடும். வெற்றி பிறரது ரசனைக்காக. நாமே அதை ரசித்து மயங்கலாகாது.

வெற்றிக் கோப்பை ஒருபுறம் இருக்கட்டும்; சாதாரணத் தேனீர்க் கோப்பை கூட மனிதர்களிடம் சங்கடத்தை ஏற்படுத்தலாம். என் நண்பர் ஒருவர் வெளிநாட்டிலிருந்து இரண்டு அழகான பீங்கான் கோப்பைகளை ஆசையாக வாங்கி வந்தார். அதை அவர் தேநீர் குடிக்கப் பயன்படுத்தவில்லை. அலமாரியில் அழகுப் பொருட்களுடன் சேர்த்து வைத்திருந்தார். அவருக்கு இரண்டு மகள்கள். இருவருமே பள்ளி மாணவிகள். இளையவள் அந்த அலமாரியிலிருந்து வேறு ஏதோ பொருளை எடுக்க முயன்றபொழுது இரண்டு கோப்பைகளும் தவறி

விழுந்து உடைந்துவிட்டன. அழகுப் பொருளாயினும் பீங்கான்தானே, வெளியே சென்றிருந்த தந்தை வந்தால் இளைய மகள் அடி வாங்குவாள். அவள் சிறியவள்; அடியைத் தாங்கமாட்டாள் என்று நினைத்த பெரிய பெண் கோப்பைகளைத் தானே உடைத்ததாகச் சொன்னாள். தந்தை அவளை அடித்தார். நம்மில் பலர் அந்தத் தகப்பனைப் போல நடந்து கொள்கிறோமே ஒழிய, பிறர் தவறுக்குத் தான் பொறுப்பேற்ற அந்தப் பெரிய மகள் போல் நடந்து கொள்வதில்லை.

ஒரு ஜென் கதை: சீடர் ஒருவர் தன் குருவுக்குத் தேனீர் எடுத்துச் சென்றபொழுது கோப்பையைத் தவற விட்டார். அது உடைந்து விட்டது. சீடர் மனம் கலங்கினார். கோப்பைத் துகள்களை அப்புறப் படுத்தினார். கோப்பை உடைந்த விஷயத்தை குருவிடம் நயமாகச் சொல்வது எப்படி என்பதை மனதுக்குள் ஒத்திகை செய்து கொண்டார். கலக்கமான முகத்துடன் குருவைச் சந்தித்தார். "என்ன விஷயம்?" என்று கேட்டார் குரு. "மனிதர்கள் ஏன் சாகிறார்கள்?" என்று ஒரு பெரிய கேள்வியைப் போட்டார் சீடன். "அது இயற்கை; பிறந்த உயிர்கள் எல்லாம் இறந்துதான் ஆகவேண்டும். மரணம் தவிர்க்க முடியாதது. எல்லாவற்றிற்கும் அழிவு உண்டு. செத்துப் போவது இயற்கை," என்றார் குரு. சீடர் சொன்னார்: "குருவே, உங்கள் தேனீர்க் கோப்பை செத்துப் போய்விட்டது." சொல்லும் விதமாகச் சொன்னால் சோகமும் இழப்பும்கூட பொருட்படுத்தப்படுவதில்லை.

## 14. கற்பனை சந்தோஷத்தில்

உழைப்பே செல்வம். உழைக்காமல் செல்வம் பெறுபவன் அதைப் பேணிக் காக்க வழி தெரியாதவனாகிறான். நாளை வரக்கூடிய வரவை எதிர்பார்த்து இன்றே செலவு செய்து விடுகிறார்கள் சாதாரண மனிதர்கள். லாட்டரியில் ஒரு கோடி ரூபாய் பரிசு விழுந்துவிட்ட செய்தி அறிந்ததும் கையில் பணம் வருவதற்குள் அதில் பெரும் பகுதியைச் செலவு செய்துவிடக் கூடியவர்கள் அதிகம். வரவுக்குப் பிறகே செலவு என்றால் அது நல்ல நிதி நிர்வாகம். ஏனென்றால் சில சமயங்களில் வரவு குறையலாம். வராமலும் போகலாம்.

இதற்குப் பஞ்சதந்திரக் கதையில் வரும் ஒரு கிளைக் கதை நல்ல உதாரணம்.

ஒரு ஏழை பிரம்மச்சாரி பிராமணர் பலரிடம் யாசித்து தினமும் கொஞ்சம் கோதுமை மாவு வாங்கி வைத்துக் கொள்வார். தன் தேவைக்குத் தகுந்த அளவு தினமும் அந்த மாவை எடுத்து ரொட்டி செய்து கொள்வார். சமயங்களில் மாவு மிச்சம்

இருக்கும். அப்படிச் சேர்ந்த மாவு அவரது பானையை நிறைத்து விட்டது.

"ஆஹா, எவ்வளவு மாவு, நானல்லவா பணக்காரன்?" என்று அவர் நினைத்துக் கொண்டார். இப்படியே மாவு தினம் தினம் அதிகமானதால் தன் தேவைக்கு மேலே தங்குவதை விற்க நினைத்தார்; கிடைக்கும் பணத்தில் அதை இதை வாங்கலாம்; மாடுகள், வீடுகள்; பணக்காரன் ஆனால் பெரிய இடத்தில் பெண் எடுக்கலாம்; திருமணம், ஆண் குழந்தை பிறக்க, அதைக் கொஞ்சலாம். அது குறும்பு செய்தால் உதைக்கலாம் என்று படுத்துக்கொண்டே பகற்கனவு கண்டார். களிப்பில் திளைத்த அவர் குறும்பு செய்த குழந்தையை உதைப்பது போல் நினைத்தார், பானையை உதைத்து விட்டார்.

இவரது உதையில் உத்திரத்தில் கட்டப்பட்டுக் காலடியில் தொங்கிக் கொண்டிருந்த பானை நொறுங்கி விழ, கோதுமை மாவெல்லாம் இவர் முகத்திலும் உடலிலும் கொட்டியதுதான் மிச்சம். மறுநாள் ரொட்டிக்கு மாவு தங்கவில்லை.

நினைப்பு பிழைப்பைக் கெடுத்தது என்பது போலக் கற்பனை சந்தோஷத்து கவனமெல்லாம் இப்படித்தான்.

இன்று என்பது ரொக்கம்: நாளை என்பது பின் தேதியிடப்பட்ட காசோலை; நேற்று என்பது செல்லாக் காசு என்ற பொன்மொழியும் இப்படிப் பட்ட நிலைமைகளை விளக்கவே சொல்லப்பட்டது.

தேவைக்கு மேல் கோதுமை மாவு கிடைப்பதாக ஒருவர் பகற்கனவு கண்டபோதே எப்படித் துள்ளிக் குதித்து உள்ளதையும் இழந்தார் என்பதைச் சென்ற கதையில் படித்தீர்கள் அல்வா? நிஜமாகவே தேவைக்கு அதிகமாக ஒருவனிடம் தானியம் தங்கி விட்டால், அவன் என்ன செய்வான்? அதைச் சொல்கிறார் டால்ஸ்டாய் இன்னொரு கதையில்.

ஒரு விவசாயி உழவு வேலைக்காக அதி காலையில் வயலுக்குச் சென்றான். மதியம் சாப்பிடு வதற்காக ஒரு ரொட்டித் துண்டையும் எடுத்துச் சென்றான். அதை அப்படியே சட்டையோடு சுருட்டி வைத்துவிட்டு உழவு செய்தான். பசித்த பொழுது வந்து பார்த்தால் சட்டை இருந்தது. ரொட்டி இல்லை. பக்கத்தில் எவரும் இல்லை. யாருமே ரொட்டியை எடுத்துச் சென்றிருக்க வாய்ப்பில்லை.

“போகட்டும் போ, நம்மைவிடப் பசித்தவன் யாரோ அதை எடுத்துச் சாப்பிட்டிருக்கலாம்,” என்று மனதைத் தேற்றிக்கொண்டு, கிணற்றிலிருந்து நீர் சேந்தி எடுத்து, குடிநீரால் பசியாறிக் கொண்டான் அந்த விவசாயி.

உண்மை என்னவென்றால், அந்த ரொட்டியை யாரும் எடுத்துச் சாப்பிடவில்லை. விவசாயியின் மனநிலையைக் கெடுக்க விரும்பிய சாத்தான் ஒரு குறளியை ஏவி, அந்த ரொட்டித் துண்டை ஒளித்து வைக்கச் செய்தது. குரளி கண்ணில் படாதது என்பதனால் விவசாயி அங்கு நடந்ததை அறியவில்லை.

ஆனால் குறளியும் சாத்தானும் விவசாயியை கவனித்து வந்தன. அந்த ஏழை விவசாயி தன் ஒரே ரொட்டித் துண்டினைப் பசிநேரத்தில் இழந்த போதும், நிதானம் இழக்காமல் பெருந்தன்மையாக நடந்து கொண்டான் என்பதனால் சாத்தானும் குறளியும் தாம் கேடு செய்யும் முயற்சியில் தோற்று விட்டதாக எண்ணித் துடித்தன. விவசாயியை எப்படியாவது வீழ்த்திவிட வேண்டும் என்று குறளிக்குச் சாத்தான் கட்டளையிட்டது. வீழ்த்த முடியாவிட்டால் குறளிக்குக் கேடு விளையும் என்றும் சாத்தான் எச்சரித்தது. எனவே குறளியின் பாடு திண்டாட்டமாகி விட்டது. உறவாடிக் கெடுக்க நினைத்த குறளி அந்த விவசாயியிடம் ஒரு வேலைக் காரனாகச் சேர்ந்து கொண்டது.

அப்பொழுது கோடைக்காலம். எனவே சதுப்பு நிலத்தில் தானியங்கள் பயிரிடும்படி விவசாயிக்குக் குறளி யோசனை சொன்னது. அதன்படியே செயல்பட்ட விவசாயி நல்ல விளைச்சல் கண்டான். தேவை, விற்பனை போகவும் நிறைய தானியம் அவனிடம் மிஞ்சியது.

மறுவருடம் கோடைக்காலம் வந்த பொழுது ஒரு குன்றின் சரிவுப்பகுதியில் தானியம் பயிரிடச் சொன்னான் வேலைக்காரன். அந்த வருடம் மற்றவர்களுக்கு விளைச்சல் குறைந்து போனது. இந்த விவசாயிக்கோ அமோக விளைச்சல். ஆக, தானியம் அதிகம் மிஞ்சியது.

இவ்வளவு தானியத்தை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்று விவசாயி திகைக்க, வேலைக் காரன் சொன்னான்: 'தானியங்களை அரைத்துப் புளிக்க வைத்து மது தயாரித்து அதை அருந்தி மகிழலாமே." விவசாயி உடனே அதைச் செய்தான். பக்கத்து வீடுகளில் இருந்த பணக்காரர்களை யெல்லாம் அழைத்து விருந்து கொடுத்தான்.

விருந்தின் பொழுது அவன் மனைவியின் கையிலிருந்த மதுக்கிண்ணத்திலிருந்து கொஞ்சம் மது கீழே கொட்டிவிட்டது. விவசாயி கடிந்து கொண்டான். "சனியனே, இது என்ன கழுநீரா, இப்படிக் கொட்டுவதற்கு; இது உயர்ந்த மது அல்லவா?"

வேலைக்காரன் வேடத்திலிருந்த குறளி சாத்தானிடம் சொன்னது: "கேட்டாயா, ரொட்டித் துண்டு போனால் போகட்டும் என்று சொல்லிப் பசியை மறந்து, எடுத்தவன் நன்றாக இருக்கட்டும் என்று வாழ்த்திய அதே வாய், இப்பொழுது தன் மனைவியை இப்படிக் கடிந்து கொள்கிறது பார்த்தாயா?"

அந்த நேரத்தில் அழையா விருந்தாளியாக ஒரு ஏழை விவசாயி வந்து சேர்ந்தான். தனக்கும் ஏதாவது கிடைக்காதா என்று சபலப்பட்டான். அவனை இந்த விவசாயி பொருட்படுத்தவில்லை. "வந்தவனுக் கெல்லாம் நான் மது தர முடியாது. போ," என்று சொல்லித் துரத்தினான். சாத்தான் அது குறித்து

சந்தோஷப்பட, குறளி சொன்னது: "இன்னும் கொஞ்சம் வேடிக்கை பாருங்கள்."

அப்பொழுது மது அருந்திய ஒவ்வொருவரும் தம் பெருமைகளைப் பேசிக் கொண்டார்கள். கட்டி அணைத்துக் கொண்டார்கள். மேலும் மது அருந்தி கொச்சை மொழியில் பேசிக் கொண்டார்கள்; வாய் குழறியது. ஒருவரை ஒருவர் ஏச ஆரம்பித்தார்கள்; அடித்துக் கொண்டார்கள். இந்தக் கூத்தில் விருந்தளித்த விவசாயியும் உதைபட்டான். அடுத்த சுற்று மது அருந்தியதும் எல்லோருக்கும் நினைவு தப்பியது. வீதிக்கு வந்து விழுந்தார்கள்; உருண்டு புரண்டார்கள். சகதிக்குட்டையில் விழுந்து சேற்றை உடலில் பூசிக்கொண்டார்கள்.

அப்பொழுது அங்கே குறளி சாத்தானிடம் சொன்னது: "பாருங்கள் இவர்கள் நரிகள், ஓநாய்கள், பன்றிகளாகி விட்டார்கள்."

சாத்தானுக்கு இப்பொழுது பரம திருப்தி. குறளியைப் பார்த்து சாத்தான் கேட்டது: "அடாடா, நீ அற்புதமானதொரு பானத்தைக் கண்டுபிடித்து விட்டாய். ஒருவேளை அந்த பானத்தில் முதலில் நரிகளின் ரத்தத்தை ஊற்றியிருப்பாய்; அடுத்து ஓநாய்கள், பன்றிகளின் ரத்தத்தைச் சேர்த்திருப்பாய் என்று நினைக்கிறேன். அதனால்தான் இவர்கள் இப்படி நடந்து கொள்கிறார்கள்."

குறளி சொன்னது: "எஜமானே, அது அப்படி யல்ல. எந்த மிருகத்தின் ரத்தத்தையும் நான் இந்த

மதுவில் சேர்க்கவில்லை. நான் செய்ததெல்லாம் அவனைப் பணக்காரனாக்கியதுதான். எல்லா மிருகங்களின் ரத்தமும் மனிதனின் உடலில் ஏற்கெனவே இருக்கிறது. ஏழையாக இருக்கும்வரை அந்த மிருக ரத்த அணுக்கள் செயல்படுவதில்லை. அவன் பணக்காரன் ஆனதும் மிருக ரத்த அணுக்கள் விழித்துக் கொள்கின்றன. குடித்துக் குடித்து மனிதன் கடைசியில் மிருகமாகிப் போகிறான்."

குறளி வென்றது; மனிதன் தோற்றான்.

மனிதனின் சந்தோஷம் சாத்தானுக்கு சங்கடம். இதற்கும் ஒரு கதை உண்டு.

ஒரு பக்திமான் ஆழ்ந்த தூக்கத்தில் இருந்தார். அப்பொழுது அவரை ஒருவன் திடீரென்று எழுப்பினான். திடுக்கிட்டு எழுந்தார்.

வந்தவன் சொன்னான்: "எழுந்திருங்கள், பிரார்த்தனைக்கு நேரமாகிவிட்டது."

பக்திமான் கேட்டார்: "யாரப்பா நீ, உனக்கு ஏன் என்மீது இவ்வளவு அக்கறை?"

வந்தவன் சொன்னான்: "நான் சாத்தான்."

ஆச்சர்யத்துடன் கேட்டார் பக்திமான்: "எல்லோரையும் தூங்கச் செய்து, பிரார்த்தனை நடக்காமல் பார்த்துக் கொள்ளும் நீ, இப்பொழுது ஏன் என்னை எழுப்பிப் பிரார்த்தனை செய்யச் சொல்கிறாய்?"

சாத்தான் பதில் சொன்னான்: "நேற்று நீங்கள் பிரார்த்தனை செய்யத் தவறி விட்டீர்கள்; அதனால் வருந்தி அழுதீர்கள். அப்படி வருந்தியது கண்டு கடவுள் மனமிரங்கி, நீங்கள் பிரார்த்தனை செய்திருந்தால் கொடுத்திருக்கக்கூடிய பலனைவிட அதிகமான பலனை நேற்று தந்துவிட்டார். இன்றும் உறங்கிவிட்டால் பிரார்த்தனை செய்ய மாட்டீர்கள். அதற்காக அழுவீர்கள்; உடனே கூடுதல் பலன் பெறுவீர்கள்; அது வேண்டாமென்றுதான்..."

நல்லவர்களை நல்லவர்களாகத் தொடர விடுவதில்லை சாத்தான்.

பரம்பரைப் பணக்காரர்கள் ஒழுக்க சீலர்களாக வாழ்வதையும் புதுப் பணக்காரர்கள் கேளிக்கை களில் திளைத்து சேர்த்த செல்வத்தையெல்லாம் அழிப்பதையும் பார்க்கிறோம். இது போன்ற கதைகளையும் கேட்கிறோம். ஆனால் திருந்தும் மக்கள் வெகு குறைவு.

மனம் கெட்ட வழிகளில் செல்லாமல் இருக்க வேண்டும்; சென்றபிறகு உடனே திரும்பவேண்டும்; இல்லையென்றால் வாழ்க்கையின் உழைப்பு, சேமிப்பு, பெயர், புகழ் எல்லாமே பாழாகிவிடும்.



## 15. சிறியோராயினும்

சிறு துரும்பும் பல் குத்த உதவும் என்ற பழமொழி பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். அது வெறும் துரும்புகளுக்காகச் சொல்லப்பட்டதல்ல.

சமயங்களில் கீழ்நிலை மனிதர்களும் கவனத்திற்கும் மரியாதைக்கும் உரியவர்களே. அப்படிப்பட்டவர்கள் தமக்கு மரியாதை தரப்பட வில்லை என்ற காரணத்தினால் எதிர்த்து நின்றால் என்ன ஆகும்? அதற்கு விளக்கம் தருகிறது ஒரு பஞ்சதந்திரக் கதை.

வர்த்தமானம் என்ற நகரில் நந்திதன் என்ற வணிகன் வாழ்ந்து வந்தான். அவனுக்கு மன்னரிடம் நிறைய செல்வாக்கு இருந்தது. அரண்மனைக்குத் தேவையான பொருட்களை வாங்கிக் கொடுத்து வந்தான். இதனால் அவனுக்கு வருமானத்துடன் செல்வாக்கும் பெருகியது. இவ்வளவு செல்வாக்கான வணிகன் தன் மகனுக்குத் திருமணம் செய்தான். விருந்துக்கு அரசரையும் அரண்மனை ஊழியர்கள் அனைவரையும் அழைத்திருந்தான்.

வந்திருந்தவர்களில் கோரபன் என்ற அரண் மனைக் கடைநிலை ஊழியன் அரச குருவுக்கு எதிரே சரியாசனமாக அமர்ந்திருந்தான். அதைக் கண்டு கோபப்பட்ட நந்திதன், அவனைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளச் சொன்னான். அவமானப் படுத்தப்பட்ட கோரபன் நந்திதனைப் பழிவாங்கத் திட்டமிட்டான்.

ஒருநாள் அரசனின் படுக்கையறையைச் சுத்தம் செய்ய நுழைந்த பொழுது அரசன் அரைகுறைத் தூக்கத்தில் இருப்பதைக் கண்ட கோரபன், ஜன்னல் ஓரத்தில் ஓடிய விட்டில் பூச்சியை விரட்டி அடிப்பது போன்ற பாவனையில் ஜாடை பேசினான்: "விட்டில் பூச்சியே நீ நம்பிக்கை துரோகி; உனக்கும் அந்தப்புரப் பெண்களைத் திருட்டுத்தனமாகச் சந்திக்கும் இந்த நந்திதனுக்கும் என்ன வித்தியாசம்?"

அரைகுறைத் தூக்கத்தில் இருந்தாலும் அரசனுக்கு கோரபன் சொன்னது காதில் விழுந்தது. "என்னடா உளறுகிறாய்?" என்று அரசன் கேட்க, கோரபன்: "ஒன்றுமில்லை அரசே; இரவு முழுவதும் விழித்திருந்த அசதி; தூக்கக் கலக்கத்தில் என்ன சொன்னேன் என்று தெரியவில்லை. ஏதோ உளறி விட்டேன் போலிருக்கிறது," என்று சொல்லிச் சமாளித்தான்.

ஆனாலும் அரசனுக்குத் அந்தப்புர நாயகியர் மீதும் நந்திதன் மீதும் சந்தேகம் வந்தது. இதை விசாரிக்கப் புகுந்தால் தனக்கு அவமானம்

என்பதனால் நந்திதன் அரண்மனைக்கு வரக்கூடாது என்று கட்டளையிட்டு நந்திதனுக்குத் தான் அளித்து வந்த சலுகைகளையும் விலக்கிக் கொண்டான்.

காரணம் தெரியாமல் தன் நிலையில் ஏற்பட்ட மாறுதல் குறித்துக் கலங்கிப் போனான் நந்திதன்.

காக்கையிடம் சுத்தத்தையும், சூதாடியிடம் சத்தியத்தையும், குடிகாரனிடம் உறுதியையும், அலியிடம் ஆண்மையையும், அரசனிடம் அன்பையும் எதிர்பார்ப்பது வீண் என்றாலும், நடுவில் நடந்தது என்ன என்பதை அறிந்து கொள்ளும் நோக்கத்துடன் அரண்மனைக்குச் சென்றான். காவலர்கள் நந்திதனைத் தடுத்து நிறுத்த, அப்பொழுது அங்கு வந்த கோரபன் "இவர் அரசருக்கு மிகவும் வேண்டியவர். நாளை மறுபடியும் இவருக்கு அரசரின் நட்பு கிடைத்ததும் உங்களைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளுவார்," என்றான்.

கோரபனைத் தான் கழுத்தைப் பிடித்துத் தள்ளியதனால் அவன் மூட்டிவிட்ட பகைமை அது என்று நந்திதனுக்குச் சட்டென்று புரிந்தது,

புகழ் பெற்றவர்கள் மற்றும் பதவியில் இருப்பவர்களின் ஊழியர்களை அடிமுட்டாள்களாக இருந்தாலும், பயனற்றவர்களாக இருந்தாலும், தகுந்த மரியாதை செலுத்த வேண்டும். இல்லையென்றால் சந்தர்ப்பம் கிடைக்கும்பொழுது சதிசெய்து விடுவார்கள் என்ற நியதியை நினைத்துப் பார்த்தான் நந்திதன். உடனே செயல்பட ஆரம்பித்தான்.

அன்று இரவு கோரபன் வீடு திரும்பியதும் அவனுக்கு ஒரு ஆச்சர்யம் காத்திருந்தது. ஆம், கோபரன் வீட்டு வாயிலில் நந்திதன் காத்திருந்தான். கோரபனைப் பார்த்ததும் சொன்னான்:

"நண்பனே, நான் ஒரு வியாபாரி, எல்லோரும் எனக்கு வேண்டியவர்கள். நான் வித்தியாசம் பார்ப்பதில்லை. பார்க்கக் கூடாது. அன்று நான் கொடுத்த விருந்தில் உன்னை அப்படி வெளியே அனுப்பியது தவறு. ஏதோ ராஜகுருவைத் திருப்திப்படுத்துவதாக நினைத்துக் கொண்டு அப்படிச் செய்துவிட்டேன். பிறகு நானே அது குறித்து வருத்தப்பட்டேன். மறுநாள் அதற்காக உன்னிடம் தனியாக மன்னிப்புக் கேட்டுப் பரிசுகளும் தர நினைத்திருந்தேன். ஆனால் பல்வேறு வேலை களினால் உடனே செய்ய முடியவில்லை. அதற்காக இப்பொழுது உன்னிடம் மன்னிப்புக் கேட்கிறேன். மன்னித்துவிடு. அத்துடன் அன்றே நான் கொடுக்க இருந்த பரிசுகளையும் நீ மறுக்காமல் பெற்றுக் கொள்ள வேண்டும்."

நந்திதனின் பணிவு, மன்னிப்பு கோரல், பரிசுப் பொருட்கள் அத்தனையையும் கண்டு மகிழ்ந்த கோரபன், "ஐயா, உயர்ந்த உள்ளம் கொண்ட உங்களுக்கு நான் கெடுதல் செய்து விட்டேன். நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். கவலைப் படாதீர்கள்; நான் போட்ட முடிச்சை நானே அவிழ்த்துவிடுவேன். நீங்கள் பழையபடி அரண்மனையில் செல்வாக்கு பெறுவீர்கள்," என்றான்.

நந்திதன் விடைபெற்றுச் சென்றான். மறுநாள் அதிகாலை அரசனின் படுக்கையறையைச் சுத்தப் படுத்தச் சென்ற கோரபன் விட்டில் பூச்சியைப் பார்த்து, "ஏ அறிவு கெட்ட பூச்சியே, நீயும் எங்கள் அரசனைப் போலவே இருக்கிறாயே; அவசரக் குடுக்கை ஏதோ சொன்னதற்காக நல்ல நண்பனை இழந்த அரசனைப் போல நீயும் இந்தச் சுடர் விளக்கு வெளிச்சத்தை சுவர்க்கம் என்று நினைத்து உயிரை விட்டுவிட்டாயே," என்று சொன்னான்.

இதைக் கேட்ட அரசன், கோரபன் ஜாடை பேசுகிறான் என்பதைப் புரிந்து கொண்டான். எதற்கும் விசாரித்து விடலாம் என்று முடிவு செய்து அந்தப்புரப் பெண்களின் தோழிகளை அழைத்து நந்திதன் பற்றிக் கேட்டான். அவர்கள் அனைவரும் நந்திதனைப் பற்றி உயர்வாகவே சொன்னார்கள். பிறகு நந்திதனை அழைத்து அவனிடம் மன்னிப்பு கேட்டு மறுபடியம் அரண்மனையில் செல்வாக்கு பெற்றுத் தந்தான்.

இதுவரை கதை. இதற்குமேல் நீதியும் நியதியும்.

விருந்து என்று நீங்கள் பலரை அழைத்து விட்டால் எல்லோரையும் சமமாகவே நடத்த வேண்டும். விருந்தில் அவமானப்படுத்தப்பட்டவன் என்ன வேண்டுமானாலும் செய்வான். கடைநிலை ஊழியன் கோரபனால் முடிந்தது நந்திதனை அரண்மனைக்குள் சில நாட்கள் நுழையவிடாமல் செய்தது.

ஆனால் சாணக்கியரின் வரலாறு பற்றிச் சொல்லப்படுவதை யோசித்துப் பாருங்கள். ஒரு விருந்தின் பொழுது எழுந்து செல்லும்படி அவமானப்படுத்தப் பட்டதால் சாணக்கியன் நந்த வம்சத்தையே அழித்தான். யாரையும் விருந்தின் பொழுது அவமானப்படுத்தக் கூடாது.

சிலரை அழைக்காமல் இருக்க முடியாது என்பதனால் தாட்சண்யப்பட்டு அழைத்தால் அவர்களிடமும் மரியாதையுடன் நடந்து கொள்ள வேண்டும். இல்லையென்றால் அவதியே.

அதுபோல அற்பர்களால் அவமானம் வந்து விட்டால் அதைத் துடைக்க உடனே நடவடிக்கை எடுக்க வேண்டும். நந்திதன் உடனே கோரபனைச் சந்தித்தது போல.

சாட்சிக்காரன் காலில் விழுவதைவிடச் சண்டைக்காரன் காலில் விழுவது மேல் என்ற பழமொழி எவ்வளவு சக்திவாய்ந்த அனுபவ வாசகம் பாருங்கள். நந்திதன் எவரையும் தூதராக அனுப்பாமல் நேரடியாக கோரபனைச் சந்தித்து மன்னிப்பு கேட்டதனால் உடனே அவமானத்திலிருந்து விடுபட முடிந்தது.

நந்திதன் கோரபனிடம் மன்னிப்புக் கேட்டது ஒரு யுக்தி. அரசன் நந்திதனிடம் மன்னிப்புக் கேட்டது அன்பினாலும் பெருந்தன்மையினாலும் குற்ற உணர்ச்சியினாலும் வந்தது.

அதனால்தான் பெரிய இடத்து வேலைக்காரர்களிடம் வியாபாரிகள் போன்ற வெளிவட்ட நபர்கள் சுமுகமாகப் பழகியாக வேண்டும். பெரிய மனிதர்களைத் தெரிந்து வைத்திருப்பது மட்டும் ஒருவனுக்கு வெற்றியைத் தேடித்தந்து விடாது. அந்தப் பெரிய மனிதர்களைச் சந்திக்க முடியாமல் போய்விட்டால், அங்கே நம் எதிராளிகளின் வார்த்தை எடுபட்டால்... இவற்றையெல்லாம் ஒரு வியாபாரி யோசித்துப் பார்க்க வேண்டும்.

பஞ்ச தந்திரக் கதை ஒரு புறம் இருக்கட்டும், கவனிக்கப்பட வேண்டியவர்களை கவனிக்காமல் விட்டதனால் எனக்குத் தெரிந்த ஒரு துணி வியாபாரிக்கு என்ன நேர்ந்தது என்பதைத் செல்கிறேன் கேளுங்கள்.

ஒரு பிரபல நெசவாலையின் துணி வகைகளுக்கு விற்பனை உரிமை பெற்றிருந்த என் நண்பர் ஒருவர் வருடா வருடம் ஒரு தொழில் நகர ஊழியர்களின் சீருடைக்கான துணிகள் ‘டெண்டர்’ முறையில் கொடுத்து வந்தார். என்னதான் டெண்டர், கமிட்டி என்றாலும் வருடா வருடம் அவருக்கே ‘ஆர்டர்’ கிடைக்கும். இந்த நிலையில் அவருக்குப் புதிதாக வந்து சேர்ந்த சேர்மனுக்கு நெருக்கமானவருடன் பழக்கம் கிடைத்தது. அதன்மூலம் தொடர்ந்து ஐந்து வருடங்களுக்கான ஒப்பந்தத்தில் நுழைய விரும்பினார். சேர்மன் ஒரு வருடத்திற்கு மட்டும் அனுமதி கொடுத்தார்.

அந்த வருடம் வியாபாரி டெண்டர் குழுவின் உறுப்பினர்களைக் கண்டுகொள்ளவில்லை. மறு வருடம் டெண்டர் குழு கூடிய பொழுது அவர் புறக்கணிக்கப்பட்டார். வேறு ஒருவர் தேர்ந்தெடுக்கப் பட்டார். நண்பருக்கு அந்த வியாபாரம் போனது பெரிதல்ல. அவரால் கண்டுகொள்ளாமல் விடப் பட்ட டெண்டர் குழு உறுப்பினர்கள் சேர்மனிடம் அவரைப் பற்றி நிறையப் பொய் சொல்லி, அவருக்கு அந்தத் தொழில் நகரில் ஒதுக்கப்பட்டிருந்த வீட்டைவிட்டு வெளியேற்றினார்கள். பெண்கள் விஷயத்தில் மோசம் என்று அபாண்டமாகப் பழி சுமத்தினார்கள். வியாபார நஷ்டத்துடனும் அவருக்கு அவமானமும் சேர்ந்து கொண்டது.

இதுபோன்று எத்தனையோ நிகழ்ச்சிகள் நாட்டில் நடைபெறுகின்றன.

சிறியோராயினும் எவரும் ஒதுக்கப்படுவதற் கில்லை. வியாபாரிகளும் தொழிலதிபர்களும் பெரிய மனிதர்களின் பழக்கத்தோடு மட்டும் நிறுத்திக் கொள்ளக் கூடாது. அவர்களது கடைநிலை ஊழியர்களையும் கண்டு கொள்ள வேண்டும்.

இந்தப் பயன்மிகு அனுபவ ஞானத்தை விஷ்ணு சர்மன் பஞ்ச தந்திரக் கதையில் அன்றே சொல்லிவிட்டார்.



## 16. பாவ மன்னிப்பு

நல்ல காரியங்களைச் செய்யும்பொழுது அவற்றைச் சிறியவை, பெரியவை என்று பகுத்துப் பார்க்க முடியும். அது அதற்குத் தகுந்த பலன்கள் கிடைக்கும். ஒரு குவளைப் பாலுக்கும் ஒரு குடம் பாலுக்கும் வித்தியாசம் இருக்கிறது அல்லவா, அதுபோல. ஆனால் கெட்ட காரியங்களைப் பொருத்தவரை இப்படிப்பட்ட வேறுபாடு எதுவும் கிடையாது. குடம் பாலில் துளி விஷம் கலந்தாலும் ஒரு குவளை விஷம் கலந்தாலும் ஒன்றுதான்.

அதனாலேயே பெரியவர்கள் கெட்ட வழியில் ஒரு அடிகூட எடுத்து வைக்கக்கூடாது என்கிறார்கள். நல்லதற்கும் கெட்டதற்கும் அளவுகளும் விளைவுகளும் எப்படி அமையும் என்பதற்கு ஒரு கதை சொல்ல விரும்புகிறேன். இதன் மூல ஆசிரியர் லியோ டால்ஸ்டாய்.

இரண்டு நபர்கள் ஒரு துறவியிடம் வந்தார்கள். தாங்கள் இருவரும் பாவம் செய்து விட்டதாகவும், அதைப் போக்க என்ன பிராயச்சித்தம் வேண்டு

மானாலும் செய்யத் தயாராக இருப்பதாகவும் சொன்னார்கள். இருவரையும் தனியே அழைத்து அவரவர் செய்த பாவங்கள் பற்றிக் கேட்டார் துறவி.

முதல் நபர் சொன்னார்: "சுவாமி ஆத்திர புத்தியினால் நண்பன் ஒருவன் இறக்கக் காரணமாகி விட்டேன். மனச்சாட்சி என்னை உறுத்துகிறது. நான் அப்படி நடந்து கொண்டதற்காக மிகவும் வேதனைப் படுகிறேன்."

இரண்டாமவனை அழைத்தார். அவன் சொன்னான்: "சுவாமி, நான் பெரிய குற்றம் எதுவும் செய்யவில்லை. ஆனால் சின்னச் சின்னக் குற்றங்கள் நிறையவே செய்திருக்கிறேன். அவற்றை என்னால் நினைவில் வைத்துக் கொள்ள முடியவில்லை. நான் என்ன பிராயச்சித்தம் செய்வது உசிதம்?"

துறவி சிறிது யோசனை செய்தார். முதல் நபரை அழைத்தார். "எங்காவது சென்று ஒரு பெரிய பாறாங்கல்லைத் தூக்கிக் கொண்டு வா," என்றார். முதல் நபர் பெரிய கல்லைத் தேடிப்போனார். இரண்டாம் நபரை அழைத்து, "ஒரு கோணிப் பையை எடுத்துகொள்; சிறிய சிறிய கற்களாகப் பொறுக்கி எடுத்துக் கோணியை நிரப்பிக் கொண்டு வா," என்று சொன்னார். இருவரும் துறவி கூறியபடியே செய்தனர்.

துறவி முதல் நபரைப் பார்த்து, "நீ எடுத்துவந்த கல்லை அதே இடத்தில் போட்டுவிட்டு வா," என்றார். முதல் நபர் அப்படியே செய்தார்.

இரண்டாம் நபரை அழைத்து, "நீ கொண்டு வந்த சின்னஞ்சிறு கற்களையெல்லாம் எந்த இடங்களிலிருந்து எடுத்தாயோ அங்கே போட்டுவிட்டு வா," என்று சொல்ல, அவன் திகைத்தான். எங்கெங்கே எந்தெந்தச் சிறு கற்களைப் பொறுக்கி எடுத்தேன் என்று துல்லியமாகச் சொல்லமுடியாது என்றான்.

அப்பொழுது அந்தத் துறவி சொன்னார்: "அன்பர்களே, பாவங்கள் இந்தக் கற்களைப் போன்றவை. பெரிய பாவம் செய்தவனின் மனம் பெரிய கல்லைப்போலவே அழுத்திக் கொண்டிருக்கும். அதை அவன் உணர்ந்து வருந்தும்பொழுது அந்தப் பாவத்தை மன்னித்து விடமுடியும். எண்ண முடியாத, நினைவில் வைத்துக் கொள்ள முடியாத அளவுக்குப் பாவங்கள் செய்தவன், அந்தப் பாவங்களைத் தனித்தனியாக யோசித்துப் பார்த்து வருந்தும் நிலையில் இல்லாத காரணத்தினால் அவன் மன்னிப்பு பெறமுடியாத பாவியாகவே தொடர்கிறான். எனினும் பாவங்கள் பாவங்களே, அவை சிறியவையாயினும் சரி, பெரியவை ஆயினும் சரி."

பெரியவையோ, சிறியவையோ செய்த குற்றத்தை நினைத்து வருந்துபவனும், திருத்திக் கொள்ள நினைப்பவனும் திருந்துவதற்கான வாய்ப்பினைப் பெறுகிறான். அதை விளக்குகிறது ஒரு கதை.

பரசு என்ற ஒரு கொள்ளைக்காரன் நாட்டிலும் காட்டிலும் பிரசித்தி பெற்றவனாக இருந்து வந்தான்.

ஆனால் கெட்டதிலும் ஒரு நல்ல அம்சம். தான் பணக்காரர்களிடமிருந்து கொள்ளையடித்த பொருட் களை ஏழைகளிடம் கொடுத்து வந்தான். இருப்பினும் அவனைக் கைது செய்து சிறையில் அடைக்க வேண்டும் என்று ஏற்கெனவே அந்த நாட்டு மன்னன் கட்டளையிட்டிருந்தான். அவனைப் பற்றிய தகவல் கொடுப்பவர்களுக்கும் பிடித்துக் கொடுப்பவர்களுக்கும் சன்மானம் அறிவிக்கப் பட்டிருந்தது.

இந்த நிலையில் ஒரு நாள் தாகத்துடன் பரசு அலைந்து கொண்டிருந்தபொழுது ஒரு இடத்தில் ஒரு மேடையில் சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப் பட்டிருப்பதையும் யாரோ அதற்குப் படையல் செய்து வந்ததற்கான அடையாளங்களும் தென்பட்டன. சற்றுநேரம் காத்திருந்தான். அவன் எதிர்பார்த்தது போலவே ஒரு கிழவி வந்தாள். அவள் கையில் சில தின்பண்டங்களும் ஒரு இடத்தில் தண்ணீரும் இருந்தது. அவள் நேராக சிவலிங்கத்தை பூஜிக்கச் சென்றாள். குறுக்கே வந்த பரசு, அவள் யார், ஏன் அங்கு வந்தாள் என்று கேட்டான். அவள் தன் பேத்தியின் திருமணத்திற்காக பிரார்த்தனை செய்து வருவதாகவும், மேடையைக் கட்டி சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தது தன் மகன் என்றும் அவன் சிலகாலம் முன்பு இறந்து விட்டதாகவும் சொன்னாள்.

“தாயே எனக்கு மிகவும் தாகமாக இருக்கிறது; கொஞ்சம் தண்ணீர் தருகிறீர்களா?” என்று பரசு

கேட்க, கிழவி தயக்கமின்றிச் சொன்னாள்: "மகனே, இந்தத் தின்பண்டங்களைத் தின்ற பிறகு தண்ணீர் குடி," இப்படியாக இறைவனுக்காகத் தான் கொண்டுவந்த படையலை அந்த கிழவி பரசு என்ற கொள்ளைக்காரனிடம் கொடுத்துவிட்டாள். களைப்பும் பசியும் தீர்ந்த பரசு "உன் பேத்தியின் திருமணம் பிரமாதமாக நடக்கும்; கவலைப்படாதே; எல்லாம் அந்தப் பரமசிவன் பார்த்துக் கொள்வார்," என்று சொல்லி அனுப்பினான்.

கிழவியின் பேத்திக்குத் திருமணம் நிச்சயிக்கப் பட்டது. திருமணத்திற்கு மூன்று நாட்கள் முன்பு கிழவி வீட்டு வாசலில் திருமணத்திற்கு வேண்டிய அத்தனைப் பொருட்களும் ஐந்து வண்டிகளில் வந்து இறங்கின. இவற்றையெல்லாம் யார் அனுப்பியது என்று கேட்க வண்டிக்காரர்கள் தமக்கு எதுவும் தெரியாது என்று நழுவிக் கொண்டார்கள். கிராம அதிகாரிக்கு அது பரசுவின் உதவி என்பது புரிந்தது. அவன் அதை அரசாங்கத்திற்குத் தெரியப் படுத்தினான். அந்தத் திருமணத்திற்கு ஒருவேளை பரசு வரக்கூடும் என்ற ஊகத்தில் மன்னனின் உளவாளிகளும் ராணுவ அதிகாரிகளும் அந்த கிராமத்திற்கு வந்து சேர்ந்தனர். திருமண நாளன்று பரசு திருமணத்திற்குப் புறப்பட்டபொழுது நண்பர்கள் அவன் அரசு அதிகாரிகளிடம் பிடிபடும் ஆபத்து இருக்கிறது என்று எச்சரித்தார்கள். ஆயினும் பசி நேரத்தில் பண்டங்களும் குடிநீரும் அளித்த கிழவிக்கு நன்றியின் நிமித்தம் மரியாதை செய்வதற்

காகவாவது தான் திருமணத்தில் கலந்து கொள்ளப் போவதாகப் பிடிவாதமாகத் தெரிவித்த பரசு அப்படியே செய்தான்.

திருமண வீட்டில் கலாட்டா செய்ய வேண்டாம் என்று நினைத்த அதிகாரிகள் திருமணத்தில் கலந்து கொண்டு பரிசுப் பொருட்களைக் கொடுத்துவிட்டு வெளியேறியபோது பரசுவைப் பின்தொடர்ந்தார்கள். பரசுவின் நண்பர்களுக்கும் அரசு அதிகாரிகளுக்கும் இடையே கடுமையான சண்டை நடைபெற்றது. அரசுத் தரப்பு வீரர்கள் சிலர் கொல்லப்பட்டார்கள். ஒரு உயர் ராணுவ அதிகாரி பரசுவின் வீரத்தையும் நன்றி உணர்வையும் பாராட்டினார். அதே நேரம் அவனைத் திருத்தவும் விரும்பினார். பரசு தன் திருட்டுத் தொழிலை இனி தொடர்வதில்லை என்று உறுதிமொழி கொடுத்தால், மன்னனிடம் சொல்லி மன்னிப்பு வாங்கித் தருவதாகச் சொன்னார். அப்படியே செய்தார். பரசுவும் கொடுத்த வாக்கைக் காப்பாற்றி நல்ல குடிமகனாக வாழ்ந்தான்.

செய்துவிட்ட தவறுக்குத் தனியே பிராயச் சித்தம் செய்யவேண்டும் என்பதுகூட அவசிய மில்லை. தவறுகளை இனி செய்வதில்லை என்று முடிவு செய்து அதன்படி நடந்து கொண்டாலே போதுமானது.



## 17. எது தானம்?

தனிநபர் வாழ்க்கையிலும் சமுதாய அமைப்புகளிலும் தானம் பெறுவதும் கொடுப்பதும் நியதிகள். கார்கில் போர் நடந்து கொண்டிருந்தபொழுது மாநில அரசுகளும் பத்திரிகைகளும் நிதி திரட்டிப் பிரதமரிடம் கொடுத்தன. எல்லோரும் முடிந்த அளவு தானம் கொடுக்க வேண்டும்; கொடுத்ததைச் சொல்லிக் காட்டக்கூடாது; நினைத்தும் பார்க்கக் கூடாது. வாங்கியவர்கள்தான் நினைத்துப் பார்க்க வேண்டும். அதனால்தான் வலது கை கொடுப்பது இடது கைக்குத் தெரியக் கூடாது என்கிறார்கள்.

அந்தக் காலத்தில் மன்னர்கள் யாகங்கள் செய்த பொழுது மற்றவர்கள் பரிசுகளைக் குவித்தனர். மன்னர்களும் தம் பங்கிற்கு நிறையப் பரிசுகள் வழங்கி வந்தார்கள். அப்படிப்பட்ட யாக தானம் பற்றி இங்கே ஒரு கதை.

குருக்ஷேத்திரப் போர் முடிந்ததும் ஒரு பெரிய யாகம் செய்தார்கள் பாண்டவர்கள். ஏழைகளுக்கு நிறைய தானம் கொடுத்தார்கள். அப்படி ஒரு

யாகத்தை எவரும் செய்ததில்லை என்று எல்லோரும் மிகவும் பாராட்டினார்கள். யாகம் முடிந்த பின்னர் அங்கே ஒரு கீரிப் பிள்ளை வந்தது. அதன் உடம்பில் ஒரு பகுதி பொன்னாகவும், மற்ற பகுதி சாம்பல் நிறமாகவும் இருந்தது. யாக மண்டபத்தில் நுழைந்த அது அங்குமிங்கும் விழுந்து புரண்டது. பிறகு எல்லோரையும் பார்த்து “நீங்கள் பொய்யர்கள். இது யாகமே அல்ல,” என்று கூறியது.

கேட்டவர்கள் திகைத்தார்கள் – “என்ன இது? எவ்வளவு பொன்னும் பொருளும் கொடுக்கப் பட்டிருக்கிறது? இது சிறப்பான யாகம். இதை யாகம் இல்லை என்கிறாயா?” என்று கேட்டார்கள். கீரிப்பிள்ளை பதில் சொன்னது: “முன்பொரு முறை ஒரு சிறிய கிராமத்தில் ஒரு பிராமணர் தன் மனைவி, மகன் மருமகளுடன் வாழ்ந்து வந்தார். அவர்கள் மிகவும் ஏழைகள். பிறருக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பது மூலம் வந்த சிறிய வருமானத்தில் காலம் கழித்து வந்தார். அதற்கும் சோதனை வருவது போல, நாட்டில் ஒரு கடுமையான பஞ்சம் ஏற்பட்டது. பல நாட்கள் அந்தக் குடும்பம் பட்டினி கிடக்க நேர்ந்தது. அதிர்ஷ்டவசமாக ஒருநாள் காலை அந்த பிராமணருக்குக் கொஞ்சம் பார்லி மாவு கிடைத்தது. அதைப் பக்குவம் செய்து நான்கு பேரும் சாப்பிடத் தயாரான வேளையில் வாசற் கதவு தட்டப்பட்டது. கதவைத் திறந்தால் வாசலில் ஒரு விருந்தாளி. அந்த விருந்தாளியை பிராமணர் வீட்டிற்குள் அழைத்து வந்தார். தனக்கென எடுத்து

வைத்திருந்த பார்லி மாவுப் பதார்த்தத்தை வந்தவருக்குக் கொடுத்தார். கணநேரத்தில் அவர் அதைச் சாப்பிட்டு விட்டார். அதற்கு நன்றி சொல்லக் கூடாதோ அந்த மனிதர்? “ஐயா, நான் பத்து நாட்களாகப் பட்டினியாகக் கிடக்கிறேன். கொஞ்சம் மாவைக் கொடுத்து என் பசியைத் தூண்டி விட்டீர்களே,” என்றார். பிராமணரின் மனைவி தன் பங்கு மாவையும் விருந்தினருக்குக் கொடுத்தார். அப்படியும்கூட விருந்தாளி பசியாற வில்லை. நிலைமையை உணர்ந்த பிராமணரின் மகள் தன் பங்கு மாவைக் கொடுத்தார். அப்படியும் அவர் பார்த்த பார்வையின் குறிப்பறிந்து வீட்டு மருமகள் தன் பங்கு மாவைக் கொடுக்க, பசி தீர்ந்த விருந்தாளி அவர்களை வாழ்த்திவிட்டுப் புறப்பட்டார். ஆனால் அந்த பிராமணக் குடும்பத்து உறுப்பினர்கள் நால்வரும் பசி தாளாமல் அன்று இரவே இறந்து போனார்கள். அங்கே தரையில் சிந்தி இருந்த மாவு என் உடலில் பட்டதும் அந்தப் பகுதி பொன்னாக மாறியது. உங்கள் யாகம் சிறப்பானதாக இருந்திருந்தால், யாகசாலையில் விழுந்து புரண்ட போது என் மீதி உடலும் பொன்மயமாகியிருக்க வேண்டும். அப்படி ஆகவில்லை. எனவே, நீங்கள் செய்தது சிறப்பான யாகமல்ல.”

ஆக, தானம் கொடுப்பவர் யார், வாங்குவது யார், தானம் எவ்வளவு என்பதைவிட எந்த நிலையில் எவர் தானம் கொடுத்தார் என்பதே முக்கியம். யாகத்தின் செலவும் தானத்தின் அளவும்

பெரிதல்ல. என்ன மனத்துடன் எதைக் கொடுக்கிறோம் என்பதே முக்கியம். செய்யும் செலவு தர்மம் செய்பவனை உயர்த்தாது. மனோபாவமே முக்கியம்.

இதற்கு இன்னொரு பறவைக் கதை உண்டு. விருந்தோம்பலில் இது ஒரு வித்தியாசமான கோணம். காட்டில் காற்றும், மழையும் கூடிய சமயம் பறக்க முடியாமல் கீழே விழுந்து கிடந்த ஒரு பெண் புறாவைக் கண்ட வேடன் அதைக் கூண்டில் அடைத்துக் கொண்டு ஒதுங்க இடம் தேடி வந்தான். ஒரு பெரிய மரத்தடி பாதுகாப்பான இடமாகத் தோன்றியது. அங்கே தன் மனைவியைக் காணாமல் தவித்து ஒரு ஆண் புறா புலம்பிக் கொண்டிருந்தது. கூண்டில் பிடிபட்ட பெண் புறா தான் அங்கே இருப்பதாகக் குரல் கொடுத்தது. அந்த ஆண் புறா வேடனிடம் சொன்னது: "நீ என் மனைவியைப் பிடித்துக் கூண்டில் அடைத்து வைத்துள்ளாய். ஆயினும் இந்த மழையில் நாங்கள் வசித்து வரும் இடத்தில் தஞ்சமடைந்துள்ளாய். நீ எங்கள் அதிதி. என்ன வேண்டுமென்று சொல்."

அந்த வேடன் முதலில் குளிர்காய நெருப்பு கேட்டான். உடனே அந்த ஆண்புறா, இலைச் சருகுகளைக் குவித்து வைத்துவிட்டு, ஒரு கருமான் வீட்டிற்குப் போய் எரியும் கொள்ளிக் கட்டை ஒன்றைக் கவ்விக் கொண்டு வந்து தீ மூட்டித் தந்தது. வேடன் இதமாகக் குளிர் காய்ந்தான். அடுத்து பசிக்கு ஏதாவது வேண்டுமே என்றான். உடனே அந்த

ஆண்புறா, "உணவுதானே, இதோ கிடைக்கும் பார்" என்று சொல்லியபடி எரியும் நெருப்பில் 'பொத்'தென்று விழுந்தது. தன்னையே வேடனுக்கு உணவாகத் தந்தது. அதைக் கண்டு அதிர்ச்சியடைந்த வேடன் பெண்புறாவை விடுதலை செய்தான். வெளியே வந்ததும், கணவன் இறந்த காரணத் தினால் அதுவும் தீயில் விழுந்து தன்னை மாய்த்துக் கொண்டது. அப்பொழுது வானிலிருந்து இறங்கிய ஒரு விமானம் அந்த இரு பறவைகளையும் உயிர்ப்பித்து ஏற்றிக் கொண்டு பறந்தது. வேடன் மிகவும் வேதனைப் பட்டான். கால் போன போக்கில் அலைந்தான். ஒரு நாள் யதேச்சையாக மூண்ட காட்டுத் தீயில் அவனும் அழிந்து போனான்.

விருந்தோம்பல் என்றால் இதுதான். ஆனால் கதை என்ற காரணத்தினால் எல்லாமே அதீதமாகச் சொல்லப்பட்டிருப்பதாகத் தோன்றும். நீதிகளை உபதேசிக்கும் கதைகள் அப்படித்தான் எழுதப்படு கின்றன. நிகழ்ச்சிகளை விட்டுவிட்டு நீதிகளை மட்டும் பிடித்துகொள்ள வேண்டும். நாம் புரிந்து கொள்ள வேண்டியவை இவை:

திருள்வள்ளுவர் சொல்கிறார்:

*"வறியார்க்கொன்று ஈவதே ஈகை மற்றெல்லாம்*
*குறியெதிர்ப்பை நீர துடைத்து"*

அதாவது ஏழைகளுக்குக் கொடுக்கப்படுவதே தானம். மற்றதெல்லாம் எதையாவது எதிர்பார்த்து அளிக்கப்படும் பரிசு. மன்னர்கள் செய்த யாகம்,

அவர்கள் பெற்ற பரிசுகள், அளித்த சன்மானங்கள் எல்லாமே வள்ளுவர் வாக்கில் சொல்வதென்றால் 'குறியெதிர்ப்பு' — இலக்காக எதையாவது எதிர் பார்ப்பது. பாண்டவர்கள் செய்த யாகம் அப்படிப் பட்டதே. ஆனால் பார்லி மாவை விருந்தினருக்கு அளித்த ஏழை பிராமணன் எதை எதிர்பார்த்தான்? வேடனுக்கு உணவளிக்கத் தன் உடலையே தியாகம் செய்த புறா எதிர்பார்த்தது என்ன?

அதாவது ஒருவருக்கு எதையாவது கொடுக்க வேண்டும் என்றால், உடனே கொடுக்க வேண்டும்; முழுமையாகக் கொடுக்க வேண்டும். அதையே சொல்லிக் காட்டிக் கொண்டிருக்கக் கூடாது.

இதை அப்படியே வாழ்வியலிலிருந்து வணிக வியலுக்குக் கொண்டு வாருங்கள். வெளியாருக்கு இன்றைய நிலையில் கொடுத்தேயாக வேண்டிய கொடையை, தானத்தை, மறந்து விடுங்கள். ஆனால் உங்கள் ஊழியர்களுக்கு ஏதாவது கொடுக்க வேண்டு மென்று நினைத்தால் அதை உடனே கொடுங்கள், முழுமையாகக் கொடுங்கள். அதைச் சொல்லிக் கொள்ளாதீர்கள். பயன் பெற்றவர்கள் சொல்லிக் கொள்ளட்டும். அது பெருமை. அப்படிச் செய்தால் வானத்திலிருந்து தேர் எதுவும் வராவிட்டாலும் கூட, வையகத்தில் வாழ்வாங்கு வாழ்ந்த நல்ல பெயர் கிடைக்கும். அது போதாதா?



## 18. கிள்ளி, அள்ளி...

மனிதனின் பலவீனங்களில் ஒன்று பெயர் பெறத் துடிப்பது; புகழ் பெற ஏங்குவது. செயல் பாடுகளினால் பெயரும் புகழும் வருவது ஒருபுறம் வரவேற்கத்தக்கது. ஆனால் அதனையே தேடித் திரிவது தன் பெயர்ப் பலகையைத் தானே கழுத்தில் தொங்கவிட்டுக் கொண்டு அலைவது போன்றது. அதைப் பற்றி ஒரு கதை.

பெரிய வேதாளம், குட்டி வேதாளம் ஆகிய இரண்டும் காட்டில் ஒரு மரத்தில் வசித்து வந்தன. அந்தக் காட்டு வழியே யார் சென்றாலும் குட்டி வேதாளம் அவர்களைச் சோதித்துப் பார்க்கும். வாலிபர்களை அழகிய பெண் வேடத்தில் மயக்கும். வலிய ஆசையைத் தூண்டும். அதில் மயங்கினால் கொன்றுவிடும். இப்படி எதில் மனிதனின் பலவீனம் என்பதை அறிந்து கொண்டு பலவீனமானவர்களைக் கொன்றுவிடும். பொன், பொருள், மது, மாது என்று பலவீனங்களைத் தூண்டிவிட்டு அவற்றில் மயங்கு பவர்களை அந்த வேதாளம் கொன்றுவிடும்.

ஒருநாள் அந்தக் காட்டு வழியே ஒரு இளைஞன் போய்க் கொண்டிருந்தான். பெரிய வேதாளம் குட்டி வேதாளத்தை அழைத்து அவனைப் பரீட்சித்துப் பார்க்கச் செய்தது. குட்டி வேதாளம் முதலில் அழகானதொரு பெண்வேடம் தரித்துக் கொண்டு அவன் எதிரே சென்றது. “போம்மா, போ, பெண்களை நான் ஏறெடுத்துப் பார்ப்பதில்லை” என்று சொல்லியபடியே அந்த இளைஞன் தன் நடையைத் தொடர்ந்தான்.

அடுத்த கட்டத்தில் அவன் எதிரே வேதாளம் பொன்னையும் பொருட்களையும் பரப்பியது. அவன் அவற்றை சட்டை செய்யாமல் மிதித்துக் கொண்டே நடந்தான்.

மூன்றாவது கட்டமாக மதுக் கலயத்தையும், மாமிசத்தையும் எடுத்துக் கொண்டு ஒரு காட்டு வாசி வேடம் பூண்டு வேதாளம் இளைஞனின் எதிரே சென்றது. மது, மாமிசம் இரண்டையும் ஒதுக்கித் தள்ளிவிட்டு அந்த இளைஞன் தன் போக்கில் நடந்து கொண்டிருந்தான். ஏமாற்றமடைந்த குட்டி வேதாளம் பெரிய வேதாளத்திடம் நடந்ததையெல்லாம் சொன்னது.

“இதெல்லாம் இருக்கட்டும்; இதற்கு மேலும் ஒரு பரீட்சை இருக்கிறது. அதில் இவன் தேற மாட்டான் என்றே நினைக்கிறேன்; தேறினால் பிழைத்துப் போகட்டும்; எதற்கும் நானும் வருகிறேன்,” என்று சொல்லி பெரிய வேதாளம் சின்ன வேதாளத்தையும்

அழைத்துக்கொண்டு, வழிப்போக்கர்கள் போல் அவனைப் பின்தொடர்ந்தது. வேதாளங்கள் ஒரு கட்டத்தில் அவனைப்பார்த்து, "ஐயா, தாங்கள் மிகவும் வித்தியாசமான மனிதராக இருக்கிறீர்கள்: நாங்களும் பார்த்துக்கொண்டே வருகிறோம். பிரமாதமான சந்தர்ப்பங்களையெல்லாம் நழுவ விட்டுவிட்டு எந்தத் தவறும் செய்யாமல் வருகிறீர்களே," என்று பாராட்ட, "அதுதான் நான். வேறு யாராகிலும் இருந்தால் அதற்கெல்லாம் அடிமைப்பட்டிருப்பார்கள். நான் அப்படியல்ல. மற்றவர்களைவிட மேலானவன்; பார்த்தீர்களா?" என்று பதில் சொன்னான்.

பெரிய வேதாளம் சின்ன வேதாளத்தின் காதில் ரகசியமாகச் சொன்னது: "இவனை அடித்துக் கொல்."

ஏன் பெரிய வேதாளம் அப்படிச் சொன்னது என்று சின்ன வேதாளத்திற்குப் புரியவில்லை. எனினும் அவனை அடித்துக் கொன்றது. அதன் பிறகு பெரிய வேதாளத்திடம் காரணம் கேட்டது. அப்பொழுது பெரிய வேதாளம் சொன்னது: "இவன் தற்புகழ்ச்சிக்காரன். எனவே, கொலை செய்யப்பட வேண்டியவன்."

பொதுவாகப் புகழ்ச்சிக்கு மயங்காதவர்கள் என்று சொல்லிகொள்பவர்களையும் காக்காய் பிடிப்பவர்கள் வழிக்குக் கொண்டு வந்து விடுவார்கள். எப்படி? "சார், நீங்கள்ளாம் புகழுக்கு

மயங்கக் கூடியவரா என்ன?" என்று சொல்லியே. ஆனாலும் 'புகழ்' கூடாது என்று வள்ளுவரும் கூடச் சொல்லவில்லை. புகழ்தான் நிலைக்கக்கூடியதென்று அவர் சொல்லியிருக்கிறார்.

'புகழ்த் துறவு' என்பது இருப்பதாகத் தெரியவில்லை. ஏனென்றால் துறவிகளும் கூட ஏதாவது ஒருவகை புகழை விரும்பத்தான் செய்கிறார்கள் என்பதை நான் என் அனுபவத்தில் கண்டிருக்கிறேன். ஆக, புகழ் தவறல்ல; ஆனால் தற்புகழ்ச்சி என்பது தவறு.

முன்பெல்லாம் விழாக்களில் வரவேற்புரை நிகழ்த்துபவர்கள் அங்கே வந்திருப்பவர்களின் பெருமையைச் சொல்வார்கள். இப்பொழுதெல்லாம் அழைக்கப்பட்டவர்களே மேடைகளில் தம்மைப் பற்றி நேரடியாகவும், மறைமுகமாகவும் புகழ்ந்து பேசிக் கொள்வதைக் கேட்கிறேன். அப்பொழுது இந்தக் கதை நினைவுக்கு வரும்; சிரித்துக் கொள்வேன்; நல்லவேளை பெரிய வேதாளமும் சின்ன வேதாளமும் இந்த விழாவில் கலந்து கொள்ளவில்லையே என்று!

பொன்னில் ஆசையில்லாதவர்கள் கூடப் புகழுக்கு ஆசைப்படுவதுண்டு. பொன் இருந்தால் அதைக் கொடுத்துப் புகழ் பெறப் போட்டியிடுபவர்களும் உண்டு. போட்டி என்பது, எதை எவ்வளவு கொடுப்பது என்று இருந்தாலும் போட்டியாளர்களின் மனம் அதிகம் புகழ் பெறுவது

யார் என்ற நினைப்பிலேயே இருக்கும். இதனால் சிலர் தம் உதவியைச் சிறிய அளவில் பலருக்குச் செய்வார்கள். அதை ஊரே அறியும்படி விளம்பரப் படுத்திக் கொள்வார்கள்.

ஒரு கட்டத்தில் அசல் உதவியின் மதிப்பைவிட விளம்பரச் செலவு அதிகமானால்கூட வியப் பில்லை. ஆனால் இதுவும் தவறுதான். இதை விளக்க ஒரு கதை சொல்லப்படுகிறது – பாண்டவர்களையும் கர்ணனையும் கதாபாத்திரங்களாக்கி.

கர்ணன் பெரிய கொடை வள்ளல் என்பது நாம் அறிந்ததே. பாண்டவர்களும் இதை நன்கு அறிவார்கள். இருப்பினும் அவர்களிடையே இது குறித்து நாம் அந்த அளவுக்குப் பெயர் வாங்க வில்லையே என்ற ஏக்கமும் இருந்தது. அது போதாதென்று கொடையில் சிறந்தவன் கர்ணனே என்று கிருஷ்ண பரமாத்மாவே ஒருமுறை பாண்ட வர்களிடம் சொல்ல, கிருஷ்ணன் தான் சொல்வது நியாயம் என்பதை உணர்த்துவதற்காக அவர்களுக்கு ஒரு பரீட்சை வைத்தார். அது சோதனை என்பதைத் தெரிவிக்காதபடி. ஒரு சாதாரணக் குன்றை கிருஷ்ணர் பொன் குன்றாக மாற்றிவிட்டு, பொழுது முடிவதற்குள் நீங்கள் ஐவரும் அதைத் தானம் செய்துவிட வேண்டும் என்றார். பாண்டவர்கள் ஐவரும் ஊர் முழுவதும் தண்டோரா போட்டு மக்களை அழைத்துப் பொன் குன்றத்தை வெட்டி ஆளுக்குக் கொஞ்சம் என்று நாள் முழுவதும்

கொடுத்துக் கொண்டேயிருந்தார்கள். அப்படியும் கால்வாசிக் குன்றுகூடக் கரையவில்லை. கிருஷ்ணர் கேட்டார்: “தருமா, பொழுது சாயப் போகிறது. தோல்வியை ஒப்புக் கொள். கர்ணனைக் கொடுக்கச் சொல்லட்டுமா?”

நம்மால் கொடுக்கமுடியாத போது கர்ணன் மட்டும் எப்படிக் கொடுத்து விடப் போகிறான் என்ற நினைப்பில் பாண்டவர்கள் தம் தோல்வியை ஒப்புக் கொண்டார்கள். அப்பொழுது கர்ணன் அந்த வழியே தேரில் வந்து கொண்டிருந்தான். கிருஷ்ணர் கர்ணனை அழைத்து, “கர்ணா, இந்த மலை உனக்கு. பொழுது விடிவதற்குள் நீ இதைத் தானம் செய்ய வேண்டும் என்று சொன்னார்.”

கர்ணன் சிறிதும் தயங்காமல் சற்றுத் தொலைவில் பயிர் செய்து கொண்டிருந்த இரண்டு விவசாயிகளை அழைத்து, “நண்பர்களே, இந்த மலையை உங்களுக்கு தானமாகத் தருகிறேன், எடுத்துக் கொள்ளுங்கள்,” என்று சொல்லிவிட்டு எதுவும் நடவாதது மாதிரித் தன் வழியே சென்று விட்டான். அதுதான் வலது கை கொடுப்பது இடது கைக்குத் தெரியவராத தர்மம்.

இன்னொரு சூட்சுமமும் இந்தக் கதையில் இருக்கிறது. பாண்டவர்கள் மலையைக் கிள்ளிக் கொடுத்தார்கள். கர்ணன் அள்ளிக் கொடுத்தான். கொடுப்பதென்றால் அவ்வளவு விசாலமான மனம் இருக்க வேண்டும்.

## 19. எது போனாலும்

பொன்னும், முத்தும், வைரமும், வைடூரியமும் வாழ்க்கை ஆகிவிடுமா? மோதிரத்தில் உள்ள வைரத்தைப் பொடி செய்து சாப்பிட்டுத் தற்கொலை செய்துகொண்ட பணக்காரர்கள் உண்டு. பொன் உருக்க வைத்திருந்த அமிலத்தைக் குடித்து இறந்த ஏழைத் தொழிலாளிகளும் உண்டு. இவை எதுவும் இல்லாமல் நிம்மதியாக வாழ்ந்து வருபவர்களும் இருக்கிறார்கள்.

ஆக, பணம் மட்டும் வாழ்க்கையல்ல. பணம் இல்லாமல் வாழ்க்கை அமைவதும் இல்லை. பணம் முன்பின்னாக இருந்தாலும் ஒரு குடும்பத்தில் அவசியமாக இருக்க வேண்டியது என்ன? இதற்கு எத்தனையோ கதைகள் உண்டு. இங்கே இரண்டு.

ஒருநாள் இரவு ஒரு பணக்கார சேட்ஜியின் கனவில் தோன்றிய மகாலக்ஷ்மி சொன்னாள்: “சேட்ஜி, வெகு உத்தமமான நீ எவ்வளவோ புண்ணியங்கள் செய்திருக்கிறாய். அதனால் உன்னுடன் இத்தனை நாட்கள் நான் இருந்தேன்.

உன் புண்ணியச் சேமிப்புக் கணக்கு சில நாட்களில் தீர்ந்து விடுகிறது. எனவே அடுத்த சில நாட்களில் நான் உன்னைவிட்டுப் போய்விடுவேன். உனக்கு நீ கேட்கும் வரம் தரச் சித்தமாக இருக்கிறேன். என்ன வரம் வேண்டுமோ கேள்; ஆனால் நான் உன்னுடன் தங்கியிருக்க வேண்டுமென்று மட்டும் கேட்கக் கூடாது." திகைத்துப் போன சேட்ஜி உடனே வரம் கேட்க முன் வரவில்லை. மறுநாள் தன் குடும்பத் தாரைக் கலந்து ஆலோசித்து விட்டுக் கேட்பதாகச் சொன்னார்.

பொழுது விடிந்தது. சேட் தன் குடும்பத்தாரை அழைத்துக் கனவில் நடந்ததைச் சொன்னார். "முத்து, வைரம் போன்றவற்றை நிறையக் கேளுங்கள்," என்றார் அவர் மனைவி.

"ஏராளமான பொற்குவியலைக் கேட்கலாம்," என்றான் மூத்த மகன். "உணவுப் பண்டங்களை வாங்கிச் சேர்த்து வைத்துக் கொள்ளலாம்," என்றான் இரண்டாவது மகன். மனைகள், மாளிகைகள், நில புலன்கள், வாகனங்கள் என்று ஆளுக்கொரு யோசனை சொன்னார்கள். எதுவும் சரியென்று படவில்லை சேட்டுக்கு. அந்த நிலையில் வீட்டின் இளைய மருமகள் வந்தாள்; யோசனை சொன்னாள்:

"அப்பா, இவர்கள் எல்லோரும் சொன்னதை நீங்கள் கேட்கலாம். ஆனால் எப்பொழுது மகா லக்ஷ்மி உங்களை விட்டு நீங்குகிறேன் என்கிறாளோ, அப்பொழுதே இவையெல்லாம் போய்விடும்.

கேட்டால் கிடைக்கும். இவை எதுவும் நிலைத்து நிற்காதவை. எனவே வளமையிலும், வறுமையிலும் குடும்பத்தில் ஒருவர் மீது ஒருவருக்கு அன்பும் மதிப்பும் நிலைத்து இருக்க வேண்டும். அதையே கேளுங்கள்."

சேட்டுக்குத் தன் இளைய மருமகள் சொல்வதே சரி என்று தோன்றியது.

அன்றிரவு மகாலக்ஷ்மி கனவில் வந்தபோது சேட்ஜி கேட்டார்: "தாங்கள் என்னைவிட்டுச் செல்வதாக இருந்தால் செல்லலாம். இதுவரை தாங்கள் என்னுடன் இருந்து வந்ததற்கு நாங்கள் நன்றி சொல்ல வேண்டும். செல்வதற்கு முன்பு தாங்கள் எனக்கு ஒரு வரம் அருள வேண்டும். அதாவது எங்கள் குடும்பத்தாரிடம் எப்போதும் பரஸ்பரம் அன்பு நிலைத்திருக்க வேண்டும். இந்த வரம் மட்டும் போதும்."

மகாலக்ஷ்மி சொன்னாள்: "இப்படி ஒரு வரம் கேட்டதன் மூலம் நீ என்னை உன் வீட்டிலேயே கட்டிப் போட்டுவிட்டாய். எந்தக் குடும்பத்தில் உறுப் பினர்கள் மனமொத்து அன்புடன் வாழ்கிறார்களோ, அங்கு நான் நிச்சயமாக இருப்பேன்."

அன்பு இருக்கும் வீட்டில் லக்ஷ்மி கடாக்ஷம் உண்டு என்பதை விளக்குவதற்காகச் சொல்லப்பட்ட கதை இது. இதே போல் உண்மை இருக்கும் இடத்தில் கடவுள் இருப்பார் என்பதை உணர்த்தவும் கதை உண்டு.

சத்யவ்ரதன் என்று ஒரு மன்னன். பெயருக் கேற்றபடி சத்யசந்தன். ஒருநாள் பிரம்ம முகூர்த்தத் தின்போது, அதாவது, அதிகாலை நான்கு மணிக்கு, அவன் புனித நீராடப் புறப்பட்டான். அப்பொழுது தலைநகரத் தோரணவாயிலை விட்டு ஒரு அழகிய பெண் வெளியேறுவதைப் பார்த்தான்.

"யாரம்மா, நீ?"

"நான், தனலக்ஷ்மி; ஓரிடம் நில்லாதவள்."

மன்னன் அவளை விடைபெற அனுமதித்தான். அடுத்ததாக ஒரு ஆணழகன் வெளியேறினான்.

"யாருப்பா, நீ?"

"நான்தான் தர்மதேவன்; செல்வம் போனபின் இங்கே எனக்கென்ன வேலை? என்னைப் போகவிடு." மன்னன் அவனையும் வெளியேற அனுமதித்தான்.

அந்த நேரத்தில் மூன்றாவதாக ஒருவன் வெளியேறினான்.

"யார் நீ, எங்கே போகிறாய்," என்று மன்னன் கேட்டபொழுது வெளியேறிக் கொண்டிருந்தவன் சொன்னான்.

"மன்னனே, நான்தான் சதாசரண்; நற் பண்புகளுக்கு அதிபதி. செல்வமும், தர்மமும் சென்றபின் நற்பண்புகளுக்கு இங்கே என்ன வேலை? என்னையும் போகவிடு."

"அப்படியானால் நீயும் போகலாம்," என்று சொல்லி மன்னன் விடை கொடுத்தபொழுது தேஜோமயமாக ஒருவன் வந்தான். அவனும் வெளியேறலாமா என்று தயங்கி வாயிலில் வந்து நின்றான். தான் சத்யம் என்று சொல்லிக் கொண்டான்.

மன்னன் உடனே சொன்னான்: "மற்றவர்கள் யார் வெளியேறினாலும் கவலை இல்லை. நீ வெளியேறினால் அதை நான் எப்படி ஈடு செய்வேன்? நீ வெளியேறக் கூடாது. உள்ளே போ."

சத்யம் நகருக்குள் திரும்பிப் போயிற்று. அடுத்த கணம் ஏற்கெனவே வெளியேறிச் சென்ற தனலக்ஷ்மி, தர்மதேவன், சதாசரண் ஆகியோர் நகருக்கே திரும்பி வந்தனர். திரும்பியவர்கள் சொன்னார்கள்: "சத்யம் இங்கு இருக்க எங்கு போய் நாங்கள் என்ன சாதித்துவிட முடியும்?"

சத்யமே அனைத்திற்கும் அடிப்படை. ஆகவே தான் சத்யம், சிவம், சுந்தரம் – சத் – சித் – ஆனந்தம் என்று நம் சமயக் குரவர்களும் தத்துவ மேதைகளும் சொல்லியிருக்கிறார்கள். சத்தியம் அனைத்திற்கும் அடிப்படை. இந்து சமயம் மட்டுமல்ல; பிற சமய நூல்களும் இதே கருத்தினை வெவ்வேறு விதமாகச் சொல்லியிருக்கின்றன.

அதைத்தான் நம்மவர்கள் – ஏகம் சத். விப்ரா பஹுதா வதந்தி, உண்மை ஒன்றுதான். அதைப் பலர் பலவாறாகச் சொல்கிறார்கள் என்று குறிப்பிட்டார்கள்.

## 20. உறவும் பிரிவும்

பகைமையை மறக்க வேண்டும் என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆனால், பகையை மறப்பதும் பகைமையை உறவாக்கிக் கொள்வதும் வெவ்வேறு விஷயங்கள். பின்னது நடைமுறை சாத்யமானது அல்ல. உறவில் பிரிவோ பகைமையோ வராமல் பார்த்துக் கொள்வதே புத்திசாலித்தனம். பகை என்று வந்து விட்டால் பிறகு பிரச்சினைதான். அதைப் பற்றி நிறையவே கதைகள் உண்டு. மாதிரிக்காக இங்கே ஒன்று:

பிரமதத்தன் என்ற ஒரு மன்னனுக்கு ஒரு மகன் பிறந்தான். அதே நேரம் அரண்மனையை அண்டி யிருந்த ஒரு சிட்டுக்குருவியும் குஞ்சு பொரித்தது. குருவி அறிவு மிக்கது. நேர்மையானது. அந்தக் குருவி தன் இயல்புக்கேற்ப இளவரசனையும் தான் பெற்ற மகவைப் போலவே நேசித்தது.

இரை தேடிய பொழுது இரண்டு பங்காகத் தேடி தன் குஞ்சுக்கும் இளவரசனுக்கும் பங்கிட்டுக் கொடுத்து வந்தது.

ஒருநாள் விளையாடிக் கொண்டிருந்த பொழுது அரசகுமாரன் குருவிக் குஞ்சைக் கழுத்தை நெறித்துக் கொன்றுவிட்டான். இதை அறிந்து வருந்திய குருவி, நம்பியவனுக்கு நட்பை மீறி அரச குமாரன் துரோகம் செய்து விட்டதாகக் குற்றம் சாட்டியது. பழிக்குப் பழியாக அரசகுமாரன் மீது பாய்ந்து தன் கால்நகங்களால் அவன் கண்களைக் குத்திக் குருடாக்கி விட்டது.

மன்னன் மிகவும் நல்லவன். தர்ம நியாயங்கள் அறிந்தவன். ஆகவே குருவியிடம் சொன்னான்: "என் மகன் தப்பு செய்தான்; தண்டனை பெற்றான். ஆகவே நடந்து போனதற்கு நீயோ நானோ வருந்த வேண்டாம். ஒருவர் மீது ஒருவர் குற்றம் சாட்ட வேண்டாம். நடந்தது நடந்து விட்டது. இருவரும் அதை மறந்து விடுவோம். பழையபடிப் பழகுவோம்."

இதைக் கேட்ட குருவி சொன்னது: "நான் ஆத்திரத்தில் உங்கள் மகனைக் குருடாக்கி விட்டேன். என் இழப்பை நான் மறக்க முடியாது. உங்கள் இழப்பினை நீங்களும் மறக்க முடியாது. சேர்ந்தே இருந்தால் ஒருவரைப் பற்றி ஒருவர் சஞ்சலத்துடன் மனக் கசப்பை எப்படியாவது வெளியிட்டு விட வேண்டியிருக்கும். எனவே நான் வேறெங்காவது செல்வதுதான் நல்லது."

"அப்படிச் சொல்லாதே. பொல்லாத காலம் தான் எல்லாவற்றிற்கும் காரணம். ஆகவே, நடந்ததை

மறந்துவிடுவோம். உன் மீது எனக்கு மனத்தாங்கல் இல்லை. குருடானாலும் என் மகன் என்னுடன் தானே இருக்கிறான். ஆனால் நீயோ குஞ்சை இழந்து விட்டாய். உன் மீது எனக்கு வஞ்சம் ஏதும் இல்லை. அனுதாபம்தான் இருக்கிறது," என்றான் மன்னன். இருப்பினும் குருவி வேறு ஒரு நாட்டுக்குச் சென்றது.

வியாபாரத்தில் பங்காளிகளாகச் சேர்பவர்கள் ஏதாவது காரணத்தினால் பிரிய நேரிடுகிறது. பிரிந்த பின் பகைமை பாராட்டாமல் ஓரளவுக்கு நட்புடன் நடந்து கொள்ள நினைக்கலாம். அப்படியே நடந்து கொள்ளவும் கூடும். ஆனால் பிரிந்த பங்காளிகள் மீண்டும் சேர்ந்து கொள்வது என்பது வர்த்தக உலகில் வெகு அபூர்வம். அப்படியே சேர்ந்தாலும் ஒருவர் மீது மற்றவருக்கு இருந்த நம்பிக்கை அப்படியே தொடரும் என்று சொல்வதற்கில்லை. அதுதான் மனித இயற்கை.

நம் நாட்டிலும் சமீபத்தில் சில வர்த்தகக் குடும்பங்கள் தம் பங்குகளைப் பிரித்துக் கொண்டு, தனி நிறுவனங்களாகவே இயங்கி வருகின்றன. முதல் தலைமுறையின் ஒற்றுமை மூன்றாம் தலைமுறை வரை நீடிப்பதில்லை, வெகு சில விதிவிலக்குகள் நீங்கலாக. இந்தப் பிரிவினை முதலில் குடும்ப வாழ்க்கையில் தொடங்குகிறது. அப்புறம் தொழில் முதலீட்டில் தொடர்கிறது. ஒரு விதத்தில் இந்த வழியிலான பிரிவினைகள்கூட நல்லது என்றே சொல்லவேண்டும். சேர்ந்தே இருந்து ஒருவருக்கு

ஒருவர் எதிராகச் செயல்படுவதைவிட அவரவர் வழியில் அவரவர்கள் தனித்தனியாகச் செல்வது இரு தரப்பிற்கும் பயனுள்ளது.

அவநம்பிக்கை என்று வந்துவிட்டால் அதைத் தீர்த்துக் கொள்ளத் தனி வழி நாடுவதில் தவறு ஏதும் இல்லை, குறிப்பாகத் தனி மனித உறவு களிலும், தொழில் வர்த்தக முனைவுகளிலும். இங்கே குருவியின் நிலைப்பாடு நியாயமானதே. நண்பர்கள் அவநம்பிக்கை கொண்டு பிரிவது இயல்பு என்பதுபோல ஏதோ காரணங்களினால் திடீர் நட்பை ஏற்படுத்திக் கொள்வதும் தவறுதான். இதற்கும் ஒரு கதை சொல்லப்படுகிறது.

ஒரு மன்னனின் மென்மையான படுக்கையில் சிறியதொரு சீலைப்பேன் வாசம் செய்து வந்தது. மன்னனின் கண்களில் படாமல் அவன் ரத்தத்தை தினமும் துளித்துளியாகக் குடித்து வந்தது. மன்னனுக்கு வலி தெரியவில்லை.

இந்த நிலையில் ஒரு மூட்டைப் பூச்சி எப்படியோ அங்கு வந்து சேர்ந்தது. அதைப் பார்த்த சீலைப்பேன் "இது என் இடம். இங்கு வந்து ஏன் என் பிழைப்பைக் கெடுக்கிறீர்?" என்று கேட்டது. மூட்டைப் பூச்சியோ, "ஐயா, நான் உங்கள் நண்பனாகவே இருப்பேன். இரண்டு தினங்கள் மட்டும் என்னை உங்கள் விருந்தாளியாக ஏற்றுக் கொள்ளுங்கள்," என்று கெஞ்சியது.

சீலைப்பேன் மிகவும் தயங்கியது. இருப்பினும் மூட்டைப் பூச்சி நைச்சியமாகப் பேசி மன்னனின் மெத்தையில் ஓர் மடிப்பின் அடியில் ஒளிந்து கொண்டது. இருப்பினும் அதன் குணம் மாறுமோ? அன்றிரவே மூட்டைப் பூச்சி மன்னனைக் கடித்தது.

மறுநாள் காலை மன்னன் தன் ஏவலர்களை அழைத்து இரவில் தன்னை ஏதோ பூச்சி கடித்ததாகச் சொன்னதும், அவர்கள் மெத்தையை ஆராய சீலைப்பேன் தட்டுப்பட்டது. அது நசுக்கிக் கொல்லப் பட்டது. ஒளிந்து கொண்ட மூட்டைப் பூச்சி தப்பித்து விட்டது.

வாழ்க்கையிலும், வணிகத்திலும் சாமர்த்திய மாகப் பேசி மயக்கும் மூட்டைப் பூச்சிகளுடன் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். வெட்டிப் பேச்சில் மயங்கக் கூடாது. மயங்கினால் வாழ்க்கையும், வணிகமும் பாழாகிவிடும்.

ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு – "உன் நண்பர்களைச் சொல்; உன்னைப் பற்றி நான் சொல்கிறேன்" – என்று.

இதே கருத்து வேறு மொழிகளில் வெவ்வேறு வாசகங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. சொற்கள் வேறுபடுகின்றன. ஆனால் பொருள் ஒன்றுதான்.

நல்ல சகவாசமே நல்ல வாழ்க்கைக்கு வழி காட்டும். அதனால்தான் அற்ப சகவாசம் பிராண சங்கடம் என்று நம் பெரியவர்கள் சொல்லியிருக் கிறார்கள்.

பள்ளி, கல்லூரிகளில் படிக்கும் காலத்திலும், பணியில் அமர்ந்து அதில் முன்னேறிவரும் கால கட்டத்திலும், வியாபாரத்தில் பங்காளிகளைச் சேர்த்துக் கொள்வதிலும் நல்ல சகவாசம் தேவை.

கூடா நட்பு குடியைக் கெடுத்துவிடும். பள்ளிப் பருவத்தில் மிகவும் நல்ல மாணவர்களாக இருந்தவர்கள் கல்லூரி நாட்களில் கெட்டுப் போனதுண்டு. பள்ளி, கல்லூரி நாட்களில் ஒழுங்காக இருந்தவர்கள், பணியில் சேர்ந்த பின்னர் நல்ல வழிகாட்டுதல் இன்றிக் கெட்டுப் போனதற்கும் நிறைய உதாரணங்கள் உண்டு.

அதுபோலவே வியாபாரத்தில் புதிய பங்காளிகளைச் சேர்த்துக் கொள்வதில் கவனம் தேவை. கெட்டவர்கள் சகவாசம் வியாபாரத்தில் நஷ்டம் ஏற்படுத்தும். அத்துடன் ஏற்கெனவே பெற்றிருந்த நல்ல பெயரையும் கெடுத்துவிடும்.

அதனால்தான் பெரியவர்கள் சேரிடம் அறிந்து சேர் என்றார்கள். இதையெல்லாம் அனுபவப்பட்ட பின்னர்தான் புரிந்த கொள்ள வேண்டுமென்ப தில்லை. அடுத்தவர்கள் பட்டபாடே நமக்கு ஒரு பாடமாக இருக்க வேண்டும். அதற்காகத்தான் இப்படிப்பட்ட கதைகள் சொல்லப்பட்டிருக்கின்றன.



## 21. தந்தையும் மகனும்

மகன் தந்தைக்கு என்ன செய்ய வேண்டும் என்பதையெல்லாம் கூட்டுக் குடும்பங்களில் இருந்து வந்தவர்கள் தம் செயல்பாடுகளின் மூலம் நிரூபித்து வந்தார்கள். அந்த நிலையிலும் திருக்குறள் போன்ற பொது நூல்களும் நீதி சாஸ்திரங்களும் இந்தத் தந்தை – மகன் உறவு, பாசம், கடமை பற்றியெல்லாம் விளக்கமாகச் சொல்லியிருக்கின்றன.

சுமார் ஐம்பது வருடங்களுக்கு முன் தொடக்கக் கல்விப் பாடப் புத்தகத்தில் தவறாமல் ஒரு கதை இடம் பெறும். ஒரு நடுத்தர வயது நபர் முதிர்ந்து ஓடாகிப் போய், உழைக்க முடியாத நிலையில் இருந்த தன் தந்தைக்கு அலுமினியத் தட்டில் சோறு எடுத்து வைப்பது வழக்கம். அது நசுங்கி ஓட்டையாகப் போயிற்று. மகன் சுத்தம் செய்வது இல்லை. சிறுவன் சில சமயங்களில் முதியவரின் தட்டை ஒளித்து வைத்து விடுவான். அதை ஒரு விளையாட்டாக எடுத்துக் கொண்ட சிறுவனின் தந்தை ஒருநாள் 'தட்டு எங்கே?" என்று கேட்க, சிறுவன் சொன்னான்: "நான்தான் அதை பத்திரமாக வைத்திருக்கிறேன்,

அப்பா. நீயும் கிழவனான பிறகு உனக்குச் சோறு போட வேண்டுமே; அதற்காக எடுத்து வைத்திருக் கிறேன்." அப்பொழுதுதான் தந்தைக்குத் தான் கடமையைச் சரியாகச் செய்யவில்லை என்று உறைத்தது. அதன் பிறகு அவன் தந்தைக்கு நல்ல வட்டிலில் நல்ல ஆகாரம் கொடுத்தான் என்று கதை முடியும். நாம் நம் பிள்ளைகளுக்கு நல்லதே செய்ய வேண்டும். அதை அவர்கள் நினைவில் வைத்துக் கொண்டு பிற்காலத்தில் நமக்கு நல்லது செய்கி றார்களோ இல்லையோ, கெட்டது செய்தால் நமக்கு உடனே கெட்டது செய்யத் தயங்க மாட்டார்கள் என்பதை உணர்த்துவது மேற்சொன்ன கதை. இது பாமரனுக்குச் சொல்லப்பட்டது. அறிவு ஜீவிகளுக் காகவும் தந்தை மகன் உறவு வேறு சில கதைகளில் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி ஒரு கதை:

கஹோடர் என்று ஒரு முனிவர். தன் மனைவி சுஜாதாவுடன் ஒரு ஆசிரமத்தில் வேதம் கற்றும் கற்பித்தும் வாழ்ந்து வந்தார். இரவில் வேதம் கற்றுக் கொள்வார். பகலில் சிஷ்யர்களுக்குக் கற்பிப்பார். ஒருநாள் கஹோடர் வழக்கம்போலத் தன் சிஷ்யர்களுக்கு வேதம் கற்பித்து வந்தார். அப்பொழுது எங்கிருந்தோ ஒரு குரல் கேட்டது: "தந்தையே இரவு முழுவதும் பாடம் கற்றீர்கள். இருப்பினும் இப்பொழுது நீங்கள் சரியாகக் கற்பிக்க வில்லையே." திடுக்கிட்டுப் போன முனிவர் சுற்றும் முற்றும் பார்த்தார். எங்கிருந்து அந்தக் குரல் வந்தது என்பது புலப்படவில்லை. எனவே போதனையைத்

தொடர்ந்தார். சற்று நேரத்திற்குப் பின் அதே குரல்: "தந்தையே, நீங்கள் சரியாக போதிக்கவில்லை."

சிஷ்யர்கள் முன்னிலையில் தம்மை இப்படி அவமானப்படுத்தும் குரல் யாருடையதாக இருக்கும் என்று கஹோடர் அவதானித்த பொழுது அது தன் மனைவி சுமக்கும் கருவின் குரல் என்பது புரிய வந்தது. மறுபடியும் அதே குரல்: "தந்தையே, உங்களிடமிருந்து கேட்டறிந்த சாஸ்திரத்தின் அடிப்படையில் சொல்கிறேன். நீங்கள் கற்பிக்கும் பாடத்தில் தவறு இருக்கிறது."

கருவிலே திருவுடைய மகனைப் பெறப் போகிறோம் என்ற பெருமை பொங்கியிருந்திருக்க வேண்டிய முனிவரின் மனதில் ஆத்திரம் பொங்கியது காரணம் அவரது அபரிமிதமான வித்யா கர்வம். கோபத்தில் கொதித்தார். தன் மகனே ஆயினும், இனி பிறக்கப் போகிற கருவாக் இருப்பினும், அந்த ரத்த பந்தத்தைப் பொருட்படுத்தாமல் சபித்தார். "அடேய், கோணல் புத்திக்காரனே, பேச்சில் உள்ள கோணல் இனி உன் உடலிலும் தெரிய வரட்டும். உன் உடல் எட்டுக் கோணலாகப் போகட்டும்."

சாபம் பலித்து விட்டது. எட்டுக் கோணல் களுடன் பிறந்த குழந்தை 'அஷ்டாவக்கிரர்' என்று பெயரிடப்பட்டது. தந்தையை எதிர்த்துப் பேசும் மகன் உலகில் உண்டு. அந்தக் காலத்திலிருந்தே. ஆனால் தாயின் வயிற்றுக்குள்ளிருந்தபடியே தந்தையை எதிர்த்த சிசு அஷ்டாவக்கிரன் மட்டுமே

என்று சொல்லலாம். ஆனால் அது பிறப்பதற்கு முன்பு. பிறந்தபின் அஷ்டாவக்கிரர் திருவள்ளுவர் சொன்னதை அப்படியே செய்தார்.

"மகன் தந்தைக்காற்றும் உதவி இவன்தந்தை
எந்நோற்றான் கொல்எனும் சொல்."

அந்த நிகழ்ச்சியும் சுவாரசியமானதே. அதாவது அஷ்டாவக்கிரர் பிறப்பதற்கு முன்பு ஜனகனின் ராஜ சபையில் நடைபெற்ற ஒரு விவாதத்தில் 'பந்தி' என்ற அறிஞருடன் கஹோடர் போட்டியிட்டுத் தோற்றுப் போனார். பந்தய நிபந்தனைப்படி கஹோடர் ஜலசமாதியாகிப் போனார். கஹோடரைப் போல வேறு சிலரும் பந்தியிடம் தோற்று உயிரிழந்தார்கள். பால்ய காலத்தில் இந்த நிகழ்ச்சி பற்றியும் தனக்குத் தந்தை கொடுத்த சாபம் பற்றியும் தெரிந்து கொண்டார். சாஸ்திர அறிவு பூரணத்துவம் பெற்று விட்டதாக உணர்ந்து கொண்ட அஷ்டாவக்கிரர் ஜனகனின் சபைக்குச் சென்று பந்தியுடன் வாதிட முன்வந்தார்.

அஷ்டாவக்கிரர் ராஜசபையில் நுழைந்ததும் அவரது கோணல் மாணலான உடலைப் பார்த்து எல்லோரும் கேலியாகச் சிரித்தார்கள். அஷ்டாவக்கிரர் அதைப் பொருட்படுத்தவில்லை. "என் உடலைப் பார்க்காதீர்கள்; அறிவைப் பாருங்கள்," என்று சொல்லி அவர்களை அடக்கினார்.

வாதத்தில் தோற்றால் அதன் முடிவு என்ன என்பதனை ராஜா ஜனகர் அஷ்டாவக்கிரரிடம்

சொன்னார். அதை ஏற்று வாதம் தொடங்கிய அஷ்டாவக்கிரர் பந்தியைத் தோற்கடித்தார். பலரை ஜலசமாதியாக்கிய பந்தி தானே ஜலசமாதியாக வேண்டிய கட்டம் அது. அப்பொழுது பந்தி சொன்னார்: "நான் நீரில் மூழ்க பயப்படவில்லை. நான் வருண பகவானின் மகன். என் தந்தை வருண லோகத்தில் ஒரு யாகம் நடத்துகிறார். அதற்குப் புலவர்கள் தேவைப்பட்டனர். எனவே இந்த வாதத்தைச் சாக்காக வைத்து அவர்களை நீரில் மூழ்கடித்தேன்."

ஜனகர் அஷ்டாவக்கிரரிடம் என்ன பரிசு வேண்டுமானாலும் கேட்கலாம் என்றார். அஷ்டாவக்கிரரோ, "என் தந்தையை உயிர்ப்பித்து மீட்டுத் தாருங்கள்; அது போதும்," என்றார். அதுதான் மகனுக்குத் தந்தை மீதுள்ள பாசம்.

அப்பொழுது பந்தி சொன்னார்: "வருண லோகத்தில் இப்பொழுது யாகம் முடியப் போகிறது என்னிடம் தோற்ற எல்லா அறிஞர்களும் உயிருடன் மீள்வார்கள், கஹோடர் உட்பட," என்று சொல்லவும் மாண்ட அறிஞர்கள் யாவரும் மீண்டு வரவும் சரியாக இருந்தது. எல்லோரும் அஷ்டாவக்கிரரைப் பாராட்டிக் கொண்டிருந்த நேரத்தில் கஹோடர் அவையில் நுழைந்தார். வாதிட்டுத் தன்னை மீட்ட மகனைப் பார்த்து, "மகனே, உன்னுடைய ஞானம் என்னை மட்டுமல்லாது, இப்புலவர்களையும் மீட்டு வந்துள்ளது. நான் உன்னிடம் மன்னிப்பு கேட்கிறேன்.

இப்பொழுதே போய் 'சமங்கா' என்ற நதியில் மூழ்கி நீராடிவிட்டு வா; உன் வக்கிரம் யாவும் நீங்கிவிடும்..."

அஷ்டாவக்கிரம் அப்படியே செய்து தன் உடல் கோணல்கள் நிமிர்த்தப் பெற்றார்.

இன்றைய நிலையில் கருவில் உள்ள மகனை சபிக்கும் சக்தி எவருக்கும் இல்லை. கருவில் இருக்கும் பொழுது அந்தக் கருவைக் காக்க அவ்வப் போது மருத்துவமனைகளுக்குச் சென்று கரு சுமக்கும் தாயை கவனித்துப் போஷித்து வருகி றார்கள். அந்தக் கரு உருவாகிப் பிறந்து வளர்ந்து வரும் காலத்திலேயே பெற்றோரை அலட்சியம் செய்கிறது; அவமானப்படுத்துகிறது. இதை நான் மிகைப்படுத்திச் சொல்லவில்லை. எத்தனையோ அநாதை ஆசிரமங்களுக்கும் முதியோர் இல்லங் களுக்கும் சென்றிருக்கிறேன். அங்குள்ளவர்கள் பற்றிக் கேட்டறிந்திருக்கிறேன். வசதியாக இருக்கும் பிள்ளைகள், பெண்களால் ஒதுக்கப்பட்டுத் தவிக்கும் பெற்றோர்களின் எண்ணிக்கை அதிகமாகி வருகிறது என்பதே உண்மை. கூட்டுக் குடும்பம் குலைந்ததும் இதற்கு ஒரு காரணம். கூட்டுக் குடும்பம் என்பது உடலால் ஓரே இடத்தில் வசிப்பதல்ல. மனப்பாங் கினால் ஒன்றுபடுவது முக்கியம். முதியோர் இல்லங் களுக்கும் செல்ல முடியாமல் பிள்ளைகளுடன் மகிழ்ச்சியாகச் சேர்ந்து வாழ முடியாதவர்களின் எண்ணிக்கை இன்று அதிகமாகி வருகிறது என்பது வருத்தத்திற்குரியது.

## 22. கடமை தவறாமல்

மகன், தந்தை; கணவன், மனைவி – என்ற உறவுகள் எப்படி அமைய வேண்டும் என்பதற்கு இதிகாசங்களிலும் இலக்கியங்களிலும் நிறையக் கதைகளும் நிகழ்ச்சிகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. இளம் வயதில் இந்தக் கதைகளை வளரும் தலைமுறைக்குச் சொல்ல வேண்டும் என்று ஒரு காலத்தில் பெரியவர்கள் நினைத்தார்கள். செய்தார்கள். சுதந்திரம் பெற்ற பிறகு யார் யாருக்கு என்னென்ன வேலைகளோ, கவலைகளோ, அந்த அறிவுரைக் கதைகளுக்கு வீடுகளிலும் பள்ளிக் கூடங்களிலும் போதிய இடம் கிடைக்கவில்லை. பழைய கதைகள் ஒதுக்கப்பட்டு விட்டன. ஆனால், பல கதைகளின் தாத்பரியம் இன்றும் நமக்கு ஒத்து வரக்கூடியது. அப்படி ஒரு கதை.

ஒரு இளம் துறவி காட்டுக்குச் சென்றார். அங்கு தியானம், வழிபாடு, யோகப் பயிற்சி என்று மனதை ஒருநிலைப்படுத்தி பெரிய தபஸ்வி ஆனார். ஒரு முறை அவர் மரத்தடியில் அமர்ந்திருந்த பொழுது அவர் தலை மீது சில சருகுகள் விழுந்தன.

நிமிர்ந்து பார்த்தார். காகமும் கொக்கும் சண்டை போட்டுக் கொண்டிருந்தன. சலசலப்பில் இலைச் சருகுகள் விழுந்துவிட்டன என்பதைப் புரிந்து கொண்டார். அவரது கோபக் கனலில் அந்தப் பறவைகள் வெந்து சாம்பலாயின. கோபம் வந்த தபஸ்விக்குத் தம் எரிக்கும் சக்தி குறித்துப் பெருமிதமும் ஏற்பட்டது. அன்று வழக்கம்போல் அன்னதானம் பெறுவதற்குப் பக்கத்து ஊருக்குச் சென்றார். அங்கே ஒரு வீட்டின் முன் நின்று ‘பவதி பிக்ஷாம் தேஹி’ (எனக்கு உணவு இடுபவர் ஆகுங்கள்) என்று குரல் கொடுத்தார்.

“மகனே, கொஞ்சம் பொறு,” என்று உள்ளேயிருந்து குரல் வந்தது.

“என்னையா காக்க வைக்கிறாய்? உன்னை என்ன செய்கிறேன், பார்!” என்று கொதித்தார் அந்த இளம் துறவி. அவரது நினைப்பை அப்படியே அறிந்தபடி, அந்த வீட்டுக்குள் இருந்த பெண்மணி பதில் சொன்னாள்: “மகனே, உன்னைப் பற்றி அவ்வளவு பெரிதாக நினைத்துக் கொள்ளாதே. நான் கொக்குமல்ல; காகமுமல்ல. உன் கோபம் என் மீது பாய்ந்தால் நான் சாம்பலாக மாட்டேன்.”

திகைத்த துறவி அங்கே காத்திருக்க வேண்டியிருந்தது. வேறு வழியும் இல்லை. அத்துடன் அந்தப் பெண்மணி கொக்கையும் காகத்தையும் தாம் எரித்ததை எப்படிக் கண்டு கொண்டார் என்பதை அறிந்து கொள்ளும் ஆர்வமும் அவருக்கு இருந்தது,

தம் கோபம் அங்கே செல்லுபடியாகவில்லையே என்ற வருத்தம் இருந்தாலும். அந்தப் பெண்மணி வெளியே வந்ததும் அவர் கால்களில் விழுந்த துறவி கேட்டார்: "தாயே, கொக்கையும் காகத்தையும் நான் எரித்ததைத் தாங்கள் எப்படி அறிவீர்கள்?"

"மகனே, நான் உன் போன்ற தபஸ்வி அல்ல. யோகம், தவம் தெரியாது. எனக்கென விதிக்கப் பட்டுள்ள குடும்பக் கடமைகளைத் தவறாமல் செய்து வருகிறேன். என் கணவர் நோய்வாய்ப்பட்டி ருக்கிறார். அவருக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்த பொழுது குரல் கொடுத்தாய். எனவே உன்னைக் காத்திருக்கும்படிச் சொன்னேன். திருமணத்திற்கு முன்பு தாய் தந்தையருக்கு கவனமாக என் கடமைகளைச் செய்தேன். இப்பொழுது கணவனுக்கு. அதனால் எனக்குப் பிற இடங்களில் நடைபெறும் நிகழ்ச்சிகள் தெரிய வருகின்றன."

இந்த பதிலால் திருப்தியடையாத துறவி அங்கேயே தயங்கி நிற்க, "மகனே, மேலும் விளக்கம் வேண்டுமென்றால் பக்கத்து ஊரில் இன்று நடக்கும் சந்தைக்குப் போ. அங்கே ஒரு வியாதன் இருப்பான். அவனிடம் நீ விளக்கம் பெறலாம், என்றார் அந்தப் பெண்மணி. (வியாதன்: கசாப்புக்கடைக்காரன்)

துறவிக்குப் பசிகூட மறந்துவிட்டது. நேரே பக்கத்து ஊர்ச் சந்தைக்குப் போனார். அங்கே ஒரு வியாதனைக் கண்டார். கொழுத்த, பருமனான அந்த வியாதன் பெரிய கத்தியால் இறைச்சியைக் கூறு

போட்டு, வாங்க வந்தவர்களிடம் விலைபேசி விற்று வந்தான். துறவி யோசித்தார். "இவனைப் பார்த்தால் ஒரு அசுரன் போல் தெரிகிறது. இவனிடமா நான் ஞானோபதேசம் பெறப்போகிறேன்? அடக்கடவுளே."

இதற்கிடையில் துறவியைப் பார்த்த வியாதன் "சுவாமி, சற்றே அமர்ந்திருங்கள். வியாபாரத்தை முடித்துவிட்டு வருகிறேன்," என்றான். வேலை முடியவும் அவரை அழைத்துக் கேட்டான்: "ஆமாம், அந்தப் பெண்மணிதானே உங்களை அனுப்பியது?" துறவி அதைக் கேட்டுத் திகைத்துப் போனார்.

வியாதன் துறவியை வீட்டுக்கு அழைத்துச் சென்றான். துறவி அமர்வற்காக இருக்கையை அளித்துவிட்டு, "இங்கேயே இருங்கள், சற்று நேரத்தில் வந்து விடுகிறேன்," என்று சொல்லிவிட்டு தன் முதிய தாய் தந்தையரைக் குளிப்பாட்டி, உணவூட்டி, மனம் மகிழப் பணிவிடை செய்து அவர்கள் ஓய்வெடுத்துக் கொள்ளத் தொடங்கிய பொழுது துறவியிடம் வந்து, "ஐயா, தாங்கள் என்னிடம் வந்துள்ளீர்கள். நான் உங்களுக்கு என்ன செய்ய வேண்டும்?" என்று பணிவாகக் கேட்டான்.

துறவி அவனிடம் ஆன்மா பற்றி, கடவுள் பற்றி, மக்களின் மனோபாவங்கள் பற்றிக் கேள்விகள் கேட்டார். வியாதன் ஒவ்வொரு கேள்விக்கும் நீண்ட விளக்கம் தந்தான். மகாபாரதத்தில் அது 'வியாத கீதை' என்று பெருமைப் படுத்தப்படுகிறது. வியாதன் தன் விளக்கத்தை முடித்ததும் துறவி கேட்டார்:

"இவ்வளவு பெரிய ஞானவானான தாங்கள் ஏன் இன்னும் வியாதனாக இருக்கிறீர்கள்? இது இழிதொழில் அல்லவா?"

"அப்படிச் சொல்லமுடியாது. கடமைகளில் எதுவும் இழிவானதல்ல; கேவலமானதல்ல. என் தொழில் வேறு; அன்றாடக் கடமைகளுக்கு அது இடையூறு அல்ல. உங்கள் யோகம் எனக்குத் தெரியாது. ஒரு இல்லறத்தானாக என் கடமைகளைச் செய்து வருகிறேன். நான் வீட்டைத் துறந்து காட்டுக்குப் போகவில்லை. எனக்கு சிந்தித்தவை யெல்லாம் கடமைகளைச் செய்து வருவதனால் பெற்றவையே. மற்றபடி ஒன்றுமில்லை," என்றான். அவரவர் தம் கடமையைச் செய்துவர வேண்டும். அதுவே உயர்ந்த வாழ்வு என்று பகவத் கீதை சொல்கிறது. அதுவே ஸ்வதர்மம் என்பது.

மேற்சொன்ன கதையைக் கொஞ்சம் அலசுங்கள். கோபத்தில் எதையும் எரிக்கும் சக்தி ஒரு துறவிக்கு வாய்த்து விடுவதனால் அவர் எதையும் எரிப்பேன் என்று செயல்படுவது தவறு. கொக்கும் காகமும் சாம்பலாகலாம். பத்தினியும் கடமை வழுவாத கசாப்புக் கடைக்காரனும் அந்தக் கோபத்தால் பாதிக்கப்படுவதில்லை. அற்பக் காரணங்களுக்காக எதிர்த்துப் பேசமுடியாத ஜந்துக்களைக் கொல்லும் ஒரு துறவியைவிட இல்லறத்திலிருந்தபடி கடமைகளைச் செய்பவர்கள் மேலானவர்கள்.

இதெல்லாம் போகட்டும். இன்றைய வாழ்வில் நமக்குத் தேவையான இன்னொரு பாடம் இதில் இருக்கிறது. அதாவது எங்காவது, யாரையாவது பார்க்கச் சென்றால் நாம் எவ்வளவுதான் பெரியவர்களாக இருந்தாலும் அவர்கள் தம் முக்கிய வேலையில் ஈடுபட்டிருந்தால் அப்பொழுது அவர்களைத் தொந்தரவு செய்யக் கூடாது. அவர்கள் நமக்காக நேரம் ஒதுக்கும் வரை காத்திருக்க வேண்டும். காத்திருப்பதற்கு ஆத்திரப்படக்கூடாது. ஆத்திரப்பட்டால் காரியம் நடக்காது. நமக்கு நம் வேலை முக்கியம் என்பது போல நாம் பார்க்கச் செல்பவர்களுக்கும் அவர்களது வேலை முக்கியம். அதற்கு நாம் இடையூறாக இருக்கக்கூடாது.

அத்துடன் நம் ஒவ்வொருவருக்கும் தினமும் பலவிதமான கடமைகள் இருக்கின்றன, மகனாக, தந்தையாக, கணவனாக, முதலாளியாக, வேறு இடத்தில் ஊழியனாக. இந்த வகைக் கடமைகள் ஒன்றுக்கொன்று இடிக்கும்பொழுது மனிதனுக்குக் கோபம் வருகிறது. தடுமாறுகிறான். தன் நிலை இழக்கிறான். இதை 'ஸ்ட்ரெஸ்', 'ஹைப்பர்டென்ஷன்' என்றெல்லாம் சொல்கிறார்கள். அவற்றைத் தவிர்ப்பதற்கான வழிமுறைகளைச் சொல்லச் சில நிறுவனங்கள் வகுப்புகளும் நடத்துகின்றன.

பழங்காலத்தில் இலக்கியங்கள் இதிகாசங்களே வகுப்பறைகள். அவற்றில் இப்படிப்பட்ட கதைகளே பாடங்கள்.

## 23. ஏட்டோடு நின்றால்

'ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது' என்ற பழமொழி தெரிந்திருக்கும். படிப்போடு அனுபவமும் சேர வேண்டும். அதனால்தான் இப்பொழுது வெறுமனே 'கல்வி' என்று சொல்லாமல், தொழிற் கல்வி, வாழ்க்கைக் கல்வி என்றெல்லாம் குறிப்பிடு கிறார்கள். பிழைப்புக்கு வழி செய்யாத கல்வியினால் ஒரு பிரயோஜனமுமில்லை.

அறிஞர்கள் அதைப் பலவிதமாகச் சொல்லி இருக்கிறார்கள். கட்டுரைகளாக எழுதி இருக்கி றார்கள். கதைகளாகவும் சுவையான நிகழ்ச்சி களாகவும் விவரித்திருக்கிறார்கள்.

அந்தக் காலத்தில் பள்ளிக்கூட ஆங்கிலப் பாடத்தில் 'ஒரு கிராமத்துக் கிரிக்கெட் விளையாட்டு' என்று கட்டுரை இருந்தது. கிராமத்து இளைஞர்கள் கிரிக்கெட் விளையாடிக் கொண்டிருந்தார்கள். ஒருவன் பந்தைச் செங்குத்தாக அடிக்க, அது உயரே, வெகு உயரே எழும்பியது. அது இன்ன வேகத்தில் இன்ன திசையில் செல்வதால் இன்ன இடத்தில்

விழும் என்று கணக்கிட்டார் விளையாட்டைப் பார்த்துக் கொண்டிருந்த பௌதீகப் பேராசிரியர். சரியாக அந்த இடத்தில் நின்று கொள்ளவும், வேகமாக வந்த பந்து அவர் தலையில் பட்டுக் காயப் படுத்தவும் சரியாக இருந்தது. பந்தின் வேகத்தையும் விழும் இடத்தையும் கணித்த அவருக்கு அந்த இடத்தை விட்டு சற்றுத் தள்ளி நிற்க வேண்டும் என்ற ஞானம் இல்லாமற் போயிற்று.

அதுபோல ஒரு வானியல் சாஸ்திரி வானத்து நட்சத்திர மண்டலங்களையெல்லாம் அண்ணாந்து பார்த்துக் கொண்டு நடந்தபடியே அடுத்த சில நாட்களில் மழைபெய்யுமா என்று கணக்குப் போட்டுக் கொண்டே வந்தார். அப்படியே 'பொத்' தென்று திறந்திருந்த சாக்கடையில் விழுந்து விட்டார். வானத்தைப் பார்த்தவர் தரையைப் பார்க்கத் தவறி விட்டார்.

இதேபோன்று ஒரு கதை: குருகுல வாசத்தின் நிறைவுக் கட்டத்தில் சீடன் ஒருவன் ஞான நாட்டத்திற்குச் சென்று, பன்னிரெண்டு வருஷங்கள் கழித்துத் திரும்பினான். "என்ன செய்தாய் இவ்வளவு காலமும்?" என்று குரு கேட்க "ஹடயோகம் கற்றேன்; இக்கரையிலிருந்து அக்கரைக்கு நான் நீரில் நடந்து செல்ல முடியும்," என்று சீடன் பெருமையாகச் சொல்ல, குரு பழித்தார்: "உன் பொன்னான காலத்தைப் பாழடித்து விட்டாய்; உன் இத்தனை வருட கால உழைப்பும் காலணாவுக்குச் சமம்."

சீடன் திகைத்து எப்படி என்று கேட்க, குரு சொன்னார்: "ஆமாம், காலணா கொடுத்தால் ஓடக்காரன் இக்கரையிலிருந்து அக்கரைக்கு உன்னை இட்டுச் செல்வானே."

அதனால்தான் திருவள்ளுவர் கற்க, கசடற "கற்பவை" என்று சொன்னார். கற்க வேண்டிய வற்றைக் கற்க வேண்டும்; வேண்டாத விஷயங்களை அல்ல. பார்க்கப்போனால் கற்பதில் வேண்டாதவை என்று எதுவும் இல்லை. ஆனால் பயனுள்ள விஷயங்களைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்பது முக்கியம். இதற்காக இங்கே இரண்டு கதைகளைச் சொல்ல விரும்புகிறேன்.

பல துறைகளில் புலமை பெற்றிருந்த அறிஞர் ஒருவர் தன் அறிவு குறித்து மிகவும் கர்வத்துடன் வாழ்ந்து வந்தார். பலரை வாதத்தில் வென்று பரிசுகள் பெற்ற அவர் ஒருநாள் பக்கத்து ஊரில் நடைபெற இருந்த ஒரு வாதப்போருக்குச் செல்ல வேண்டியிருந்தது. அதற்கு அவர் ஒரு ஆற்றைக் கடந்து போயாக வேண்டும். வேறு வழியில்லை. ஆற்றின்மீது பாலம் இல்லை. ஓடமே கதி.

அவசரமாக ஓடக்கரையை அடைந்தார். அந்த அறிஞர். "ஓடத்தில் என்னை மட்டுமே நீ ஏற்றிச் செல்ல வேண்டும். வேறு யாராவது என் எதிரே அமர்வது எனக்குப் பிடிக்காது. நீயும் நின்று கொண்டேதான் ஓடத்தைச் செலுத்த வேண்டும்," என்றார். அவ்வளவு அகம்பாவம்.

ஓடக்காரன் நிலைமையை உணர்ந்து கூடுதல் கட்டணம் கேட்டான். அதைத் தருவதற்கு அவர் ஒப்புக் கொண்டார். அறிஞரை ஏற்றிக் கொண்டு ஓடம் புறப்பட்டது.

சிறிது தூரம் சென்றதும் அவர் ஓடக்காரனைப் பார்த்து, "நீ புராணம் படித்திருக்கிறாயா?" என்று கேட்டார். அவன் இல்லையென்றான். "உன் வாழ்நாளில் கால்பகுதியை நீ இழந்து விட்டாய்," என்றார் அறிஞர்.

இன்னும் சிறிது தூரம் ஆற்றில் சென்றதும் இராமாயணம் படித்திருக்கிறாயா என்று அறிஞர் கேட்டார். ஓடக்காரன் இல்லையென்றான். "அப்படியானால் உன் வாழ்நாளில் அரைப் பகுதியை இழந்துவிட்டாய்," என்றார் அறிஞர்.

அப்பொழுது லேசாக மழை பெய்தது. அறிஞர் குடையை விரித்துப் பிடித்துக் கொண்டார். ஓடக்காரன் ஓடத்தைக் கொஞ்சம் வேகமாகவே ஓட்ட ஆரம்பித்தான். அறிஞர் தன் பேச்சைத் தொடர்ந்தார்:

"அது சரி, நீ என்னதான் படித்திருக்கிறாய்,"

"நான் ஒண்ணுமே படிக்கலை ஐயா," என்று ஓடக்காரன் பணிவுடன் சொல்ல, அறிஞர் கேலியாகச் சிரித்தார். அந்த நேரத்தில் வானிலை மோசமாகியது. ஓடம் கவிழும் நிலைக்கு வந்தது. ஓடக்காரன் அறிஞரைப் பார்த்துப் பதட்டத்துடன் கேட்டான்: "ஐயா, உங்களுக்கு நீச்சல் தெரியுமா?"

"எனக்கு நீச்சல் தெரியாது. அதைக் கற்றுக் கொள்ள நேரமிருந்தால், இன்னும் கொஞ்சம் சாஸ்திரங்களையும் கற்றுக் கொண்டிருப்பேனே."

"சரி, இனி பேசுவதற்கு நேரமில்லை; ஓடம் கவிழப் போகிறது. இப்பொழுது நீங்கள் முழு வாழ்க்கையையும் இழந்து விட்டீர்கள்," என்று சொல்லியபடியே ஓடக்காரன் கவிழ்ந்து கொண்டிருந்த ஓடத்திலிருந்து குதித்து, நீந்திக் கரை சேர்ந்தான். அறிஞர் ஆற்றோடு போனார்.

உருப்படியாக வாழக் கற்றுக்கொள்ளாதவரை எதைக் கற்றுக் கொண்டு என்ன பயன்? ஓடக்காரன் உயிர் பிழைக்க, சாஸ்திரங்கள் கற்ற அறிஞர் நீரில் மூழ்கியது ஏன்? கல்வி அறிவு என்பது பிழைப்புக்காக மட்டுமல்ல என்றாலும் ஜீவனோபாயம் இல்லாத கல்வி வறட்டுக் கல்வியே. திறமைகளுக்கு வழி செய்யாத கல்வி மலட்டுக் கல்வியே. பலர் இதைப் பலவாறாகச் சொல்லியிருக்கிறார்கள்.

கிருஷ்ணதேவராயர் அப்பாஜி கதைகளில் ஒன்று மேற்சொன்னதையும்விட சுவாரசியமானது.

கிருஷ்ணதேவராயரிடம் தன் அறிவுத் திறனை வெளிப்படுத்திப் பாராட்டும் பரிசுகளும் பெற வேண்டும் என்ற எண்ணத்தில் ஒருமுறை ஐந்து அறிஞர்கள் ஒரு குழுவாக வந்தார்கள். அவர்கள் நண்பர்கள். ஒருவர் தர்க்க சாஸ்திரம் நன்கு கற்றுத் தேர்ந்த தர்க்கவாதி. இரண்டாமவர் வியாகரணம்

என்று சொல்லப்படும் இலக்கண நூலைக் கரைத்துக் குடித்த மொழியியல் அறிஞர். மூன்றாமவர் ஜோதிட சாஸ்திர நிபுணர். நான்காமவர் சிறந்த மருத்துவர். ஐந்தாமவர் இசைக் கலைஞர்.

அறிஞர்களின் வருகை பற்றிய செய்தி அறிந்த கிருஷ்ணதேவராயர் அவர்களது திறமை யாவும் வெளிப்படத் தம் அரசவையில் வாய்ப்பளித்தார். அவர்களது அறிவை மெச்சினார். பிரமாதமான பரிசுகளை வழங்கி கௌரவிக்க வேண்டுமென்று நினைத்தார். அப்பாஜியிடம் ஆலோசனை கேட்டார்.

அப்பாஜியும் அறிஞர்களின் திறமையைப் பாராட்டினார். அத்துடன் சொன்னார்: "மன்னர் அவர்களே, தங்கள் மதிப்பீடு சரிதான். இவர்கள் பாராட்டுக்குரிய அறிஞர்களே. உயர்ந்த பரிசுகள் அளிக்கத் தாங்கள் விரும்புகிறீர்கள். அதுவும் சரியே. ஆனால், தாங்கள் அளிக்கும் பரிசுகளைப் பேணிப் பயன்படுத்தும் திறமை இவர்களுக்கு இருக்கிறதா என்பதைச் சோதித்துப் பார்த்துவிடுவதே நல்லது."

அதுவும் சரிதானே என்று யோசித்தார் மன்னர். ஆனாலும், "உமக்கு எப்படி இந்தச் சந்தேகம் வந்தது?" என்று மன்னர் கேட்டார்,

அப்பாஜி சொன்னார்: "இவர்கள் அறிவும் திறமையும் மிக்கவர்களே. ஆனால், இவர்களது நடை, உடை, பாவனை வித்தியாசமாக இருக்கிறது. வாழ்க்கை பற்றிய யதார்த்த உணர்வு இவர்களுக்கு

இருப்பதாகத் தெரியவில்லை. அனுபவம் போதாது என்று நினைக்கிறேன். ஆகவே விலை உயர்ந்த பொருட்களைக் கொடுத்தால் அவற்றை அவர்கள் முறையாகப் பயன்படுத்துவார்களோ இல்லையோ என்று சந்தேகமாக இருக்கிறது."

"அது சரி, இவர்களுக்கு என்ன வகையான சோதனைகள் வைக்கலாம்?" என்று மன்னர் கேட்க, அப்பாஜி அவர்களுக்கு வித்தியாசமான சோதனை வைத்தார்.

அது அவர்களுக்கு ஒரு சோதனை என்பது மட்டும் தெரிவிக்கப்படவில்லை. ஒவ்வொரு அறிஞருக்கும் ஒரு நபரின் சாப்பாட்டுக்கான பொருட்கள் வாங்க எவ்வளவு பணம் தேவையோ அது கொடுக்கப்பட்டது. தமக்குத் தேவையான உணவுப் பொருட்களை வாங்கிக் கொண்டு விருப்பமான உணவைச் சமைத்துச் சாப்பிட்டு விட்டு வாருங்கள் என்று அப்பாஜி அவர்களை அனுப்பி வைத்தார்.

அவர்கள் சமையலுக்காக ஒரு வீடும் தரப்பட்டது. அறிஞர்கள் யார் யார் எங்கெங்கே சென்று என்ன வாங்கி, என்ன சமைத்துச் சாப்பிடுகிறார்கள் என்பதை உடனே அறிந்து கொள்ள அப்பாஜி தன் உளவாளிகளை அனுப்பி வைத்தார்.

இசைக் கலைஞர் தாம் சமையலைப் பார்த்துக் கொள்வதாகச் சொல்லி வீட்டில் தங்கி விட்டார்.

அடுப்பில் உலைவைத்து விட்டு அருகே அமர்ந்து கொண்டார்.

தர்க்க சாஸ்திர நிபுணர் நெய் வாங்கி வரக் கடைத் தெருவுக்குப் புறப்பட்டார். வியாகரணப் பண்டிதர் தயிர் வாங்கச் சந்தைக்குப் போனார். ஜோதிட சாஸ்திர விற்பன்னர் இலை வாங்கச் சென்றார். மருத்துவ அறிஞர் காய்கறி வாங்கப் போனார்.

சந்தையில் மருத்துவ அறிஞர் காய்கறிகளை நோட்டம் விட்டார். வாழைக்காய் கண்ணில் பட்டது. அது வாய்வு என்று ஒதுக்கிவிட்டார். உருளைக் கிழங்கு எளிதில் ஜீரணமாகாது என்று நினைத்து அதையும் ஒதுக்கினார். முள்ளங்கி நன்றாக இருந்தது. அது சாப்பிட்டால் ஜலதோஷம் வரும் என்று அதைத் தள்ளுபடி செய்தார். மேலும், அங்கும் இங்கும் ஏதேதோ காய்கறிகள் கண்ணில்பட்ட போதிலும் ஒவ்வொன்றும் எதாவது ஒருவிதத்தில் கெடுதல் செய்யக் கூடியது என்று தனக்குத்தானே சொல்லியபடி எதையுமே வாங்காமல் வெறுங் கையுடன் வீடு திரும்பினார்.

தர்க்க சாஸ்திரி நெய்க்கடைக்குப் போனார். நெய் வாங்கினார். கடைக்காரர் நெய்யை தொன்னையில் ஊற்றிக் கொடுத்தார். வரும் வழியில் தர்க்க சாஸ்திரிக்கு பலத்த சந்தேகம் வந்தது. நெய்க்கு தொன்னை ஆதாரமா, தொன்னைக்கு நெய் ஆதாரமா என்று. திரும்பத் திரும்ப யோசித்துப்

பார்த்தார். ஒன்றும் பிடிபடவில்லை. ஆகவே இனி யோசிப்பதில் பயனில்லை, சோதனை செய்து பார்த்து விடலாம் என்று முடிவு செய்து நெய் இருந்த தொன்னையைக் கவிழ்த்துப் பார்த்தார். நெய் கொட்டியது, தொன்னை மிஞ்சியது. எனவே நெய்க்கு தொன்னை ஆதாரம் என்ற அபாரமான உண்மையைக் கண்டுபிடித்துவிட்ட திருப்தியில் கொஞ்ச நஞ்சம் நெய் ஒட்டிக் கொண்டிருந்த தொன்னையையும் விட்டெறிந்தார்.

இதற்கிடையே தயிர் வாங்கப் புறப்பட்ட இலக்கணப் புலியாகிய வியாகரண பண்டிதர் வழியில் ஒரு தயிர்க்காரியைச் சந்தித்தார். அந்தப் பெண்மணி 'தயிரோ தயிரூ' என்று கூவிக் கொண்டிருந்தாள். இலக்கணப் பண்டிதர் கூர்ந்து அந்தப் பெண்மணியின் கூவலில் கவனம் செலுத்தினார். 'தயிர்' என்று சொன்னால் போதும் — ஆனால் 'தயிரு' என்று விற்பனைக்காகச் சொல்லும்பொழுது பரவாயில்லை. 'தயிரூ' என்பது கூடுதல் நெடில் கொண்ட இலக்கணப் பிழை என்று கண்டு கொண்டார். அதைத் தன்னோடு நிறுத்திக் கொண்டிருக்கக் கூடாதோ — "இதோ பாரம்மா, நீ இலக்கணப் பிழையுடன் தயிர் விற்கிறாய். தயிர் என்று மட்டும் சொன்னால் போதும்; 'தயிரு' பரவாயில்லை 'தயிரூஊ' என்று சொல்லாதே. அது ஊகாரத்தில் பத்து மாத்திரை கூடுதல்; இரண்டு மாத்திரையே அதிகம் என்பது இலக்கணவிதி," என்று விளக்கம் கொடுத்தார்.

தயிர் விற்பவளோ தன் தலைவிதியை எண்ணி நொந்து போயிருந்தாள். அவளுக்கு இலக்கண விதி, ஊகாரம், இரண்டு மாத்திரை, பத்து மாத்திரை என்பதெல்லாம் புரியவில்லை. தயிர் விற்பனைக்கும் தமிழ் இலக்கணத்திற்கும் என்ன சம்பந்தம் என்று யோசித்துப் பார்த்த தயிர்க்காரி, பண்டிதர் ஒரு பைத்தியம் என்று நினைத்து எதிர்த்திசையில் ஓட ஆரம்பித்தாள், தலையில் உள்ள தயிர்க் கலயத்தைச் சரியாமல் பிடித்தபிடியே.

இப்படியாக, இலக்கண அறிஞர் தயிர் வாங்கா மலேயே வீடு திரும்ப நேரிட்டது.

இதற்கிடையே இலை பறிப்பதற்காக ஜோதிட சாஸ்திரி ஒரு வாதாம் மரத்தில் ஏறினார். பாதி மரத்தில் ஏறியபோது ஒரு பல்லி இரண்டு முறை “கெக், கெக், கெக்” என்றது.

அதன் பொருள் என்ன என்று யோசித்துப் பார்த்த ஜோதிட அறிஞர் அவசர அவசரமாக மரத்திலிருந்து இறங்கிவிட்டார். “மேற்கொண்டு ஏறினால் ஆபத்து,” என்று பல்லி சொன்னதாம்.

ஆக வெளியே போன நால்வரும் வெறுங்கை யுடன் திரும்பி வந்து கொண்டிருக்க, அடுப்பில் உலை வைத்த இசைக் கலைஞர் கொதித்துக் கொண்டிருந்த நீரைப் பார்த்தார். அதன் தளதள, தளதள சப்தம் தாளகதிக்கு ஒத்து வருகிறதா என்பதைத் தானே தொடையில் தாளம் போட்டுச்

சோதனை செய்தார். உலையின் தாளகதி கொஞ்சம் இடறுவதாகப் பட்டது. கோபம் கொண்ட இசைக் கலைஞர், 'தாளமா, இது வேதாளம்' என்று சொல்லிக் கொண்டே பானையைப் போட்டு உடைத்தார்.

ஆக, யாரும் எதுவும் சாப்பிடமுடியாத நிலை. இந்த விஷயத்தை உளவாளிகள் மன்னரிடம் சொல்ல மன்னரும், அப்பாஜியும் அவர்களை உடனே அரண்மனைக்கு அழைத்து பிரமாதமான விருந்து கொடுத்து, உயர்ந்த பரிசுகளும் கொடுத்தார். அத்துடன் மன்னர் சொன்னார்:

"அறிஞர்களே, உங்கள் புலமையை நான் மெச்சுகிறேன். ஆனால் இந்த அறிவுடன் உலக அனுபவமும் சேர்ந்தால்தான் வயிறு காயாமல் இருக்கும். அற்ப விஷயங்களாகத் தோன்றும் வாழ்வியல் யதார்த்தங்களை ஒதுக்கி விடாதீர்கள். எல்லாம் சேர்ந்ததுதான் உலகம்." அறிஞர்களுக்கும் தங்கள் குறைபாடு புரியவந்தது. அவர்கள் வெட்கப் பட்டார்கள்; திருத்திக்கொள்ள முன்வந்தார்கள்.

இன்றைய நிலையில் மிக உயர்ந்த படிப்பை ஒருவர் பெற்றுவிட்ட போதிலும், அவர் உயர்நிலை நிர்வாகப் பொறுப்பில் அமர்த்தப்படுவதில்லை. அந்த அறிவோடு அனுபவமும் சேர்ந்து கொண் டால்தான் அந்த நபர் நிறுவனத்திற்கு உரிய முறையில் உழைக்க முடியும் என்பதை நிறுவனத்தார் புரிந்து கொண்டுள்ளனர்.

ஐ. ஏ. எஸ். தேர்வில் வெற்றி பெறுவது அரசு நிர்வாகத்தில் உயர் தகுதி என்றாலும் அப்படி வெற்றி பெற்றவர்களைப் பத்திரிகைள் உடனே பேட்டு கண்டு அவர்களது மேதாவிலாசத்திற்கு வெளிச்சம் போட்டுக் காட்டினாலும் அரசாங்கம் உடனே அவர்களைக் கலெக்டர்களாக நியமிப்ப தில்லை.

ஒரு வருடத்திற்கும் மேலாக அவர்களுக்குப் பல துறைகளில் பயிற்சி தரப்படுகிறது. ரெவின்யூ துறையில் அடிமட்டப் பதவியிலிருந்து கலெக்டர் அலுவலகம் வரை அரசாங்கம் எப்படிச் செயல் படுகிறது என்பதையும் அவர்கள் பயிற்சியாளர் களாக இருந்து தெரிந்து கொள்கிறார்கள். காரணம், ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது என்பதுதான்.

புத்தகப் படிப்பு என்பது கல்வியில் கால் பாகம் மட்டுமே என்று ஒரு சமஸ்கிருத சுலோகம் சொல்கிறது. மீதி முக்கால் பாகத்தை நண்பர்கள், பெரியவர்கள், சொந்த அனுபவம் என்றபடி வெளி உலகில்தான் கற்றுக் கொண்டாக வேண்டும்.

அனுபவமே ஒருவன் பெற்ற கல்விக்கு வலிமை சேர்க்கிறது. முறையான கல்விக்குட்' பின் பெறும் அனுபவம் ஒரு மனிதனை வலுப்படுத்து கிறது; வளப்படுத்துகிறது.

## 24. கல்வியும் நல்வழியும்

அறிவு என்பது படிப்பினால் மட்டும் வருவதில்லை. சூட்சுமத் திறன் கொண்ட மனம் இருந்தால் ஏட்டுப் படிப்புடன் உலகத்தோடு ஒட்ட ஒழுகும் அறிவும் நம் வசப்படும். சாஸ்திரங்கள் கற்றுத் தேர்ந்த ஒரு பண்டிதரால் சொல்ல முடியாததை ஒரு பாமரன் சொல்லியதாக ஒரு கதை:

கலை, கல்வி, கேள்விகளில் நாட்டம் கொண்ட ஒரு மன்னனின் சபையில் பாகவத உபன்யாசம் நடந்து கொண்டிருந்தது. தொடர்ந்து பாகவதம் சொல்லிக் கொண்டு மன்னரையும் மற்றவர்களையும் சந்தோஷப்படுத்தி வந்தார் ஒரு பண்டிதர். அன்று முதலை வாயில் அகப்பட்ட யானை பற்றிய கஜேந்திர மோட்சம் கதையை உணர்ச்சி பூர்வமாகச் சொல்லிக்கொண்டு வந்தார்.

"முதலையின் வாயில் அந்த யானை சிக்கிக் கொண்டது. துயரப்பட்ட யானை நாராயணா, நாராயணா ஆதிமூலமே, ஆதிமூலமே.... என்று உரத்த குரலில் பிளிறியது. வைகுந்தத்தில் இருந்த

நாராயணன் அதைக் கேட்டு ஓடோடி வந்தான். அவன் ஆபத்பாந்தவன் அல்லவா." பாகவதர் இப்படி நீட்டி முழக்கிச் சொல்லிக் கொண்டிருந்த பொழுது, மன்னர் குறுக்கிட்டார். "பண்டிதரே கொஞ்சம் நிறுத்துங்கள். எனக்கு ஒரு சந்தேகம். அந்த வைகுந்தம் இங்கிருந்து எவ்வளவு தூரம்?"

இப்படிப்பட்ட கேள்வியை அந்த நேரத்தில் எதிர்பார்த்திராத பாகவதர் பதில் சொல்லத் தெரியாமல் திகைத்துப் போனார். பாகவதரின் சாஸ்திர ஞானம் உடனே கை கொடுக்கவில்லை. பாகவதர் விழிக்க, மன்னர் தன் சபையில் இருந்த மற்ற புலவர்களைப் பார்த்தார். அவர்களும் விடை தெரியாமல் விழித்தார்கள்.

அப்பொழுது அரசனுக்கு வெண்சாமரம் வீசிக் கொண்டிருந்த ஒரு சாதாரண அரண்மனைப் பணியாள், "மன்னர் உத்தரவிட்டால் நான் இந்தக் கேள்விக்கு பதில் சொல்வேன்," என்றான். மன்னர் உள்பட அனைவரும் திகைத்துப் போனார்கள். மன்னர் சொன்னார்: "எனக்கு வேண்டியது பதில். அதை யார் சொன்னால் என்ன?"

"மன்னரே, துன்பப்பட்ட யானையின் கூக்குரல் எவ்வளவு தூரத்திற்கு எட்டுமோ, அவ்வளவு தூரத்தில்தான் உள்ளது வைகுந்தம்."

எல்லோரும் இதுவே சரியான பதில் என்று ஒப்புக் கொண்டார்கள். மற்றவர்களுக்குப் புராணங்கள் பற்றி அறிவு இருந்தது. அதை எடுத்துச்

சொன்னார்கள். ஆனால் கடைநிலை ஊழியனுக்கு இறைவன் பற்றிய உணர்வு இருந்தது. அதனால் அவன் சரியான பதிலை உடனே சொன்னான். பண்டிதருக்குத் தெரிந்திராதது பணியாளுக்குத் தெரிந்து இருந்தது. இதுதான் கதை.

இதுபோல் பணியாளின் புத்திக் கூர்மைக்கு ஒரு நிகழ்ச்சியும் சொல்லப்படுகிறது. அது எந்த அளவுக்கு உண்மையானது என்பது எனக்குத் தெரியாது. ஆனால் அது நயமானது.

புவி ஈர்ப்பு விசையைக் கண்டுபிடித்த ஐஸக் நியூட்டன், ஒரு பூனையை வளர்த்து வந்தார். அதற்கு ஒரு குட்டியும் இருந்தது. கதவைத் திறக்காமலேயே அந்தப் பூனையும், குட்டியும் வெளியே செல்ல வசதி செய்து கொடுக்க விரும்பிய நியூட்டன் ஒரு தச்சனை அழைத்துத் தன் அறைக் கதவில் ஒரு பெரிய ஓட்டையும், ஒரு சிறிய ஓட்டையும் போட்டுத் தரச் சொல்ல, தச்சன் ஏன் இப்படிக் கதவில் இரண்டு ஓட்டைகள் என்று கேட்க, நியூட்டன் சொன்னாராம்: "பெரிய பூனைக்குப் பெரிய ஓட்டை; சின்னப் பூனைக்குச் சின்ன ஓட்டை." தச்சன் சொன்னானாம்: "ஐயா, பெரிய ஓட்டை வழியாகவே சின்னப் பூனையும் போய்விடும்; ஒரு ஓட்டையே போதும்."

எவ்வளவு பெரிய அறிவாளி நியூட்டன். தச்சன் எடுத்துச் சொல்லும் வரை இந்த விஷயம் அவருக்குப் புரியாமல்தான் இருந்தது. காரணம் நியூட்டன் பூனைகளைப் பற்றி மட்டுமே நினைத்து

வந்தார். இரண்டு பூனைகள், இரண்டு ஓட்டைகள் என்று கணக்கிட்டது அவர் மனது. தச்சனுக்குக் கதவு முக்கியம்; இரண்டு ஓட்டைகள் தேவையில்லை என்று அவனுக்குத் தோன்றியது. அனுபவ ஞானம் இந்த விஷயத்தில் தச்சனுக்கு இருந்தது. இதனால் தச்சன் நியூட்டனைவிட மேலானவனாக முடியாது. அறிவு, உணர்வு, அனுபவம் இவற்றின் வேறு பாடுகளைக் காட்டவே இதைச் சொன்னேன்.

அதுபோல் அறிவுக்குத் திருவள்ளுவர் இன்னொரு விளக்கம் தருகிறார். அதாவது தீயதைத் தடுத்து நல்லதை நாடுவது அறிவு. அதை விளக்க ஒரு பழங்கதை இருக்கிறது. அந்தக் கதைக்கு நம் கண்களைத் திறக்கும் சக்தி உண்டு. எது அறிவு என்று யாராவது கேட்டால் இந்தக் கதை சரியானதொரு விடை. இதோ அந்தப் பஞ்ச தந்திரக் கதை.

ஒரு ஊரில் நான்கு நண்பர்கள் இருந்தார்கள். மூவர் சாஸ்திர விற்பன்னர்கள்; ஒருவர் அதிகம் படிக்கவில்லை. ஆனால் பாமர ஞானம் உண்டு. இந்த நால்வரும் ஒருமுறை வெளிநாடு சென்று அங்குள்ள மன்னரிடம் தம் திறமையைக் காட்டிப் பரிசுகள் பெறவேண்டும் என்று நினைத்தார்கள். அவர்கள் அதற்காகத் திட்டமிட்டபொழுது கல்வி மான்களில் ஒருவன் இந்தப் படிக்காத நண்பரைச் சுட்டிக்காட்டி, "இவன் கல்வி அறிவு இல்லாதவன். நம் திறமையினால் கிடைக்கும் பொன்னும் பொருளும் நமக்கே சொந்தம். இவனுக்கு அதில்

பங்கு இல்லை. இவனை ஏன் அழைத்து செல்ல வேண்டும்?" என்று கேட்டான்.

மற்றவன், "அதனாலென்ன, இருக்கட்டுமே; இத்தனை வருடங்கள் நம் கூடவே இருந்திருக்கிறான். நம் நண்பன். அழைத்துச் செல்வோம். இவனுக்கும் நாம் பங்கு தருவதே முறை," என்றான். மூன்றாமவன் அதை ஏற்றான். ஆக, நால்வருமாக தேசாந்திரம் புறப்பட்டார்கள். வழியில் அவர்கள் ஒரு காட்டைக் கடக்க வேண்டியிருந்தது. அங்கே ஒரு சிங்கத்தின் எலும்புக்கூடு இருந்தது. அதைப் பார்த்தவுடன் கல்விமான்கள் மூவரும் தம் திறமையைச் சோதித்துப் பார்த்துக் கொள்ள நினைத்தார்கள். கல்வியறிவு இல்லாதவன் மௌனமாக அதைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

சிதறிக்கிடந்த எலும்புகளை இணைத்தான் ஒருவன். மற்றவன் அதன் சதையையும் ரத்தத்தையும் உருவாக்கினான். மூன்றாமவன் அதற்கு உயிர் கொடுக்க முயன்றபோது, கல்வி அறிவு இல்லாத நான்காமவன் அப்படிச் செய்யாதே என்று தடுத்தான். அப்பொழுது அவன் சொன்னான்: "நண்பர்களே, உங்கள் அபாரத் திறமையை மெச்சுகிறேன். ஆனால் ஒரு விஷயம் முக்கியமானது. சிங்கம் பலமான, கொடிய மிருகம். அதற்கு உயிர் வந்தால், நமக்கு உயிர் போய்விடும்."

மூன்றாமவன் உறுதியாகச் சொன்னான் "அது எப்படி? மற்ற இருவரும் தம் திறமையைக்

காண்பித்த பிறகு நான் மட்டும் சும்மா இருக்க முடியுமா? நான் நிச்சயம் அதற்கு உயிர் கொடுக்கப் போகிறேன்."

"அப்படியானால் சற்றுப் பொறு," என்று சொன்ன நான்காமவன் அருகில் உள்ள மரத்தில் ஏறிக் கொண்டான். மூன்றாமவன் சிங்கத்திற்கு உயிர் கொடுத்தான். சிலிர்த்து எழுந்த சிங்கம் மூவரையும் அடித்துக் கொன்று தின்றது. நான்காமவன் இதற் கிடையே உயிர் பிழைத்து ஊருக்குத் திரும்பினான்.

ஆக, கல்வியின் வழியே கிடைக்கும் திறமை என்பது நமக்கும் பிறருக்கும் நன்மை செய்வதாக இருக்க வேண்டும். என்ன செய்ய முடியும் என்று காட்டிக் கொள்வதற்கு முன்பு ஏன் அதைச் செய்ய வேண்டும்? அதனால் யாருக்கு என்ன நன்மை என்றும் யோசித்துப் பார்ப்பது புத்திசாலித்தனம்.

நாம் யாரை முட்டாள் என்று சொல்கி றோமோ, அவர்கள் சில சமயங்களில் நம்மை முட்டாளாக்கிவிடக் கூடும். அதற்கும் ஒரு கதை உண்டு.

ஒரு மன்னனிடம் ஒரு வேலைக்காரன் இருந்தான். எதைச் சொன்னாலும் எதிர்க்கேள்வி போடாமல் அதைச் செய்யமாட்டான். தேவை யில்லாத சந்தேகங்களையெல்லாம் எழுப்புவான். உதாரணமாக, வெளியூர் போய் ஒரு நபரைப் பார்த்துவிட்டு வா என்றால், அவர் அங்கே இல்லாவிட்டால் என்ன செய்வது? வெளியூர்

சென்றிருந்தால் தங்கி இருந்து பார்த்துவிட்டு வரட்டுமா? எத்தனை நாள் தங்குவது என்று கேள்விகளாக அடுக்குவான். மன்னனைக் குழப்புவான். இவனோடு பெரும்பாடாக இருக்கிறதே என்ற நினைப்பில் பலமுறை அந்த மன்னன் இவனை வேலையை விட்டு நீக்க நினைத்ததும் உண்டு. ஆனால் செய்ததில்லை. வாயாடியாக இருந்தாலும், மூடன்போல் நடந்து கொண்டாலும், சமயங்களில் அதிக உரிமை எடுத்துக் கொண்டாலும், நேர்மையானவன் என்பதனால் சகித்துக் கொள்ளப் பட்டான் என்பதே காரணம்.

எப்படியாவது அவனைத் திருத்த வேண்டும் என்று நினைத்த மன்னனுக்கு ஒரு யோசனை தட்டுப்பட்டது. 'இவன் ஒரு முட்டாள்' என்று ஒரு அட்டையில் எழுதச் செய்து அதை இவன் கழுத்தில் மாட்டி விட்டான் மன்னன். அட்டையை வேலை யாள் சட்டை செய்யவில்லை. தன் போக்கிலேயே நடந்து கொண்டிருந்தான். வருஷம் கூடியது. வேலையாளின் போக்கு மாறவி்ல்லை. இதற்கிடையே மன்னன் நோய்வாய்ப்பட்டான். எந்த வைத்தியரும் நோயை குணப்படுத்தவில்லை. பலர் மன்னனைப் பார்க்க வந்தார்கள். வேலையாளும் வந்தான்.

"இனி நான் பிழைக்க மாட்டேன்; சாகப் போகிறேன்," என்றான் மன்னன்.

"சாதல் என்றால் என்ன?" வேலையாள் கேட்டான்.

"தெரியாத ஊருக்குப் போதல்."

"எந்த வழியில் போக வேண்டும்? எவ்வளவு தூரம்?"

"தெரியாது."

"தேரில் போகலாம் அல்லவா?"

"தேர் போகாது."

"குதிரைமேல்?"

"குதிரையும் போகாது."

"வண்டி அல்லது பல்லக்கு?"

"எதுவும் போகாது."

"மன்னரே, தாங்கள் ஊருக்குப் போவதாகச் சொல்கிறீர்கள். எந்த வழி, எவ்வளவு தூரம், எந்த ஊர் என்பதும் தெரியவில்லை என்கிறீர்கள். குதிரை போகாது. வாகனங்களும் போகாது என்று சொல் கிறீர்கள். போவது மட்டும் நிச்சயம் என்பது தெரிந்த உங்களுக்கு, ஊர் தெரியாது, வழி தெரியாது என்பதனால், நீங்களே இந்த அட்டையை அணிந்து கொள்ளத் தகுதியானவர் என்று சொல்லி 'இவன் ஒரு முட்டாள்' என்று எழுதப்பட்டிருந்த அந்த அட்டையை மன்னன் கழுத்தில் மாட்டி விட்டான். இந்த இருவரில் யார் புத்திசாலி? சொல்லுங்கள்.



## 25. முதுமையின் மேன்மை

இந்தக் காலத்தில் பல துறைகளில் உயர்படிப்பு பெறக் கல்லூரிகளும் பல்கலைக் கழகங்களும் உள்ளன. ஒரு காலத்தில் அந்த வசதிகள் இல்லாமற் போனாலும் மக்களுக்கு நிறைய அனுபவ ஞானம் இருந்தது. மக்கள் பெரியவர்களின் சொற்களைக் கேட்டு அதன்படி நடந்து வந்தார்கள். அதனால்தான் திருவள்ளுவரும் 'பெரியாரைத் துணைக் கோடல்' என்ற அதிகாரத்தை இயற்றினார். இரண்டு கதைகள் மூலம் இதன் பெருமையை தெரிந்து கொள்ளலாம்.

ஒரு ஆற்றங்கரையோர கிராமத்தில் வளமான புல்வெளி இருந்தது. அங்கே ஒரு இடையன் தினமும் ஆடுகள் மேய்த்து வந்தான். ஆற்றில் வாழ்ந்து வந்த ஒரு பெரிய முதலை எப்படியாவது தினமும் ஒரு ஆட்டை இழுத்துக் கொண்டு போய்த் தின்று விடும். தினமும் ஒரு ஆடு நஷ்டம் என்பது இடையனுக்கும் ஆட்டுச் சொந்தக்காரனுக்கும் ஒரு பிரச்சினையாக இருந்தது. முதலையைக் கொன்றுவிடுவது தீர்வாக இருந்தாலும் அதை எப்படிச் செய்வது என்பது பிடிபடவில்லை. அதே நேரம் வேறு இடத்தில்

ஆடுகளை மேய்ச்சலுக்கு விடப் புல்வெளிகளும் இல்லை. இந்த நிலையில் சோர்ந்து போய் ஒருநாள் வீட்டுக்குத் திரும்பியபோது, அவனது வாட்டத்திற்குக் காரணமென்ன என்று அவனது பாட்டி கேட்டாள். கசப்புடன் இடையன் சொன்னான் இதுதான் பிரச்சினை என்று. இந்தப் பாட்டி இதற்கு என்ன தீர்வு காணமுடியும் என்ற அலட்சியம் அவன் குரலில் வெளிப்பட்டது.

பாட்டியோ அலட்டிக்காமல் சொன்னாள்: "அட இதுவா பிரச்சினை? இதற்கு அலட்டிக் கொள்ளலாமா? ஒரு யோசனை சொல்கிறேன், கேள்."

நம்பிக்கை இல்லாவிட்டாலும் மரியாதை நிமித்தம் பாட்டி சொன்னதைக் கேட்டு அதன்படியே செய்தான் இடையன். ஒரு ஆட்டுக்குட்டியைக் கொன்றான். அதன் வாயில் நீர்க்காத சுண்ணாம்பைக் கொஞ்சம் செலுத்தினான். கொஞ்சம் சிப்பிகளையும் செலுத்தினான். அந்த ஆட்டை ஆற்றங்கரையோரம் முதலையின் வாய்க்குள் அகப்படும் தொலைவில் நிறுத்தி வைத்தான். வழக்கம்போல் கரைப்பக்கம் தலை நீட்டிய முதலை அந்த ஆட்டுக்குட்டியைக் கவ்விக்கொண்டு ஆற்றுக்குள் போய் விழுங்கியது. தண்ணீரும் குடித்தது. தண்ணீர் உள்ளே போனதும் நீர்க்காத சுண்ணாம்பு தள தளவென்று கொதிக்க ஆரம்பித்தது. அதனால் சிப்பிகளும் சூடாகிச் சுண்ணாம்பாகியது. வயிறு வெந்து போனதால் முதலை இறந்தது; கடற்கரை ஓரம் ஒதுங்கியது.

இடையனுக்கு நிம்மதி. வயதானவர்களின் அனுபவம் கஷ்டகாலத்தில் எப்படிக் கை கொடுக்கிறது என்பதை மிக நன்றாகப் புரிந்து கொண்டான். பலர் வயதானவர்களைத் தொண தொணப்பு என்று ஒதுக்கி விடுகிறார்கள். அது தவறு. வயதுக்கு மரியாதை என்பது இந்தியாவில் 'இருந்து வந்தது' என்றுதான் சொல்ல வேண்டும், இன்றைய நிலையில். ஆனால், ஜப்பானில் இன்னமும் இருக்கிறது. இதோ ஒரு ஜப்பானியக் கதை.

ஒரு ஜப்பானிய மன்னனுக்கு இளமைத் துடிப்புடன், இளமைத் திமிரும் இருந்தது. தன் நாட்டில் வயதானவர்களின் எண்ணிக்கை அதிகமாக இருப்பதாகவும் அவர்களால் பயன் ஏதும் இல்லை என்றும் நினைத்தான். ஆகவே, தன் வீரர்களை யெல்லாம் அழைத்தான். அறுபது வயதுக்கு மேற்பட்ட எல்லாக் கிழவர்களையும் அடையாளம் கண்டு சிரச்சேதம் செய்ய ஆணையிட்டான்.

வீரர்கள் கட்டளையை நிறைவேற்றினார்கள், ஒரே ஒரு வீரனைத் தவிர. அவனுக்குத் தன் தந்தை மீது பக்தி அதிகம். அவரை யாரும் காணமுடியாத இடத்தில் ஒளித்து வைத்தான். தினமும் அவரை கவனித்துக் கொண்டிருந்தான், வேறு யாருக்கும் தெரியாமல். ஒரு முறை அந்த மன்னன் பக்கத்து நாட்டுடன் போரிட வேண்டியிருந்தது. ஏறத்தாழ ஒரு லட்சம் வீரர்களை அழைத்துச் சென்றான். தந்தையைக் காப்பாற்றிய வீரனும் அந்தப் போரில்

பங்கு கொள்ள வேண்டியிருந்தது. தந்தையைத் தனியே விட்டுவிட்டுச் செல்ல இயலாத நிலையில் போர் வீரர்கள் முதுகில் சுமந்து செல்லும் பையில் அவரை ஒளித்து வைத்துத் தூக்கிச் சென்றான்.

எல்லா வீரர்களும் கடற்கரை மணலில் கூடாரம் கட்டிப் போருக்குத் தயாரானார்கள். ஏற்பாடுகள் சிறப்பாக இருந்தன. மன்னனுக்கு மகிழ்ச்சி. எல்லோரும் பாட்டுப் பாடி ஆடி மகிழ்ந்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது தந்தையைப் பதுக்கி வைத்திருந்த பையைத் திறந்தான் வீரன். வெளியே, அவ்வளவு கொண்டாட்டம். ஓசையின் மூலம் அதை உணர்ந்து கொண்ட தந்தை காரணம் என்னவென்று கேட்டார்.

மகன் சொன்னான்: "அப்பா, எப்பொழுதும் கொந்தளித்து ஆர்ப்பாட்டமாக இருக்கும் கடல் இன்று மிகவும் அமைதியாக இருக்கிறது. அதனால் தான் இந்தக் கொண்டாட்டம்."

தந்தை இதைக் கேட்டுக் கொஞ்சம் கலக்க மடைந்தார். "மகனே, வானில் பறவைகள் எந்தத் திசையில் பறக்கின்றன என்று பார்த்துச் சொல்."

மகன் திசையைப் பார்த்துச் சொல்ல, தந்தை பதற்றத்துடன் சொன்னார்: "கடல் இப்படி அமைதியாக இருந்து பறைவைகள் எதிர்த் திசையில் பறந்தால் அது பெரும் புயல் வீசப் போகிறது என்பதற்கு அறிகுறி. கடல் விரைவில் கொந்தளிக்கப்

போகிறது. உடனே எல்லோரும் இந்த இடத்தை விட்டு நகர்ந்து விட வேண்டும்; இல்லையென்றால் ஆபத்து."

வீரன் இதைக் கேட்டவுடன் மன்னனைச் சந்தித்து, ஒரு அசரீரிக் குரல் தன்னை இப்படி எச்சரித்ததாகச் சொன்னான். மன்னன் ஆணையிடக் கூடாரங்கள் அகற்றப்பட்டன. வீரர்கள் இடத்தைக் காலி செய்தார்கள்.

இவர்கள் வெளியேறக் காத்திருந்தது போல் ஒரு புயல் கடற்கரையைத் தாக்கியது. சற்று தாமதித்திருந்தாலும் ஒரு லட்சம் வீரர்களும் கடலில் மூழ்கி இறந்திருப்பார்கள்.

ஒரு பெரிய அழிவைத் தவிர்க்க உதவிய வீரனை அழைத்த மன்னன், அப்படி அவனுக்கு மட்டும் ஒரு அசரீரியின் எச்சரிக்கை எப்படிக் காதில் விழுந்தது என்று கேட்க, வீரன் உண்மையைச் சொல்ல வேண்டியதாயிற்று. தன் தந்தையைப் பாசம் மிகுதியால் காப்பாற்றி வந்த உண்மையையும் வெளிப்படுத்தினான்.

மன்னன் யோசித்துப் பார்த்தான். தன் ஆணையை மீறிய வீரனை மன்னித்தான். அவன் தந்தையை அழைத்து வரச் செய்து அவரை வணங்கினான். தான் மட்டுமல்ல, தன் மந்திரிகளும், வீரர்களும் பொதுமக்களும் முதியவர்களை வணங்க வேண்டும்; அவர்கள் சொற்படி நடக்க வேண்டும்

என்று உத்தரவிட்டான். அதையடுத்து ஜப்பானில் முதியவர்களுக்குக் கூடுதல் மரியாதை கொடுக்கப் பட்டு வருகிறது.

வயதானவர்களை மதிக்க வேண்டும் என்ற எண்ணம் இன்றும் பல நாடுகளில் இருக்கிறது. சில நிறுவனங்கள் அவர்களை ஆலோசகர்களாக நியமிக்கின்றன. ஆனால் கூட்டுக் குடும்பம் கலைந்த இந்தியாவில் வயதிலும் அறிவிலும் முதிர்ந்த பெரியவர்கள் தம் குடும்பத்தினரால்கூட மதிக்கப் படாமல் அவல வாழ்வு வாழ்கிறார்கள்.

கால வேகத்தின் புதுமைகளில் மயங்கி, மூழ்கித் திளைக்கும் இளைய தலைமுறை பெரியவர்களை மதிப்பதில்லை என்பது இந்தியாவிலும் சோக மயமான உண்மையே.

ஆனால் இந்த நிலைமை மாறியாக வேண்டும். முதியவர்களின் வழிகாட்டுதல் சமூக, பண்பாட்டுத் துறைகளில், ஆன்ம ஞான நாட்டத்திற்குத் தேவைப் படும். ஆனால் முதியவர்களாகும் வரை அதை யாரும் உணர்வதில்லை என்பதே நம் துர்பாக்கியம்.



## 26. எல்லோரும் சமமா?

அனுபவம் தரும் பாடம் ஆயுளுக்கும் நிற்கும். ஆனால் எல்லோரும் தம் சொந்த அனுபவங்களின் வழியாக மட்டும் பாடம் பெறுவது என்றால் அது இந்த ஆயுளில் நிறைவு பெறாது. பிறரது அனுபவங் களும் நமக்குப் பாடமாக அமைய வேண்டும்.

அந்த அளவுக்கு நம்மைச் சுற்றி நடக்கும் விஷயங்களில் நாம் கவனம் செலுத்த வேண்டும். 'முன்னால் போகிறவன் இடறி விழுந்தால் பின்னால் போகிறவனுக்கு விளக்கு எதற்கு?' என்ற பழ மொழியை நினைவில் பதித்துக் கொள்வது நல்லது.

இல்லாவிட்டால் நாம் தொடர்ந்து தவறுகள் செய்து கொண்டே இருப்போம். சில தவறுகள் நம் உயிருக்கோ பிழைப்புக்கோ ஆபத்தாக அமைந்து விடக் கூடும். எனவே நம்மைச் சுற்றியுள்ள நடப்பு களில் கவனமும், பார்ப்பதில், அறிந்து கொள்வதில் பாடம் கற்றுக் கொள்ளும் சுதாரிப்பும் தேவை.

அதுபற்றி ஒரு கதை ஈசாப் கதைகளில் இடம் பெற்றுள்ளது.

செத்துப்போன கரடி ஒரு நரிக்கு ஞான குரு ஆயிற்றாம். எப்படி?

ஒரு காட்டில் சிங்கம், நரி, கரடி மூன்றும் வேட்டைக்குக் கிளம்பின. அகப்பட்டதைத் தமக்குள் சமமாகப் பங்கிட்டுக் கொள்வது என்று அந்த மூன்று பிராணிகளும் ஒப்பந்தம் செய்து கொண்டன. அதிக தொலைவு செல்வதற்குள் ஒரு மான் அகப்பட்டுக் கொண்டது. சிங்கம் அதை ஒரே போட்டில் அடித்துக் கொன்றது.

'பங்கிடு' என்று சிங்கம் கரடிக்குக் கட்டளை யிட்டது. அதை தேவ வாக்காக எடுத்துக் கொண்ட கரடி ரொம்பவும் கஷ்டப்பட்டு மான் இறைச்சியை மூன்று சம பங்குகளாகப் பிரித்து வைத்தது.

'இதோ பங்குகள் தயார்' என்று கரடி சொன்னதும் சிங்கத்திற்குக் கோபம் வந்தது. "சமமா. எது சமம், யாருக்கு யார் சமம்?" என்று கேட்டபடியே சிங்கம் கரடி மீது பாய்ந்து குதறிக் கொன்றது. "ராஜ மரியாதை தெரியாத உனக்கு இதுதான் கதி," என்று சொன்னது சிங்கம். பின்னர் சிங்கம் நரியைப் பார்த்துக் கட்டளையிட்டது: "இதைப் பங்கு போடு."

நரி கடியைப் போல இறைச்சியைப் பங்கு போட ரொம்பவும் கஷ்டப்படவில்லை.

ஒரு சின்னஞ் சிறு துண்டை தனியே எடுத்து வைத்தது. மீதியனைத்தையும் சிங்கத்தின் பக்கத்திலேயே பணிவாக வைத்தது. பெரிய பங்கைக்

காண்பித்து "மகாராஜா, இது தங்கள் பங்கு," என்று பவ்யமாகச் சொன்னது.

சிங்கத்தின் மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. 'சபாஷ்' என்று நரியைத் தட்டிக் கொடுத்துப் பாராட்டியது. "என்ன பணிவு; ராஜ மரியாதை என்ன என்பது உனக்குத் தெரிந்திருக்கிறது. நீ மகா புத்திசாலி."

மேலும் பணிவுடன் நரி சிங்கத்திடம் சொன்னது: "பிரபுவே, நான் ஒன்றும் பிறவி புத்திசாலி என்று சொல்லிக் கொள்ள முடியாது. இப்பொழுது தங்கள் பாராட்டுக்குரிய புத்திசாலி ஆனதில் திருப்திப்படுகிறேன்."

"அதெப்படி திடீரென்று புத்திசாலியானாய்," என்று கேட்டது சிங்கம்.

அடக்கத்தின் இருப்பிடம் என்பதை உணர்த்தும் தொனியில் நரி சொன்னது: "பிரபுவே, சற்று முன்பு தான் புத்திசாலியானேன். இதோ செத்துக் கிடக்கிறதே, இந்தக் கரடிதான் என் ஞானகுரு."

எழுதப்படாத ஒப்பந்தங்களில் நீக்குபோக்காக நடந்துகொண்டு; விட்டுக் கொடுத்துப் பிழைத்துக் கொள்வதுதான் புத்திசாலித்தனம். கூட்டாளிகளில் ஓரிருவர் வலிமையானவர்கள் என்றால் அவர் களிடம் சமத்துவம் பேசிப் பயனில்லை. காட்டிலும் நாட்டிலும் சமத்துவம் பேசப்படும் இடங்களில் அந்த சமத்துவம் பூரணமாக இருப்பதில்லை.

காட்டு மிருகங்களை வைத்து நாட்டு நடப்புகளை கேலி செய்து 'மிருகங்களின் பண்ணை' என்ற நாவலை எழுதிய ஜார்ஜ் ஆர்வெல் என்பவர் சொல்வார்: "எல்லோரும் சமம்; ஆனால் சிலர் மற்றவர்களைவிடக் கூடுதலாகச் சமம்."

நரி புரிந்து கொண்டதைப் போல நாம் இதைப் புரிந்து கொள்ள வேண்டும். இல்லையென்றால் கரடிக்கு நேர்ந்த கதியே நமக்கும் ஏற்படும்.

அடிக்கும் நிலையில் இருப்பவர்களும் ஆணையிடும் நிலையில் இருப்பவர்களும் என்றுமே பிறருக்குச் சமமாக இருக்க மாட்டார்கள். அவர்கள் எப்படியும் ஒரு படி மேலேதான் இருப்பார்கள். அப்படிப்பட்ட வலியவர்களிடம் எளியவர்கள் பணிவுடன் நடந்து கொண்டாக வேண்டும்.

அது மட்டுமல்ல, அந்தப் பணிவு நடை, உடை, பாவனைகளில் பகிரங்கமாக வெளிப்பட வேண்டும், மான் மாமிசத்தை நரி பங்கிட்டது போல.



## 27. இழி பிறப்பெடுத்தாலும்

வாழ்க்கையில் போட்டி தேவைதான். ஆனால் யாருடன் போட்டியிடுகிறோம் என்பதை உணர்ந்து கொண்டு செயல்பட வேண்டும். இல்லையென்றால் போட்டியின் முடிவு துன்பமே. இதற்காகச் சொல்லப் படும் கதை கூடவே இன்னொரு நீதியையும் உணர்த்துகிறது. அது ராமராஜ்ய காலம். சர்வார்த்த சித்தன் என்று ஒருவன் இருந்தான். அவன் பிச்சை யெடுத்துப் பிழைத்து வந்தான். பிழைப்பு பிச்சை என்றாலும் துர்குணங்களுக்குக் குறைவில்லை.

உணவு கிடைக்காமல் ஒருநாள் சர்வார்த்த சித்தன் பசியால் வாடிக் கொண்டிருந்த பொழுது சற்று தூரத்தில் 'பொத்'தென்று ஏதோ விழும் ஓசை கேட்டது. அவன் நிமிர்ந்து பார்த்தான். அங்கே அந்த வீட்டுப் பெண்மணி விட்டெறிந்திருந்த எச்சில் இலைகள். அடுத்த கணம் அவன் மனதில் ஒரு சஞ்சலம். அதற்குள் எங்கிருந்தோ ஓடிவந்த ஒரு நாய் இலைகளை இழுத்துப் பண்டங்களைத் தின்ன ஆரம்பித்தது. சர்வார்த்த சித்தனுக்கு ஒரே ஆத்திரம். தான் இங்கே பசியோடு வாடியிருக்க, நாய்க்கு

உணவு கிடைக்கிறதே என்று கோபப்பட்ட அவன் கைத்தடியால் நாயின் தலையில் ஓங்கி அடித்தான். அடிபட்ட நாய் ஓடிப்போய் இராமபிரான் முன் நின்றது. தான் எந்தத் தீங்கும் செய்யாத நிலையில் சர்வார்த்த சித்தன் தன்னை அடித்து விட்டான் என்று புகார் செய்தது. இராமபிரான் நடந்தது என்ன வென்று கேட்டுத் தெரிந்து கொண்டார். சர்வார்த்த சித்தன் தன் குற்றத்தை ஒப்புக் கொண்டான்.

இந்தக் குற்றவாளிக்கு என்ன தண்டனை தரலாம் என்று சபையோரை இராமபிரான் கேட்டார். அறிஞர்கள் அது பற்றி யோசிக்க, நாய் யோசனை சொன்னது: "இவன் செய்த குற்றத்திற்கு மிகச் சரியான தண்டனை 'கௌலபத்யம்' தான். கோயில் சொத்தை மேற்பார்வையிடும் தொழிலின் பெயரே கௌலபத்யம்.

'ஏன் கௌலபத்யம்?' என்று இராமபிரான் கேட்க, நாய் சொன்னது: "அரசே, முற்பிறவியில் நான் ஒரு குலபதியாக இருந்தேன். ஏராளமான பொதுச் சொத்துக்கள் என் மேற்பார்வையில் இருந்தன. அதில் கொஞ்சத்தை நான் என்னையும் அறியாமல் சொந்த உபயோகத்திற்கு எடுத்துக் கொண்டு விட்டேன். அந்தப் பாவத்திற்கு தண்டனைதான் இந்த நாய்ப்பிறவி. இவனும் கௌலபத்யம் செய்யும் பொழுது ஏதேனும் தவறு செய்வான். கொஞ்சமாவது பொதுச் சொத்தை எடுத்துக் கொள்வான். அப்புறம் என்ன, என்னைப் போல் நாய் ஜென்மம்தான்.

மிகச் சாதாரண கதையாகத் தோன்றும் இதில் உள்ள நீதியைப் பாருங்கள். கோயில் சொத்தில் கை வைக்கக் கூடாது. பொதுச் சொத்தில் கை வைக்கக் கூடாது. அப்படிச் செய்தால் நாயாகப் பிறக்க வேண்டும். அதுசரி, சர்வார்த்தன் நாயாகப் பிறக்கு மளவுக்குத் தவறு செய்வான் என்பதை நாய் எப்படி ஊகித்து உணர்ந்தது? நல்ல கேள்வி.

ஒருவன் பிச்சைக்காரனாக வாழ்ந்தாலும் கௌரவமாக வாழ்ந்திருக்க முடியும். கேவலம் ஒரு நாய்க்குக் கிடைத்த எச்சில் இலையைக் கண்டு பொறாமைப்படக் கூடியவன் கையில் பொதுச் சொத்து கிடைத்தால்...

மானம் உள்ளவர்கள் நாயாகப் பிறவி எடுக்க வேண்டிய தண்டனைக்காக வெட்கப்படலாம்; கலங்கலாம். நாய்ப்பிறவி எடுத்தபிறகு அதிலிருந்தும் விடுபட விரும்பாமல் இருக்கலாம். மானம் கெட்டவர்கள் ஒரு புறம் இருக்கட்டும்; ஒரு முனிவர் தனக்குக் கிடைத்த பன்றியின் பிறவியில் என்ன செய்தார் என்று பார்ப்போம். தான் இறக்கும் தருவாயில் ஒரு முனிவர் தன் சீடனை அழைத்துச் சொன்னார்; “நான் விரைவில் இறந்து விடுவேன். எப்பொழுதோ செய்த தவறுக்கு தண்டனையாக நான் இப்பொழுது பன்றியாகப் பிறக்க வேண்டிய நிர்பந்தம் உண்டு. அந்தப் பன்றிப் பிறவியில் எவ்வளவு சீக்கிரம் இறக்கிறேனோ அவ்வளவு சீக்கிரம் நான் ஒரு உன்னத ஸ்தானத்தைப் பெறமுடியும். அதற்கு நீ உதவ வேண்டும்.”

"என்ன செய்ய வேண்டும், ஐயா?"

"இதோ எதிரே தெரியும் பன்றிக் கூட்டத்தில் ஒரு வெள்ளைக்குட்டியாக நான் பிறப்பேன். அந்தக் குட்டியைப் பார்த்தவுடன் அதை அடித்துக் கொன்று விட வேண்டும். அதுவே எனக்கு விமோசனம்." அடுத்த சில நாட்களில் குரு இறந்து போனார். பன்றிக் கூட்டத்தில் வெள்ளைப் பன்றியாகப் பிறந்தார். சீடன் அதை அடையாளம் கண்டு தடியை ஓங்கியபோது பன்றிக்குட்டி சொன்னது: "சீடனே, அடித்துக் கொன்றுவிடாதே; இந்தப் பிறவியிலும் ஒரு சுகம் இருக்கத்தான் செய்கிறது. இடப்பட்ட காலம் வரை நான் இப்படியே வாழ்ந்து விடுகிறேன்; என்னை விட்டுவிடு." இதுதான் பிறவி பந்தம் என்பது.

ஒரு முனிவரே இழி பிறவியிலும் சுகம் காண முடியும் என்றால் கேடுகெட்ட மனிதர்களைப் பற்றி என்ன சொல்வது? சிலர் எந்தப் பிறவி எடுத்தாலும் திருந்த மாட்டார்கள்; எந்தப் பதவி கொடுத்தாலும் அதை அனுபவிப்பார்கள். அதற்கும் ஒரு கதை உண்டு. அரசு, அதிகாரம், பதவி, பொறுப்பு, அவற்றின் காரணமாகப் பலர் ஒருவரை நாடி வருவது என்ற அமைப்பு இருந்தாலே லஞ்சமும் கூடவே வந்துவிடும் போலிருக்கிறது.

ஒரு மன்னனிடம் வெகு சகஜமாகப் பேசி, திறமையாகச் செயல்பட்டு வந்த மந்திரி லஞ்சம் வாங்குகிறார் என்ற செய்தியும் மன்னனின் காதுக்கு எட்டியது. உடனே மந்திரியின் துறையை மாற்றினார்

மன்னர். அது வெறுமனே புகார்களைப் பெற்றுக் கொள்ளும் பிரிவுதான். சிபாரிசு செய்வது, சலுகை காட்டுவது போன்ற அதிகாரங்கள் இல்லை. அந்தக் கட்டத்திலும் புகார்கள் மீது உரிய நடவடிக்கை எடுக்க உதவி செய்வதாகக் கூறி மந்திரி லஞ்சம் வாங்கி விட்டாராம்.

வேறு இடத்திற்கு மாற்றியதும் லஞ்சம் வாங்கும் அளவு குறைந்ததே ஒழிய நின்றபாடில்லை. எனவே மன்னர் அவரை அழைத்து, நாளை முதல் அவர் கடற்கரையில் நின்று நிமிடத்திற்கு எவ்வளவு அலைகள் வீசுகின்றன; எந்த நேரத்தில் அலைகள் அதிகம் என்ற தகவல்களைக் குறிப்பெடுத்துத் தர வேண்டும் என்றார். லஞ்சம் வாங்கிய கை சும்மா இருக்குமா? அங்கே அலைகளை எண்ணுவதுடன் நிறுத்திவிடாமல் ஒரு ரகசிய ஏற்பாடாக மன்னர் தன்னைக் கடற்கரையைக் காவல் காக்கச் செய்திருக்கிறார் என்று மீனவர்களிடம் சொல்லி அவர்கள் மீன்பிடிப்பதைத் தடை செய்ய முயல, அவர்கள் வேறு வழியில்லாமல் அந்த மந்திரிக்கு லஞ்சம் கொடுத்துவிட்டுத் தம் தொழிலைத் தொடர்ந் தார்களாம். இவர் போன்றவர்களுக்கெல்லாம், இடமாற்றம், பதவி மாற்றம், மோசமான மறு ஜென்மம் பற்றிய பயமெல்லாம் தவறை உணரச் செய்யும் தண்டனைகள் ஆவதில்லை. இவர்கள் இயல்பு அப்படி.

## 28. விழிப்புணர்வு

எந்தப் பிறவியாயினும் பாவம் என்ற எண்ணம் ஞானிகளிடம் உண்டு. "எத்தனை கோடி இன்பம் வைத்தாய்," என்று பாரதியாரைப் போல் பாடியவர்கள் வெகு சிலரே. இதில் சிலர் ஒரு சில பிறவிகளில் பாவ மூட்டையை விட்டெறிவது இல்லை. பாவம், பிறவிகள்தோறும் அதைத் தூக்கிச் செல்கிறார்கள். அது பற்றி ஒரு ஜென் கதை.

அழுக்கு மூட்டையைச் சுமந்தபடியே பாதை ஓரமாக நடந்துபோய்க் கொண்டிருந்தான் ஒரு பிச்சைக்காரன். அந்த வழியாக மன்னர் வருவதை அறிந்து சாலை ஓரமாக ஒதுங்கி நின்றான். தேரில் சென்று கொண்டிருந்த மன்னன் பிச்சைக்காரனைப் பார்த்துப் பரிதாபப்பட்டான். தேரை நிறுத்தி அருகே அழைத்தான். பயந்து கொண்டே மன்னனை நெருங்கினான் அந்தப் பிச்சைக்காரன். "வா, தேரில் ஏறிக் கொள். உன்னை ஊர் அருகில் இறக்கி விடுகிறேன்," என்று அழைத்தான் மன்னன். இந்த அழைப்பினால் மிரண்டுபோன பிச்சைக்காரன் தயங்கித் தயங்கி நின்றான். மன்னன் வற்புறுத்த,

பிச்சைக்காரன் பயந்து கொண்டே தேரில் ஏறி ஒரு மூலையில் நின்றான். அமரச் சொன்ன பிறகே அமர்ந்தான். தேர் புறப்பட்டது. பிச்சைக்காரன் இன்னமும் தன் அழுக்கு மூட்டையைத் தலையில் சுமந்தபடி அமர்ந்து கொண்டிருந்தான். மன்னன் கேட்டான்: "அதுதான் தேரில் அமர்ந்து விட்டாயே அப்பா, இன்னமும் ஏன் அழுக்கு மூட்டையைத் தலையிலேயே வைத்து சுமந்து கொண்டிருக்கிறாய்? அதை இறக்கி ஒரு மூலையில் வைத்துவிட வேண்டியதுதானே?

பிச்சைக்காரன் சொன்னான்: "மகாராஜா, என் மீது கருணை கொண்டு இவ்வளவு தூரம் நீங்கள் என்னைத் தேரில் எற்றி வருவதே பெரிது. உங்கள் தேர் என் பாரத்தைச் சுமப்பதுடன் இந்த மூட்டை யையும் சுமக்க வேண்டாமே என்றுதான் நானே இதைத் தலையில் சுமந்து கொண்டு வருகிறேன்."

இது அறிவீனம். மன்னனின் தேரல்ல; பாமரனின் கட்டை வண்டி என்றால் மூட்டையைப் பிச்சைக்காரன் கொஞ்சம் இறக்கி வைத்திருப் பானோ என்னவோ. ஆனால் பிச்சைக்காரர்களுக்கு புத்தி ஓரளவுக்கு மேல் வேலை செய்வதில்லை.

சகஜமாக நம்மிடையே ஒரு குட்டிக் கதை புழங்குவதை அறிவீர்கள். ஒரு பிச்சைக்காரனுக்கு லாட்டரியில் ஐந்து லட்ச ரூபாய் பரிசு விழுந்ததாம். அதை வைத்து என்ன செய்வீர்கள் என்று ஒரு நிருபர் கேட்க, "கார் வாங்குவேன். காரில் சென்று பிச்சையெடுப்பேன்," என்றானாம். அதாவது நம்மில்

பலர் வாழ்க்கையில் நல்ல வாய்ப்புகள் வரும் பொழுதும் பிறவி குணத்தை மாற்றிக் கொள்வ தில்லை. தேரில் ஏறிய பிச்சைக்காரனைப் போல, என்ன சுமக்கிறோம், ஏன் சுமக்கிறோம் என்ற பிரக்ஞையில்லாமலேயே நாம் எத்தனையோ குப்பை கூளங்களைச் சுமக்கிறோம். சுமையைத் தூக்கி எறிய வேண்டிய வாய்ப்பு கிடைக்கும் பொழுதும் வீணே சுமையைத் தூக்கிக் கொண்டு திரிகிறோம்.

பாவ மூட்டை, குப்பை கூளம் என்று எடுத்துக் கொள்ளாவிட்டாலும்கூட, மனதில் சில கவலைகள், வருத்தங்கள், வேதனைகளைச் சுமந்து செல்கிறோம். அவற்றை இறக்கி வைக்க வாய்ப்பு கிடைக்கும் போதிலும் இறக்கி வைப்பதில்லை. காரணம் நமக்கு விழிப்புணர்வு இல்லை. இந்த விழிப்புணர்வு பற்றியும் ஒரு ஜென் கதை உண்டு.

புத்தர் பெருமான் தன் மாணவர்களுடன் உரை யாடிக் கொண்டிருந்தார். அடிக்கடி அவர் பேச்சைக் கேட்க வரும் மன்னன் பிரச்சேதனனும் அன்று வந்திருந்தான். மன்னன் தரையில் அமர வேண்டி யிருந்தது. யார் வந்தாலும் அங்கே அப்படித்தான். மன்னனுக்குத் தரையில் அமர்ந்து பழக்கமில்லை. உட்காரமுடியாமல் சிரமப்பட்டுக் கொண்டிருந்தான். மாற்றி மாற்றி அமர்ந்தாலும் நிலை கொள்ளாமல் தவித்தான். தன் தவிப்பு புத்தருக்குத் தெரிந்துவிடக் கூடாதே என்று நினைத்துக் கவலைப்பட்டான். இந்த உடல் – உள்ளப் போராட்டத்தில் அவனையறியாமல் அங்கே ஒரு காரியம் நடந்து கொண்டிருந்தது.

அவனுடைய கால் கட்டைவிரல் ஆடிக்கொண்டிருந்தது. புத்தர் அதைப் பார்த்தார். உடனே பேச்சை நிறுத்திவிட்டார். மன்னனைப் பார்த்துக் கேட்டார்: "உன் கட்டைவிரல் ஏன் ஆடிக் கொண்டிருக்கிறது?" திடுக்கிட்டுப் போன மன்னன் குனிந்து தன் காலைப் பார்த்தான். கட்டை விரலின் ஆட்டம் நின்று போனது. பிரக்ஞை இல்லாமல் நடந்தது. பிரக்ஞை வந்ததும் நின்றுவிட்டது. அதையும் கவனித்த புத்தர் கேட்டார்: "ஏன் விரல் ஆட்டுவதை நிறுத்தி விட்டாய்?"

"பெருமானே, இது என்ன கேள்வி? என்னை அறியாமலேயே விரல் ஆடிக்கொண்டிருந்தது. நீங்கள் கேட்டதும் நின்றுவிட்டது. நான் ஆட்டவும் இல்லை. ஆடியதை நிறுத்தவும் இல்லை."

அப்பொழுது புத்தர் பெருமான் சொன்னார்: "கேட்டீர்களா? கட்டைவிரல் இவருக்குச் சொந்தமானது. இது ஆடுகிறது. இது பற்றி இவருக்கு ஒன்றுமே தெரியாதாம். ஆனால் பாருங்கள், கவனம் வந்ததும், அதாவது நான் கேள்வி கேட்டதும், நின்று விட்டது. எல்லாமே விழிப்புணர்வுதான்."

மன்னன் எதிரே பிச்சைக்காரனுக்கு ஏதும் விழிப்புணர்வு வரவில்லை. மன்னனுக்கு குருவின் எதிரே விழிப்புணர்வு வந்தது. இதுதான் இது என்ற விழிப்புணர்வு மட்டும் வந்து விட்டால் மனிதனால் சாதிக்க முடியாதது எதுவும் இல்லை. எனவே விழித்தெழுங்கள். வெற்றி பெறுங்கள்.

## 29. மிகை ஒரு பகை

ஏதாவது அவசியமாக, அவசரமாகத் தேவை என்றால் நிதானமாக அதைத் தேடிப் போகாமல் கண்ணில் படுபவர்களிடமெல்லாம் அது பற்றிச் சொல்லி வைப்பது வழக்கமாகி விடுகிறது. சில சமயங்களில் சாதகம் உண்டு. பல சமயங்களில் இது பாதகமே. அனுபவப்பட்ட பிறகே நம்மில் பலர் இதைப் புரிந்து கொள்கிறோம். இது பற்றி ஒரு கதை.

ஒரு பிரமுகர் பாராட்டு விழாவுக்குச் செல்ல வேண்டியிருந்தது. அங்கே அவர்தான் நாயகன். பெருமைக்குரிய விருதைப் பெறப்போகிறார். நல்ல 'சூட்' அணிந்தால் நன்றாக இருக்குமே என்ற நினைப்பில் முந்தின நாள் ரெடிமேட் கடைக்குச் சென்று ஒரு புதிய சூட் வாங்கினார். அது நன்றாக இருந்தது. கோட், சட்டை எல்லாம் கச்சிதமாகப் பொருந்தியிருக்க, கால் சட்டை கொஞ்சம் நீளமாக இருந்தது. அதை வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வந்தார். ரெடிமேட் கடையில் அந்த நேரம் பார்த்து தையற்காரர் இல்லாத காரணத்தினால் வீட்டில் கால்சட்டையின் நீளமான பகுதியை வெட்டித்

தைத்துக் கொள்ள நினைத்தார். வேறு வேலைகளில் மூழ்கிப் போனதனால் அந்த வேலையை மறந்து போனார். பிறகு நினைவுக்கு வந்தது. வீட்டில் தையல் மிஷின் இருப்பதனாலும், எல்லாப் பெண் மணிகளுக்குமே தையல் தெரிந்திருந்ததனாலும் வீட்டில் இரவோடு இரவாக அதைச் சரிசெய்து கொள்ளலாம் என்று நினைத்து, தன் தாயிடம் அந்த வேலையைச் செய்து தரச் சொன்னார்.

எல்லா வீடுகளையும் போல அங்கும் மாமியார் மருமகள் சண்டை இருந்ததனால், அம்மா அதைச் செய்ய முன் வரவில்லை. "எல்லாம் உன் அருமைப் பெண்டாட்டியே செய்யட்டும், என்னைத் தொந்தரவு பண்ணாதே," என்றார். உடனே மனைவியை அழைத்து, "இது ஒரு சின்ன வேலைதானே, செய்து தரக்கூடாதா?" என்று கேட்க, மனைவி: "அது சரி, அந்த தையல்மிஷினை எனக்காகவா வாங்கினீர்கள்? எல்லாம் உங்க அருமைத் தங்கைக்காகத்தானே வாங்கினீர்கள், அவள் செய்யட்டுமே," என்று சொல்லி ஒதுங்கிக் கொண்டார். பிறகு அவர் தன் தங்கையை அணுகினார். தங்கை சொன்னாள்: "ஆமாம், வீட்டில் என்னை ஆளாளுக்கு வேலை வாங்குகிறார்கள். இதுவா என் வேலை? செய்ய மாட்டேன், போ," என்று சொல்லி விட்டாள்.

பிரமுகருக்குக் கோபம் வந்தது. அதைக் காட்டிக் கொள்ளவில்லை. தனக்குத் தெரிந்தவரை ஒரு அங்குலம் துணியை வெட்டிவிட்டுத் தானே ஊசி நூல் எடுத்துக் கோணல் மாணலாக ஏதோ-

தைத்துவிட்டு, அதை 'கோட் ஸ்டாண்டில்' மாட்டி விட்டுப் பின் தூங்கப் போய் விட்டார். காலையில் அதை அணிந்து கொள்ளக் கையில் எடுத்ததும், கால் சட்டை இருந்த கோலம் கண்டு அதிர்ந்து போனார். 'ஆ' என்று அலறாத குறைதான். அப்பொழுது ஒவ்வொருவராக அவர் அருகே வந்தார்கள்.

முதலில் அம்மா சொன்னார்: "மகனே, யார் மீதோ உண்டான கோபத்தை உன்மீது காட்டி யிருக்கக் கூடாது என்று நினைத்தேன். அதனால் முதலில் மாட்டேன் என்று சொல்லிவிட்டாலும், ஒரு அங்குலம் குறைக்கச் சொன்னதனால் அப்படியே குறைத்துத் தைத்தேன்."

"அது எனக்குத் தெரியாது. நாளைய விழாவில் நீங்கள் அணியும் கால்சட்டை பொருத்தமாக இருக்கட்டுமே என்று யோசித்து தூங்கப் போவதற்கு முன்பாக நான் ஒரு அங்குலம் குறைத்தேன்," என்றாள் மனைவி. அதுபோலவே தங்கையும் சொல்ல, அந்தப் பிரமுகர் கத்தினார்: "முடியாததை முடியாது என்று சொல்ல வேண்டும். ஒன்றைச் செய்ய மாட்டேன் என்று சொன்ன பிறகு அந்த நிலையிலிருந்து மாறவும் கூடாது."

"நல்லதைச் செய்வதில் கூடவா?"

அரையும் இல்லாமல், முழுதும் இல்லாமல் முக்காலாகக் குறைந்துபோன கால் சட்டையைக் காண்பித்த பிரமுகர், "இதுதான் நல்லது செய்வதா?" என்று கேட்டுப் புலம்பினார். கால் சட்டை சாதாரண

விஷயம். பிரமுகர் அன்று வேறு உடை அணிந்து கொண்டு போயிருந்தாலும் எதையும் இழந்திருக்க மாட்டார். இதே போல வேறு விஷயங்களில் ஆளாளுக்கு உதவி செய்யப்போனால் அவர்கள் அனுகூல சத்ருக்களாக மாறிவிடும் அபாயம் உண்டு. ஒரு உதாரணத்தைச் சொல்ல விரும்புகிறேன்.

ஒரு பெரிய வர்த்தக நிறுவனத்தில் உறவுக்கார இளைஞனுக்கு வேலைக்கு சிபாரிசு செய்தார் ஒரு முக்யஸ்தர். இளைஞனின் உறவுக்காரர்கள், இவர் ஒருவர் மட்டும் சொன்னால் எடுபடுமோ என்ற சந்தேகத்தில் மேலும் சிலர் மூலம் அந்த நிறுவன நிர்வாகியை நெருக்கினர். ஒருவர் சொன்னால் போதும் என்ற நிலையில் நான்கைந்து நபர்கள் அந்த இளைஞனுக்கு வெவ்வேறு சமயங்களில் சிபாரிசு செய்ததும் அந்த நிர்வாகி மிகவும் எரிச்சலடைந்தார். முதல் சிபாரிசுக்கே அந்த வேலையைத் தருவதாக நினைத்த அவர் தன் மனதை மாற்றிக் கொண்டார். இளைஞனுக்கு வேலை கிடைக்கவில்லை.

உதவுகிறோம் என்ற நினைப்பில் நாம் இப்படி நடந்து கொள்கிறோம். இது தவறான பழக்கம். ஒரு வேலைக்கு உதவக் கூடியவர் யார் என்பதை நன்கு யோசித்த பின் தீர்மானிக்க வேண்டும். பின்பு அவரை நம்பவேண்டும். எதையும் மிகையாகச் செய்யக் கூடாது. அப்படிச் செய்தால் நன்மைகளை விடத் தீமைகளே அதிகம் விளையும். எனவே இது போன்ற விஷயங்களில் நாம் எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள வேண்டும்.

## 30. பதவியும் தகுதியும்

ஏதாவது ஒரு தொழில் தொடங்கினால் சொந்தக்காரர்கள் அதில் முதல் போட, முனைந்து பாடுபட முன் வருகிறார்களோ இல்லையோ, காலியாக இருக்கும் பதவிகளில் அமரத் தயார். பலமான சிபாரிசு மனைவியிடம் இருந்து நெருங்கிய உறவினர்களிடமிருந்தும் வருவது இயற்கை. ஆனால் அவற்றையெல்லாம் ஒதுக்கி வைத்து விட்டு, மிகச் சரியான நபர்களையே நிறுவனங்களில் உயர்நிலை நிர்வாகப் பதவிகளில் அமர்த்த வேண்டும். இதையே "தொழில்முறை நிர்வாகம்", புரொஃபஷனல் மேனேஜ்மென்ட்" என்று சொல்கிறார்கள்.

அவ்வாறு இல்லாமல் உறவை மட்டுமே பிரதானமாகக் கொண்டு சொந்த பந்தங்களை நிறுவனங்களில் அமர்த்தினால் அவர்களும் கெட்டுப் போவார்கள்; நிறுவனத்தையும் கெடுத்து விடு வார்கள். இதற்கு கிருஷ்ண தேவராயர் அப்பாஜி பற்றிய ஒரு கதை உண்டு. தன் அமைச்சரவையில் இருந்த பலரில் அப்பாஜியை கிருஷ்ண தேவராயர்

தலைமை அமைச்சராக நியமித்தார். இதனால் சில அமைச்சர்களுக்கு ஏமாற்றம்; அறிஞர்கள் சிலர் பதவி பெறக் காத்திருந்தார்கள்; அவர்களுக்கும் ஏமாற்றம்.

அதிகம் ஏமாந்து போனது கிருஷ்ண தேவ ராயரின் துணைவியார். தன் தம்பி சஞ்சையாவுக்கு அந்தப் பதவி கிடைக்க வேண்டுமென்று எதிர் பார்த்துக் கொண்டிருந்தார். அப்படி நடக்கவில்லை என்றதும் மற்றவர்களைப் போல் அவர் சும்மா இருந்துவிடவில்லை. ராணியாயிற்றே, என் தம்பி எதில் குறைந்தவன், என்று கேட்டபடி அப்பாஜிக்கு வேறு ஏதாவது உயர் பதவி கொடுத்து விடுங்கள். என் தம்பியையே தலைமை அமைச்சராக்குங்கள் என்று தொந்தரவு செய்தார்.

மைத்துனனுக்குத் திறமை இருந்தால் அந்தப் பதவி கொடுத்திருப்பேனே என்று கிருஷ்ண தேவ ராயர் நயமாகச் சொல்லிப் பார்த்தும் ராணி விடு வதாக இல்லை. தன் தம்பிக்குத் திறமை உண்டு என்று அவர் சாதித்தார். மேலும் பணத்திற்காக அந்தப் பதவியைக் கோரவில்லையென்றும் அந்தஸ்த்தே முக்கியமென்றும் வாதாடினார்.

கிருஷ்ண தேவராயர் விட்டுக்கொடுக்காமல் அப்பாஜியின் நியமனத்தை நியாயப்படுத்திப் பேசினார்: “அன்பே, உன் தம்பிக்குப் பதவி கொடுக்காமல் இருப்பது எந்தவித விரோதத் தினாலும் அல்ல. தலைமை அமைச்சர் பதவி மிகவும் பொறுப்பு வாய்ந்தது. நம் நாட்டின் வாழ்வும்

தாழ்வும் அமைச்சரது அறிவையும் ஆற்றலையும் பொருத்தது. யார் வேண்டுமானாலும் அப்பதவியில் அமர்ந்துவிட முடியாது. தலைமை அமைச்சர் என்னைவிட மதி நுட்பம் வாய்ந்தவராகவும், எனக்கு ஆலோசனை கூறுபவராகவும் இருக்க வேண்டும். நாட்டின் நலனைக் கருத்தில் கொண்டு, சில சமயங்களில் என் எண்ணத்திற்கு முரணான யோசனைகளையும் சொல்லும் தெளிவும் துணிவும் மதி நுட்பமும் வேண்டும். 'ஆமாம் சாமிகள்' தேவையில்லை. எனவே அப்பாஜியை நியமித்தேன்."

"அது சரி, என் தம்பிக்குத் திறமை இல்லை என்று எப்படி முடிவு கட்டினீர்கள்? அவனுக்குத் திறமை இருக்கிறதா என்று சோதித்துப் பாருங்கள். திறமை வெளிப்பட்டால் நீங்கள் அந்தப் பதவியைத் தருவதற்கு தயங்கக் கூடாது!" என்று ராணி தன் தம்பியைச் சோதனைக் களத்தில் இறக்கினாள்.

இனி வேறு வழியில்லை. கிருஷ்ணதேவராயர் அப்பாஜி, மைத்துனர் சஞ்சையா இருவரின் திறமையையும் சோதனை செய்ய வேண்டிய நிலைமைக்குத் தள்ளப்பட்டார். ராணிக்கு ரொம்ப சந்தோஷம். அடுத்த சில நாட்களில் அரண்மனையில் மூன்று நடனப் பெண்மணிகள் கொண்ட குழுவின் நாட்டியத்திற்கு மன்னர் ஏற்பாடு செய்திருந்தார். அப்பாஜியும் சஞ்சையாவும் சிறப்பு விருந்தினர் களாக அழைக்கப்பட்டிருந்தனர். நடனமாதர் வெகு சிறப்பாக நடனமாடினர்.

பொதுவாக நடன நிகழ்ச்சி முடிந்த உடனேயே மன்னர் பரிசுப் பொருட்களை வழங்குவது வழக்கம். ஆனால் மன்னர் அன்று அவ்வாறு செய்யவில்லை. தாமதித்தார். இந்த தாமதம் நடன மாதருக்குப் புதிய அனுபவம். அவர்கள் தமக்குள் மெலிதான குரலில் பேசிக் கொண்டனர்.

ஒருவர் சொன்னார்: “மன்னர் வேரும் விறகுமடி;” மற்றவர் பதில் சொன்னார்: “இல்லை, முள்ளும் முரடுமடி,” மூன்றாமவர் சொன்னார்; “இல்லவே இல்லை; கல்லும் கரடுமடி.” அவர் சொன்னது ஒருவருக்கொருவர் புரிந்தது. மன்னர் முதல் மற்றவர்களுக்கு அந்த வார்த்தைகள் காதில் விழுந்தனவே ஒழிய அர்த்தம் புரியவில்லை.

மைத்துனர் சஞ்சையாவைப் பார்த்து அந்தச் சொற்களுக்கு என்ன அர்த்தம் என்று கேட்டார்.

“இதில் அர்த்தம் என்ன வேண்டிக்கிடக்கிறது. அவர்கள் தங்களை வெளிப்படையாகவே இழிவு படுத்திவிட்டார்கள். தங்களை வேர், விறகு, முள், முரடு, கல், கரடு என்று சொல்லிவிட்டார்கள். தங்களை அவமானப்படுத்தியதற்காக அவர்களைச் சிறையில் அடைத்துச் சித்ரவதை செய்ய வேண்டும்,” என்றார் சஞ்சையா. ராணியும் அந்த விளக்கத்தை ஏற்றுக்கொண்டாள். உடனே அவர்களுக்குக் கடுமையான தண்டனை கொடுங்கள் என்றார்.

“சஞ்சையா நினைப்பது சரியாக இருக்கலாம்; எதற்கும் அப்பாஜியின் அபிப்பிராயத்தையும்

கேட்கலாமே," என்று சொல்லி அப்பாஜியை அழைத்துக் கேட்டார் கிருஷ்ண தேவராயர்.

அப்பாஜி சொன்னார்: "அவர்கள் தங்களைப் பாராட்டுவதாகத்தான் நினைக்கிறேன். நடனம் அவர்கள் திறமை. அத்துடன் அறிவாற்றலும் இருக்கிறது. எனவே பூடகமாகப் பேசியிருக்கிறார்கள். வேரும் விறகும் என்று சொன்னவர் தங்களைக் கரும்பு என்று குறிப்பிடுகிறாள். அதாவது அடிக்கரும்பு நோக்கிச் செல்லச் செல்லத்தான் இனிக்கும். விறகுபோல் கரும்பு இருந்தாலும் அடிக் கரும்பே ருசி. எல்லோரும் நுனியிலிருந்துதான் அடிக்கு வருவார்கள். அதுபோலத் தாங்கள் நிதானமாகவே நல்ல பரிசு தருவீர்கள் என்கிறார். முள்ளும் முரடும் என்றவர் பார்ப்பதற்குப் பலாப்பழம் போல் முட்கள் நிறைந்தவராக இருந்தாலும் தாங்கள் பலாச்சுளை போல் உள்ளே இனிப்பானவர் என்று குறிப்பிடுகிறாள். கல்லும் கரடும் என்றவரும் அப்படியே குறிப்பாகச் சொல்லியிருக்கிறார்: அதாவது வெள்ளைக்கல் போன்று தோன்றினாலும் கற்கண்டு இனிப்பானது. அதாவது மூவருமே தாங்கள் பரிசு தருவீர்கள் என்பதையும் தங்கள் முகக் குறிப்பையும், தாமதத்தையும் வைத்துத் தாங்கள் பரிசு தரமாட்டீர்கள் என்றும் நினைக்க வேண்டாம் என்றும் தங்களுக்குள் சொல்லிக் கொண்டார்கள்."

எதற்கும் அவர்களிடமே அதுபற்றிக் கேட்டு விடுவோம் என்று நடனமணிகளை அழைத்தார்.

அவர்கள் அப்பாஜி சொன்னதை அப்படியே சொன்னார்கள். மன்னர் அவர்களுக்கு நிறைய வெகுமதிகள் கொடுத்தனுப்பினார்.

ஆக முதல் சுற்றில் சஞ்சையா அப்பாஜியிடம் தோற்றுப் போனார். ஆனாலும் இந்த ஒரே ஒரு விஷயத்தினால் மட்டும் சஞ்சையாவின் திறமையை எடை போட்டுவிடக் கூடாது என்று ராணி வாதாட கிருஷ்ணதேவராயர் அடுத்த சோதனைக்கு அவர்களை அழைத்தார். அது யதேச்சையாக நேர்ந்தது.

ஒருநாள் கிருஷ்ண தேவராயரும் ராணியும் உப்பரிகையில் பொழுது போக்கிக் கொண்டிருந் தார்கள். அப்பொழுது வெகு தொலைவில் மாட்டு வண்டிகளில் ஏதோ மூட்டைகள் ஏற்றிச் செல்லப் படுவதை மன்னர் பார்த்தார்.

உடனே சஞ்சையாவை அழைத்து வரச் செய்து, “சஞ்சையா, அதோ தெரிகின்றனவே வண்டிகள் அவை எங்கே போகின்றன என்று பார்த்து வா,” என்று சொல்லி அனுப்பினார்.

அங்கு சென்றுவந்த சஞ்சையா சொன்னார்: “மன்னரே, அந்த வண்டிகள் நம் அண்டை நாடான ரத்தினபுரியை நோக்கிச் செல்கின்றன.”

“ஓஹோ, மூட்டைகளில் என்ன இருக்கின்றன?”

‘கேட்டுச் சொல்கிறேன்,” என்று ஓடிய சஞ்சையா திரும்பி வந்து “எல்லாம் நெல்,” என்றார்.

"அப்படியா, அந்த ஆட்கள் வண்டியின் சொந்தக்காரர்களா, இல்லை, கூலிக்கு வண்டி ஓட்டுபவர்களா,"

விடை அறியத் திரும்பவும் ஓடிச் சென்ற சஞ்சையா "அவர்களே வண்டிகளின் சொந்தக் காரர்கள்," என்றார். மன்னரின் அடுத்த கேள்வி: "எதற்காக நெல்லை எடுத்துச் செல்கிறார்கள்?"

சஞ்சையா திரும்பவும் ஓட்டம் பிடித்தார். மூச்சிறைக்க வந்து சொன்னார்: "விற்பனைக்காக."

அடுத்தது அப்பாஜியை அழைத்த மன்னர், "அதோ, அந்த வண்டிகளில் ஏதோ மூட்டைகள் ஏற்றிச் செல்லப்படுவது போல் தோன்றுகிறது. கொஞ்சம் தகவல் பெற்று வாருங்கள்."

வெளியே சென்ற அப்பாஜி ஒரு பணியாளை அழைத்து அந்த வண்டிக்காரர்களைக் கூட்டி வரச் செய்தார். அவர்கள் வந்து கைகட்டி நின்றனர். மன்னர் முன்பு அப்பாஜி அவர்களை விசாரிக்க ஆரம்பித்தார். இதோ அந்த விசாரணை:

"உங்கள் வண்டிகளும் மூட்டைகளும் யாருக்குச் சொந்தமானவை?"

"எங்களுக்கே!"

"மூட்டைகளுக்குள் என்ன இருக்கின்றன?"

"எல்லாமே நெல்லுங்க."

"எங்கே எடுத்துச் செல்கிறீர்கள்?"

"அண்டை நாடான ரத்தினபுரிக்கு. அங்கே ஒரு செல்வர் வீட்டுத் திருமணத்திற்கு அதிக நெல் தேவைப்படுகிறதாம்."

"அதற்கான அனுமதியை அதிகாரிகளிடமிருந்து வாங்கி விட்டீர்களா?"

"ஆம், ஐயா."

இதையடுத்து அருகே இருந்த மன்னரிடம் அப்பாஜி கேட்டார்: "மன்னர் பெருமானே, வேறு ஏதேனும் தகவல்கள் வேண்டுமா?"

"வேண்டாம்; அவர்கள் செல்லட்டும்," என்றார் மன்னர். தகவல் திரட்டுவதில் அப்பாஜிக்கும் சஞ்சையாவுக்கும் உள்ள வேறுபாட்டை இவ்வாறு விளங்க வைத்தும் ராணியார் ராயரை விடுவதாக இல்லை. ராணி சொன்னார்: "இவை அற்பமான விஷயங்கள். என் தம்பிக்கு நீங்கள் மேலும் சில சந்தர்ப்பங்கள் கொடுத்துப் பார்க்கலாமே."

"இப்படியே சென்றால், பாவம், உன் தம்பி வாழ்நாள் முழுவதும் சோதனைக்குட்பட வேண்டியதுதான்" என்று மன்னர் சொன்னாலும் மேலும் ஒரு வாய்ப்பினைக் கொடுத்தார்.

சில நாட்கள் கழிந்ததும், ஒரு காலைப் பொழுதில் கிருஷ்ண தேவராயர் தன் பணியாளை அனுப்பிக் கொஞ்சம் சாம்பலும் ரோமமும் கொண்டுவரச் செய்தார். அதைக் கலந்து, இரண்டு பொட்டலங்களாக மடித்தார்.

“எதற்காக இப்படிச் செய்கிறீர்கள்?” என்று ராணியார் கேட்க, ராயர் பதில் சொன்னார்: “உன் தம்பிக்கும் அப்பாஜிக்கும் ஒரு சோதனை வைக்கப் போகிறேன். அதன் பலாபலன் அவரவர் அறிவுக் கேற்றபடி அமையும்.”

முதலில் சஞ்சையாவை அழைத்தார்; ஒரு பொட்டலத்தைப் பிரித்துக் காண்பித்தார். இதை பத்திரமாக எடுத்துக் கொண்டு போய்க் கன்னட தேச மன்னனிடம் கொடுத்து, இதில் உள்ள பொருட்கள் பற்றி உன் அறிவுக்கு எட்டிய விளக்கத்தைச் சொல்லிவிட்டு வா” என்று உத்தரவிட்டார்.

அதே போன்று இன்னொரு பொட்டலத்தை அப்பாஜியிடம் காண்பித்து அதே மாதிரியான உத்தரவுடன் அவந்தி நாட்டிற்கு அனுப்பி வைத்தார்.

கன்னட தேசத்திற்குச் சென்ற சஞ்சையா அந்த மன்னனிடம் பொட்டலத்தைக் கொடுத்தார். விஜய நகர தேசத்திலிருந்து வந்த தூதர் என்பதனால் மன்னர் மதிப்பளித்து சஞ்சையாவை உபசரித்தாலும், மன்னர் கிருஷ்ணதேவராயர் ஏன் சாம்பலையும் ரோமத்தையும் அனுப்பியிருக்கிறார் என்பது குறித்து யோசித்துப் பார்த்தார். ஒன்றும் விளங்கவில்லை. சஞ்சையாவிடம் கேட்டார். “இதென்ன விநோதமான பரிசுப் பொருட்கள்? இதன் உள் அர்த்தம் என்ன?”

சஞ்சையா சொன்னார்: “அட, இது புரிய வில்லையா? எம் மன்னருக்கு முன்னர் சாம்பலாகி விடுவீர். நீர் வெறும் ரோமத்திற்குச் சமம்.”

இதைக் கேட்டதும் அந்நாட்டு மன்னனுக்குக் கடும் கோபம் வந்தது. தன் வீரர்களை அழைத்து சஞ்சையாவை நையப் புடைக்கச் செய்து ஊருக்கு வெளியே தூக்கியெறியச் சொன்னார். அத்துடன் நில்லாமல் "என்னை அவமதித்ததற்காக நான் உம் மீது போர் தொடுக்கப் போகிறேன்," என்று கிருஷ்ண தேவராயருக்கு ஒரு போர் ஓலையும் அனுப்பினார்.

அதே நேரம் அப்பாஜி அவந்தி நாட்டிற்கு அதே பொட்டலத்தை எடுத்துக் கொண்டு சென்றார், வெறுமனே கையில் எடுத்துக் கொண்டபடி அல்ல. அந்தப் பொட்டலத்தை ஒரு நவரத்தினப் பேழையில் வைத்தார். அதை யானைமேல் வைத்து, ஒரு அரச பவனியாக அங்கே சென்றார். யானையின் முன்னே மங்கள வாத்யங்கள். நடன மாதர்களின் நாட்டியம்.

இந்த தோரணையுடன் அவந்தி மன்னன் அரண்மனையை அடைந்த அப்பாஜி பேழையை மன்னரிடம் கொடுத்தார். மன்னர் பேழையைத் திறந்து பொட்டலத்தைப் பிரித்துப் பார்த்தார். ரோமமும் சாம்பலும். அவருக்கு ஒன்றும் புரிய வில்லை. "எதற்காக இவை?" என்று அப்பாஜியைப் பார்த்து அவந்தி மன்னர் கேட்டார்.

"மாமன்னரே, எங்கள் மன்னர் பிரான் உலக நலம் கருதி ஒரு யாகம் செய்தார். இது யாக குண்டத்தின் புனிதச் சாம்பல். அவிர்பாக ஜீவன் களின் ரோமங்கள் இவை. இந்தப் புனிதமான பிரசாதத்தை பூஜையில் வைத்து ஒரு மண்டல காலம்

வழிபட்டால், அந்த நாட்டில் வளம் பெருகும். பூஜித்தவருக்கும் சுபிட்சம் உண்டு. அதனால்தான் எங்கள் மன்னர் தங்களிடம் இவற்றை சமர்ப்பிக்கச் சொன்னார்," என்றார் அப்பாஜி வெகு விநயமாக.

அக மகிழ்ந்த அவந்தி மன்னர் அப்பாஜிக்கு நிறையப் பரிசுப் பொருட்களைக் கொடுத்து ராஜ மரியாதையுடன் விஜயநகரத்திற்கு வழியனுப்பி வைத்தார். அப்பாஜி அந்தப் பரிசுப் பொருட்களை கிருஷ்ண தேவராயரிடம் சமர்ப்பித்துப் பேசிக் கொண்டிருந்த பொழுது, உடலெல்லாம் புண்ணாக, வழியெல்லாம் பசியோடு நடந்து வந்த களைப்பில் மன்னர் முன் வந்து விழுந்தான் சஞ்சையா.

அடுத்த சோதனைக்கு மூளையில் சரக்கு இல்லை என்பது மட்டுமல்லாமல் சஞ்சையாவுக்கு உடலிலும் தெம்பு இல்லை. அது சஞ்சையாவுக்குப் புரிந்ததோ இல்லையோ, ராணிக்குப் புரிந்து விட்டது. இப்பொழுது இதன் கிளைக் கதைகளுக்கு வாருங்கள். நிகழ்ச்சிகளை அசைபோடுங்கள். இது மிகச் சிறந்ததொரு நிர்வாகவியல் தத்துவத்தை எடுத்துச் சொல்லும் கதையென்பது புரியவரும்.

முதல் கதை நடன மாதர்கள் விடுகதைபோல் தமக்குள் பேசிக் கொண்டதைப் புரிந்து கொள்ளும் மதிநுட்பம் தொடர்பானது. அதாவது அடுத்தவரின் பேச்சுத் திறமையை எடைபோடும் ஆற்றல். இது அப்பாஜிக்கு இருந்தது. சஞ்சையாவிடம் இல்லை. அடுத்தது, விசாரிக்கும் திறன். மாட்டு வண்டிக்காரர்

களிடம் ஒரே நடையில் முழுமையாகத் தகவல்கள் திரட்ட முடியாமல் ஓடி ஓடிச் சென்ற சஞ்சையா; தான் இருக்கும் இடத்திற்கு அவர்களை அழைத்து, தகவல்களைப் பெற்று, தன் அறிவையும் அதிகாரத் தையும் காட்டிய நிர்வாகியுமான அப்பாஜி.

மூன்றாவதாக மிக அற்பமான பரிசுப் பொருட் களையும்கூட அரிதான, புனிதமான பிரசாதமாக மாற்றிய அப்பாஜியின் திறமையும் மடத்தனமான விளக்கம் அளித்த சஞ்சையாவின் அனுபவ மின்மையும். இவை சிந்தனை, சொல், செயல்பாடு என்ற வரிசையில் அமைந்த சோதனைகள்.

இன்னொன்று இந்தக் காலத்தில் "பேக்கேஜிங்" என்பது முக்கியம். எதைக் கொடுத்தாலும் அதை எப்படிக் கொடுப்பது என்று தெரிந்திருக்க வேண்டும். சாம்பலையும் ரோமத்தையும் நவரத்னப் பேழையில் எடுத்துச் சென்ற அப்பாஜி ஒரு 'பேக்கேஜிங்' எக்ஸ்பர்ட் அல்லவா? அந்த வகையில் அவர் நவீன மார்க்கெட்டிங் மாயாஜாலக்காரர்.

இந்தச் சோதனைகளில் அப்பாஜி வென்றது ஒரு புறம் இருக்கட்டும். இப்படிச் சோதித்துப் பார்த்த கிருஷ்ணதேவராயர் எப்படிப்பட்ட மதியூகி, புத்திசாலி என்பதையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும். அதனால்தான் கிருஷ்ண தேவராயர் வரலாறு படைத்த மன்னரானார்.

உறவு என்ற காரணத்தினாலேயே ஒருவருக்கு உயர் பதவி அளிக்க அவர் முன்வரவில்லை.

இன்றைய நிலையில் வர்த்தக நிறுவனங்களை நடத்துபவர்களும் கிருஷ்ணதேவராயர் போன்ற புத்தி சாலிகளாகவே இருக்க வேண்டும். தகுதியுள்ள தொழில்முறை நிர்வாகி உறவுக்காரரைவிடத் திறம்படச் செயல்படுபவராக இருக்கக்கூடும். வர்த்தகத் துறை நியமனங்கள் இந்த அடிப்படையில் அமைய வேண்டும். ஆக, தேர்ந்து தெளிதல் என்ற புத்திக் கூர்மை தலைமை நிர்வாகிகளுக்கு இருக்க வேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் வெற்றி பெற முடியும். சொந்தக்காரர்களை நம்பிக் கெட்ட வியாபாரிகளும், தொழில்முறை நிர்வாகிகளை நியமித்து லாபம் சம்பாதித்த தொழிலதிபர்களும் நம்மிடையே உண்டு.

அண்மையில் நான் அறிந்து கொண்ட சம்பவம் இது. நண்பர் ஒருவர் கம்ப்யூட்டர் துறையில் தனி நிறுவனம் தொடங்கித் தொழில் நடத்த விரும்பினார். பேச்சுவாக்கில் அதைத் தன் லயன்ஸ் கிளப் நண்பர் களிடம் சொன்னார். அவர்களில் ஒருவர் அங்கே வந்திருந்த தன் நண்பரை அறிமுகப்படுத்தி, “இதோ இவர் இப்பொழுது தன் பணிப் பொறுப்பிலிருந்து விடுபட இருக்கிறார், பயன்படுவார்” என்று சொன்னார்.

கம்ப்யூட்டர் துறையில் அனுபவம் பெற்றிராத அவரை மறுநாள் ஜெனரல் மேனேஜர் ஆக்கினார். தன் மாமா தொலைபேசித் துறையிலிருந்து ஓய்வு பெற இருப்பதாக மனைவி சொன்னவுடன்

அவரைத் தலைமை நிர்வாகி ஆக்கினார். அவருக்கும் கம்ப்யூட்டர் துறை அனுபவம் இல்லை.

பொதுமக்கள் தொடர்புக்கு ஒருவரை நியமிக்க எண்ணினார். அதற்கான தேர்வுக் குழுவில் இருந்தவர் ஒரு வெளிவட்ட ஆலோசகர். நல்ல சம்பளம் என்று தெரிந்ததும் வெளி நபரைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்புக்கு அமர்த்தப்பட்டவர் தானே அந்தப் பதவியில் அமர்ந்தார். அதே நேரம் தன் வெளிவட்ட வேலையையும் விட்டுவிடவில்லை.

அந்த நிறுவனம் என்ன ஆகியிருக்கும் என்று நினைக்கிறீர்கள்? ஆரம்பிக்கப்பட்ட அதே வேகத்தில் மூடப்பட்டது. தகுதியான நபர்களைப் பெரிய பொறுப்புகளுக்குத் தேர்ந்தெடுக்காமல் உறவு, நட்பு, தாட்சண்ய வட்டங்களில் சிக்கிக் கொண்ட தினால்தான் நிறுவனத்திற்கு அந்த துர்பாக்கிய நிலை ஏற்பட்டது. இப்படிப்பட்ட சூழ்நிலைகளை எதிர்கொள்பவர்களுக்கு இந்தக் கதை நல்லதொரு அனுபவப் பாடம்.



## 31. குணம் நாடி

மந்திரி பதவிக்குத் தேர்வு வைத்த கிருஷ்ண தேவராயர் என்ற மன்னரின் புத்திக் கூர்மை பற்றிப் படித்தீர்கள் அல்லவா? ஒரு மன்னனாகத் தேர்வில் வென்ற கிருஷ்ணதேவன் என்பவரைப் பற்றி சுவாமி கமலாத்மானந்தா அவர்கள் எழுதியுள்ள ஒரு கதையைக் கேளுங்கள்.

தேவலோகத்தில் ஒருநாள் இந்திரன் தேவாதி தேவர்களிடம் பூவுலகில் வாழும் கிருஷ்ணதேவன் என்ற ஒரு மன்னனைப் பற்றி மிகவும் புகழ்ந்து பேசிக் கொண்டிருந்தார். அதாவது தற்சமயம் பூவுலகில் அதுபோன்று வேறு ஒரு மன்னர் இல்லையென்று.

இவ்விதம் கிருஷ்ணதேவனை தேவேந்திரன் புகழ்ந்தது அங்குள்ள தேவன்களில் ஒருவருக்குப் பிடிக்கவில்லை. "கேவலம் ஒரு நரனை இந்திரன் இப்படிப் புகழ்வதா? கிருஷ்ண தேவனிடம் அப்படி யென்ன சிறப்பு இருக்கிறது. அதையும் பார்த்து விடுகிறேன்," என்று சொல்லிக் கொண்டு பூமிக்குப் புறப்பட்டான் அந்த தேவன்.

செத்துப்போன ஒரு நாயின் உடலாகத் தன்னை உருமாற்றிக் கொண்டு தொலை தூரத்திற்கு நாற்றம் வீசும்படியாக கிருஷ்ணதேவன் வரும் வழியில் படுத்துக் கிடந்தான் அந்த தேவன். நாற்றம் குடலைப் பிடுங்க மற்றவர்களே மூக்கைப் பிடித்துக் கொண்டு அருவருப்புடன் அந்த இடத்தைக் கடந்திருப்பார்கள்.

ஆனால் அந்த வழியில் சென்ற கிருஷ்ண தேவனோ நாயின் அருகில் வந்தான். உற்றுப் பார்த்தான். "அடாடா, இந்த நாயின் பல் வரிசை எவ்வளவு அழகாக இருக்கிறது, பற்கள் எவ்வளவு சுத்தமாகவும் வெண்மையாகவும் இருக்கின்றன! முத்துக்களைப் போல அல்லவா பிரகாசிக்கின்றன," என்று வாய்விட்டுச் சொன்னான் கிருஷ்ண தேவன்.

நாயின் அழுகிப்போன உடல், துர்நாற்றம் எதுவுமே கிருஷ்ண தேவனைத் திசைதிருப்பவில்லை. எதிலும் நல்லதைக் காணும் இயல்புடைய கிருஷ்ணதேவன் நாயின் அழகான பல்வரிசையை வியந்து பாராட்டிச் சென்றான்.

இந்த அரிய குணத்தை அறிந்து கொண்ட தேவன் தன் நாய் உருவை விடுத்து, இயல்பான உருவம் எய்தி, கிருஷ்ண தேவன் முன்னே தோன்றினான். "அரசே, உண்மையிலேயே, தங்களிடம் நல்ல குணத்தை மட்டுமே நாடும் தன்மையையும், நல்லனவற்றை மட்டுமே எடுத்துக் கொள்ளும் உயர்ந்த பண்பும் காணப்படுகின்றன. தங்களைப் போன்ற குணவான்களே இந்த உலகில்

சுகமாக வாழ்வார்கள்," என்று சொல்லி ஆசீர்வதித்துப் போனான் அந்த தேவன்.

இது தேவன் ஒருவன் அந்தக் காலத்து மன்னனுக்கு வைத்த மறைமுகத் தேர்வு. மன்னனின் மனோபாவத்தை நேரடிக் கேள்விகளால் தெரிந்து கொள்ளவில்லை அந்த தேவன். ஒரு காட்சிப் பொருளை வைத்துச் சோதனை செய்தான்.

இன்றும்கூட சில பெரிய நிறுவனங்களில் நடுநிலை, உயர்நிலை நிர்வாகப் பதவிகளுக்கு நபர்களைத் தேர்வு செய்யும் பொழுது, உன் வயது என்ன, ஆர்வம் என்ன என்றபடி கேள்விகளைக் கேட்பதில்லை. சில வண்ண அட்டைகளைக் காட்டி அதில் எந்த வண்ணம் பிடிக்கிறது என்று கேட்கிறார்கள். பதிலைத் தெரிந்து கொள்கிறார்கள். ஏன் அந்த வண்ணம் பிடித்திருக்கிறது என்று கேட்பதில்லை. பல வடிவ மர, பிளாஸ்டிக்ஸ் பொருட்களை வைத்து, எதை ஒதுக்கித் தள்ளுவாய் என்று கேட்கிறார்கள். ஏனென்று கேட்பதில்லை.

இதில் ஒரு நபர் வெளிப்படுத்தும் விருப்பு, வெறுப்புகளின் மூலம் அவரைச் சில உளவியல் கணிப்புகள் மூலம் எடை போடுகிறார்கள்.

மனம் தெளிவாக இருந்தால் வெற்றி நிச்சயம். நினைவு நல்லதாக இருந்தால் நெருங்கின பொருள் கைப்படும். நல்லதையே நினையுங்கள். நலம் பெறுங்கள்.

## 32. எல்லாம் நன்மைக்கே

'எல்லாம் நன்மைக்கே' என்பது வெறும் ஆறுதல் வார்த்தைகள் அல்ல. அது ஒரு மனப் பக்குவம். அது பற்றிக் கேள்விப்பட்ட கதையை நான் அவ்வப்பொழுது நண்பர்களிடம் சொல்வது உண்டு. அவர்களும் துன்பம் என்று முன்பு நினைத்திருந்ததைப் பொருட்படுத்தாமல் மற்ற வேலைகளில் கவனம் செலுத்தி வெற்றி பெற்றிருக்கிறார்கள். மன நிம்மதிக்கு இந்தக் கதை ஒரு மாமருந்து. இனி கதை:

ஒரு நாட்டு மன்னனுக்கு அறிவார்ந்த மந்திரி ஒருவர் இருந்தார். மிகப் பெரிய துன்பம் என்று மன்னர் எதைச் சொன்னாலும் மந்திரி ஆறுதலாகச் சொல்வார்: "எல்லாம் நன்மைக்கே." ஒரு முறை மன்னன் பழம் நறுக்கிக் கொண்டிருந்த பொழுது கூரான கத்தி இசகு பிசகாகப் பாய்ந்து சுட்டு விரலைத் துண்டித்துவிட்டது. மருத்துவர் உடனே, வரவழைக்கப்பட்டார். காயத்திற்குக் கட்டுப் போடப் பட்டது. வெட்டுப்பட்டது வெட்டப்பட்டதுதான். ஒட்டுவதற்கு அந்தக் காலத்தில் வழியில்லை. தன் நிலைமை இப்படி ஆகிவிட்டதே என்று வருந்திய

மன்னர் மந்திரியை அழைத்தார். மந்திரி சொன்னார்: "எல்லாம் நன்மைக்கே."

மற்ற சமயங்களில் இந்த வார்த்தைகளைக் கேட்டுக் கொண்ட மன்னனுக்கு இந்த முறை கோபம் வந்தது. தான் அங்கஹீனப்பட்டுப் போனதற்கு அனுதாபப்படாமல் வழக்கம் போல் 'எல்லாம் நன்மைக்கே' என்கிறானே இந்த மந்திரி; இவனுக்கு அலட்சியமும் அகம்பாவமும் அதிகம் என்று நினைத்த மன்னன் மந்திரியைச் சிறையில் அடைக்க ஆணையிட்டான். மந்திரியும் சிறைக்குச் சென்றார் "எல்லாம் நன்மைக்கே" என்று சொல்லியபடியே.

சில நாட்கள் கழித்து மன்னன் தன் பரிவாரங்களுடன் வேட்டையாடச் சென்றான். தன் போக்கில் எங்கெல்லாமோ சென்றான். விலங்கு களையும், பறவைகளையும் ஈட்டிகளாலும், அம்பு களாலும் கொன்றான். அப்படியே வெற்றிக் களிப்பில் அந்தத் திசை தெரியாத காட்டில் இங்கு மங்கும் அலைந்தான். ஒரு கட்டத்தில் அவனுடைய பரிவாரங்கள் அவனைப் பின்தொடர முடிய வில்லை. மன்னன் காட்டினுள்ளே வெகு தூரம் சென்று விட்டு மீள வழி தெரியாமல் திண்டாடி னான். இதற்குள் இருட்டிவிட்டது. அந்த இருட்டில் ஒரு காட்டு வாசிகளின் கும்பல் அவனைச் சூழ்ந்து கொண்டது. தப்பிப்பதற்காக அவன் தன்னை மன்னன் என்று அடையாளம் காட்டிக்கொள்ள, அதுவே அவனுக்கு ஒரு பெரிய ஆபத்து ஆயிற்று.

தாங்கள் வழிபட்டுவரும் காட்டுதேவதைக்குக் காணிக்கையாக கும்பலின் தலைவன் பிடிபட்ட மன்னனை நரபலி கொடுப்பதற்காகக் குளிப்பாட்டிக் குல தெய்வத்தின் சன்னதிக்கு அழைத்து வரச் செய்தான். மன்னனுக்கு சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. மன்னன் சுமைதாங்கிக் கல்போல் தெரிந்த ஒரு கல் படுக்கையில் கிடத்தப்பட்டான். அவன் மீது மஞ்சள் பூசப்பட்டது. நீண்டதொரு வாளால் மன்னன் தலையை ஒரே வெட்டாக வெட்டுவதற்கு முன்பு பூசாரி மன்னனை கேசாதி பாதம் தீர்க்கமாக ஒரு பார்வை பார்த்தான். மன்னன் கையில் சுட்டு விரல் இல்லை என்பதைக் கண்டான். வெட்டுவதை நிறுத்திவிட்டு அதை காட்டுவாசிகளின் தலைவனிடம் சொல்ல, அந்தத் தலைவன் "அங்கஹீனப்பட்ட மனிதனை பலியிட்டால் தெய்வம் அதை ஏற்காது, இவனைப் பிடித்த இடத்தில் விட்டு விடுங்கள்" என்று ஆணையிட்டான். மன்னன் நரபலியிலிருந்து தப்பித்தான். அங்கே இங்கே தேடிய பரிவாரமும் மறுநாள் காட்டினுள்ளே மன்னனைக் கண்டு கொண்டது. மஞ்சள் பூச்சுடன் இருந்த மன்னன் தான் எதிர்கொண்ட ஆபத்தையும் விரல் இழந்ததால் உயிர் பிழைத்ததையும் சொன்னான். விரல் வெட்டப்பட்ட போது அவனுக்கு "எல்லாம் நன்மைக்கே" என்று மந்திரி சொன்னது புரிந்தது.

நாட்டுக்குத் திரும்பியதும் முதல் வேலையாகத் தன் மதி மந்திரியைச் சிறையிலிருந்து விடுவித்து நடந்ததைச் சொன்னான். நன்றி தெரிவித்தான்.

அத்துடன், "எல்லாம் நன்மைக்கே" என்று சொன்னபடி விரல் போனது எனக்கு நன்மையாயிற்று. ஆனால் உன்னைச் சிறையில் தள்ளும்பொழுது "எல்லாம் நன்மைக்கே" என்று சொல்லிக் கொண்டாயே, "சிறையில் அடைபட்டது நன்மையா?" என்று கேட்க, மந்திரி சொன்னார்; "அரசே, நிஜமாக அதுவும்கூட நன்மைக்கே, என்னைச் சிறையில் போடாமல் இருந்திருந்தால், நானும் உங்களுடன் வந்திருப்பேன். நிழலாகப் பின் தொடர்ந்திருப்பேன். எனக்கு அங்கஹீனம் இல்லையென்பதால் என்னை நரபலி கொடுத்திருப்பார்கள்."

காட்டுக்குச் சென்ற மன்னன் தப்பித்தோம் பிழைத்தோம் என்று மீண்ட கதை போலவே, தொலைதூரத் தீவுக்கு சாதாரணமான மனிதனாகச் சென்றவன் ஒரு மன்னனாகவே வாழ்ந்த கதையும் உண்டு. அதையும் தெரிந்து கொள்ளுங்கள்.

அடிமைகள் சேவகம் செய்துவந்த பழங்காலம் அது. தன் அடிமையின் அயராத பணியினால் மகிழ்ந்து போன ஒரு பணக்காரன் கப்பல் நிறைய விலை உயர்ந்த சரக்குகளைக் கொடுத்து, "உனக்கு விடுதலை அளிக்கிறேன். இந்தச் சரக்குகளை விற்றுப் பிழைத்துக்கொள். மிகவும் சௌக்கியமாக இருப்பாய்," என்று ஆசிர்வதித்து அனுப்பினான்.

தன் எதிர்காலத்தைப் பற்றிய வண்ணக் கனவுகளுடன் விடுதலை பெற்ற அந்த அடிமை வெளிநாட்டுக்குப் பயணப்பட்டபொழுது, நடுக்

கடலில் சூறாவளி வீசியது. கப்பல் கவிழ்ந்தது. சரக்குகள் நாசமாயின. கொந்தளித்த கடல் அலைகள் இவனை ஒரு தீவின் கரையோரம் வீசித் தள்ளின

தட்டுத் தடுமாறி எழுந்து தன் தற்போதைய நிலைமை குறித்து மிகவும் வருந்திக் கொண்டிருந்த பொழுது, அந்தத் தீவிலிருந்து ஒரு கூட்டம் இவனை நோக்கி வந்து கொண்டிருந்தது. இது என்னடா புது ஆபத்து என்று அவன் குழம்பிய நேரத்தில் கையில் பூமாலைகள் ஏந்தி வந்த மக்கள், "புதிய மன்னரே வருக, வருக, வாழ்க, வளர்க," என்று கோஷம் எழுப் பினார்கள். இவனை யானைமீது ஏற்றி ஊர்வலமாக அழைத்துச் சென்று சிம்மாசனத்தில் அமர்த்தி னார்கள்.

அடிமை வாழ்வு; விடுதலை: கப்பல் நிறைய சரக்குகள்; சூறாவளியால் இழப்பு; புதியவர் அறிமுகம்; மன்னர் பதவி இப்படி அடுக்கடுக்காக நன்மையும் தீமையும் மாறிவந்ததில் அவனுக்கு எதுவுமே புரியவில்லை.

தன் அருகில் இருந்த பெரியவரை அழைத்து, "முன்பின் தெரியாத என்னை நீங்கள் மன்ன னாக்கியிருக்கிறீர்களே, இது என்ன விசித்திரம்?" என்று கேட்க, அவர் சொன்னார்; "இதுதான் இந்தத் தீவு மக்களின் வழக்கம். அரச பதவி சரியாக ஒரு வருஷம் மட்டும்தான். அந்தக் காலம் முடிந்ததும் அரசனைத் தொலைவில் உள்ள அமானுஷ்யமான தீவில் கொண்டு விட்டு விடுவோம்.

"அப்படியானால் எனக்கு முன் அரசரான வர்கள் எல்லோரும் அந்த அமானுஷ்யத் தீவில்தான் வசிக்கிறார்களா?"

"அது எப்படி முடியும்? அவர்கள் அனைவரையும் காட்டு மிருகங்கள் அடித்துக் கொன்று தின்று விட்டன."

"அப்படியானால் அடுத்த வருஷம் என் கதியும் அதுதானா?"

"நிலைமை மாறும், நீ முன்ஜாக்கிரதையாக நடந்துகொண்டால்."

"முன் ஜாக்கிரதையுடன் நான் செய்ய வேண்டியவை எவை?"

"எவ்வளவோ செய்யமுடியும். நீயோ மன்னன். அந்தக் கண்காணாத தீவை வசிப்பதற்கு உரிய இடமாக மாற்ற இப்பொழுதே ஏற்பாடுகளைச் செய். காட்டை அழித்து வீடுகளைக் கட்டு; மக்களைக் குடியேற்று. அவர்கள் அங்கே பிழைப்பதற்கு வழி செய். காட்டு மிருகங்கள் ஓடி விடும். அங்கே உனக்கு ஒரு அரண்மனை கட்டிக் கொள். ஒரு வருஷம் முடிந்ததும் அங்கே மன்னனாக ஆட்சி செலுத்து."

"நல்ல யோசனைதான்; பின் ஏன் இதை மற்றவர்கள் செய்யவில்லை?"

"நல்ல கேள்வி. இந்த ஒரு வருடத்தையும் அவர்கள் ராஜபோகத்திலேயே கழித்தார்கள். குடித்தார்கள்; குதியாட்டம் போட்டார்கள். எதிர்

காலத்தைப் பற்றிய சிந்தனையும் முன்யோசனையும் அவர்களிடம் இல்லை. நீ அப்படி இருக்கமாட்டாய் என்று நினைக்கிறேன்."

"உங்கள் ஊகத்தைப் பொய்யாக்க மாட்டேன். இன்று என்பது நாளையைத் திட்டமிடுவதற்கே பயன்படுத்தப்பட வேண்டும். ஆனால் ஒன்று, அப்படி ஒரு வருடம் கழித்து நான் அங்கே செல்லும் பொழுது நீங்களும் என்னுடன் வரவேண்டும்," என்று திடீர் அரசனான அந்த முன்னாள் அடிமை சொன்னான். "என்றும் நான் உன்னுடனேயே இருப்பேன்," என்று சொன்ன அந்தப் பெரியவர் தானே கடவுள் என்பதையும் வெளிப்படுத்தினார். கடவுள் அருள் இருக்க, தன்னால் செய்யமுடியாதது என்ன என்று திருப்திப்பட்ட மன்னன் மறுவருடம் தான் புகவேண்டியிருந்த தீவை மறுநாள் முதலே சீர் செய்யத் தொடங்கினான். சகல வசதிகளுடன், வளங்களுடன் அதை ஒரு குட்டி நாடாக மாற்றினான். அங்கே சென்று மக்கள் மனம் மகிழப் பல வருடங்கள் ஆட்சி செய்தான்.

இதில் உள்ள கதை அம்சத்தைக் கொஞ்சம் ஒதுக்கி வைத்து விட்டுக் கருத்தைப் பற்றி யோசித்துப் பாருங்கள். ஆட்சிக் காலத்தைக் கேளிக்கைகளில் பாழடிக்கும் ஆட்சியாளர்கள் உங்கள் நினைவுக்கு வரலாம். அவர்களுக்கு இந்தக் கதையை யாராவது எடுத்துச் சொன்னால் நல்லது என்று நினைக்கிறேன். இரண்டு கதைகளை அடுத்து, இதுவும் ஒரு கதை

தானோ என்று சந்தேகப்பட வைக்கும் ஒரு உண்மை நிகழ்ச்சியைப் பொருத்தம் கருதி இங்கே சொல்ல நினைக்கிறேன்.

இங்கிலாந்து நாட்டின் சாதாரணக் குடும்பத்துக் குடிமகன் ஒருவருக்கு நடுத்தர வயதில் உடல் நலம் குன்றியது. இன்னது என்று நோயை அறிந்துகொள்ள முடியவில்லை. குடும்ப மருத்தவர் இடம் மாற்றம் உடல் நலம் பெற உதவும் என்று நினைத்தார். எனவே ஏதாவது உஷ்ணப் பிரதேசத்திற்குச் சென்று அங்கு சில வருடங்கள் தங்கியிருக்கும்படி யோசனை சொன்னார். வெப்ப நாடுகள் எத்தனையோ இருக்க அந்த பிரிட்டிஷ் பிரஜை தென் ஆப்பிரிக்காவின் ஜோஹன்னஸ்பர்க் நகருக்குச் சென்றார். அங்கே வாடகைக்கு வீடு எடுத்துக் கொண்டார். ஒருநாள் கடற்கரையோரம் நடந்து வந்தபொழுது பளீரென்ற ஒரு பொருள் காலில் இடறியது. எடுத்துப் பார்த்தார். அது ஒரு வைரக்கல். நண்பர்களிடம் காண்பித்து வைரம் என்பதையும் உறுதிப்படுத்திக் கொண்டார். வைரத்துக்கு ஒரு விசேஷம். அது முழுமையாக முதிர்ச்சி அடைந்துவிட்டால் பூமிக்கு அடியில் தங்காது. வெளியே வந்துவிடும். அப்படி வெளியே வந்த வைரக்கல்தான் அது. இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு அந்த இடத்தில் வைரங்கள் அதிகம் இருக்குமோ என்று யோசித்துப் பார்த்த அந்த பிரிட்டிஷ்காரர் அதே இடத்தில் ஒரு சுரங்கம் தோண்டினார். அவரது ஊகம் சரியானது. நிறைய வைரங்கள் கிடைத்தன. அவர் மிகப் பெரிய பணக்காரர் ஆனார். உடல்

நலம் பெற ஒதுங்கிய ஊரில் மனிதருக்கு அப்படி ஒரு அதிர்ஷ்டக் காற்று வீசியது. இதை யாரால், எப்படி விளக்க முடியும்? கதை அல்ல, வரலாறு.

முதல் கதையில் எல்லாம் தற்செயலாக நடந்த சம்பவங்கள். இரண்டாவதில் ஒரு கட்டம் வரை தற்செயலாக நிகழ்வுகள். அடுத்த கட்டத்தில் மனிதன் சிந்தித்துச் செயல்பட்டான். மூன்றாவதாக நான் சொன்ன நிகழ்ச்சியில் முதல் கட்டம் அந்த மனிதர் நோய்வாய்ப்பட்டது. அடுத்த கட்டம் அவரை உஷ்ணப் பிரதேசத்திற்கு டாக்டர் போகச்சொன்னது. அது அறிவார்த்தமானது. போன இடத்தில் வைரம் கிடைத்தது தற்செயலாக நடந்தது. அதை முழுமையாகப் பயன்படுத்த நினைத்தது அந்த மனிதரின் கெட்டிக்காரத்தனம்.

இந்தியக் குடியரசுத் தலைவராக இருந்த தத்துவமேதை டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் சொன்னார்: "சீட்டாட்டத்தில் நம் கைக்கு வரும் சீட்டுகள் விதி. அவற்றை வைத்து வெல்வது நம் மதி. இங்கே முதல் கதை முழுக்க முழுக்க விதி. இரண்டாம் கதையும் மூன்றாம் நிகழ்ச்சியும் விதியும் மதியும் சேர்ந்த நிலைமைகள். ஆக, எல்லாம் நன்மைக்கே என்பதைக்கூட ஒரு மேம்போக்கான வார்த்தையாக எடுத்துக்கொள்ளாமல், எல்லாவற் றையும் நன்மையாக மாற்றுவது எப்படி என்பதை மனிதன் சிந்தித்துப் பார்க்கவேண்டும். தகுந்த வழி காட்டுதலுடன் செயல்பட வேண்டும். அப்படிச் செய்தால் வெற்றி உறுதி.

## நூலாசிரியர்:

நல்லி செட்டியார் என்று தொழில், வர்த்தக, கலை, இலக்கிய வட்டங்களில் அறிமுகமாகியுள்ள நல்லி குப்புசாமி செட்டியார் காஞ்சிபுரத்தில் நெசவாளர் குடும்பத்தில் 1940ஆம் வருடம் நவம்பர் மாதம் ஒன்பதாம் தேதி பிறந்தவர்.

தந்தை நல்லி நாராயணசாமி செட்டியார்; தாயார் கண்ணம்மாள். நல்லி என்பது குடும்பப் பெயர்.

தந்தை காலமானதை அடுத்து, பாட்டனார் நல்லி சின்னசாமி செட்டியார் 1928இல் தொடங்கிய கடையின் நிர்வாகத்தை இவர் தன் 16வது வயதில் ஏற்றார்.

அப்பொழுது 200 சதுர அடி அளவில் அமைந்திருந்த கடையைத் தன் அயராத உழைப்பினாலும் இனிய வாடிக்கையாளர் உறவினாலும் மூன்று தளங்களில், 30,000 சதுர அடிக்கு, ஒரு தெருவிலிருந்து மறு தெரு வரை விரிவு செய்தார். அத்துடன் அண்மையில் சென்னையில் நான்காவது கிளையையும் திறந்திருக்கிறார்.

நல்லியின் கிளைகள் இங்கிலாந்து, அமெரிக்கா, கனடா, சிங்கப்பூர் தவிர டெல்லி (இரு கிளைகள்), மும்பை, ஹைதராபாத், பெங்களூர், கோயம்புத்தூர், திருச்சி, மதுரை, திருநெல்வேலி ஆகிய நகரங்களிலும் உள்ளன.

பள்ளி இறுதித் தேர்வில் மூன்றாவது இடத்தைப் பிடித்தும் குடும்பச் சூழ்நிலை காரணமாகக் கல்லூரியில் சேர முடியாமற்போன ஏக்கத்துடன் தனக்கெனத் தனியாக வீட்டில் ஒரு வளமான நூலகத்தை அமைத்துக் கொண்டுள்ள இவர் சென்னை கன்னிமாரா நூலகத்தின் புரவலர்.

நூலாசிரியர்களுக்கும் பதிப்பாசிரியர்களுக்கும் பொருளுதவி செய்து வருபவர். தன் அனுபவங்களை எளிய தமிழில் பகிர்ந்து கொள்ளும் இவரும் நூலாசிரியரே. தமிழில் பல நூல்கள் எழுதி இருக்கிறார்; அவை வணிகம், நிர்வாகம், அறநெறி மற்றும் வாழ்வியல் சார்ந்தவை. அவற்றில் சில மராத்தி, இந்தி, தெலுங்கு, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இரு நூல்கள் தமிழ் வளர்ச்சித் துறையின் பரிசுகளைப் பெற்றுள்ளன.

பொது வாழ்வில் நாட்டம் கொண்ட நல்லி குப்புசாமி செட்டியார் திருப்பதி திருமலை தேவஸ்தான நிர்வாகக் குழு உறுப்பினராக இருந்தவர். இரண்டாம் முறையாக மயிலை கபாலீஸ்வரர் ஆலய அறங்காவலர் குழுத் தலைவராகப் பணியாற்றுகிறார்.

கோவை பாரதியார் பல்கலைக் கழக செனட் உறுப்பினராகவும், மாநில அரசுகள் சார்ந்த தென் மாநிலங்கள் பண்பாட்டுப் பேரவையின் உறுப்பினராகவும், மத்திய அரசின் பட்டு வாரிய உறுப்பினராகவும் இருந்தவர். தமிழ் வர்த்தக சங்கத் துணைத் தலைவராகவும், சமய நல்லிணக்கத்தைப் போற்றும் ஹார்மனி இந்தியா அமைப்பின் உறுப்பினராகவும் இருக்கிறார்.

அத்துடன் பல கல்வி நிலையங்களின் நிர்வாகக் குழுக்களில் இடம்பெற்றிருக்கிறார். எத்தனையோ கல்வி நிலையங்களுக்குப் பொருளுதவி செய்து வருகிறார்.

பரபரப்பான தொழில் துறைப் பணிகளுக்கிடையிலும் கலை, இலக்கிய ஈடுபாடுகளைச் சற்றும் விட்டுக் கொடுக்காத நல்லி குப்புசாமி செட்டியார் அவர்கள் சென்னை ஸ்ரீ பார்த்தசாரதி சுவாமி சபா, ஸ்ரீ கிருஷ்ணகான சபா, பிரம்மகான சபா, முத்ரா, பைரவிகான சபா, நுங்கம்பாக்கம் கல்ச்சுரல் அகாடமி போன்ற அமைப்புகளின் தலைவர். மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் கிளப்பின் துணைத் தலைவர். சென்னை பாரதீய வித்யா பவனின் நிர்வாகக் குழு உறுப்பினர்.

'உழைப்பின் சிகரம்', 'உடை வணிகச் சக்ரவர்த்தி', 'வர்த்தக ரத்னா' பட்டங்கள் தவிர அமெரிக்கப் பல்கலைக் கழகத்தின் டாக்டர் பட்டம், தமிழக அரசின் 'கலைமாமணி', மத்திய அரசின் 'பத்ம ஸ்ரீ' என்று பல பெருமைகளைப் பெற்றுள்ளபோதும் தன்னை ஒரு பட்டு வியாபாரி என்று அடக்கமாகக் கூறிக்கொள்ளும் நல்லி குப்புசாமி செட்டியார் நட்புக்கினியவர்; கலா ரசிகர்; புரவலர்; கொடைவள்ளல், பாரதி ஆர்வலர், நேதாஜி நேசர். தெலுங்கு, இந்தி, ஆங்கிலம் ஆகிய மொழிகள் அறிந்தவர். பல நாடுகளுக்குப் பயணம் செய்து அறிவை வளர்த்துக் கொண்டு வருபவர். 'பட்டுக்கொரு நல்லி' என்ற பெருமைக்குரியவர்.

## பத்ம ஸ்ரீ நல்லி குப்புசாமி செட்டியார் அவர்களின் நூல்கள்

**வாழ்வியல்:**

1. வெற்றியின் வரலாறு
2. அனுபவம் பேசுகிறது
3. பழங்கதைகளில் வாழ்வியல்
4. ஐந்தறிவிலிருந்து ஆறறிவிற்கு
5. பரமஹம்சர் நூறு
6. விவேக தீபம்
7. அனுபவம் 66
8. வெற்றிமேல் வெற்றி
9. கேள்வியும் நானே பதில்களும் நானே
10. சில சிந்தனைகள் சில நினைவுகள்

**வணிகவியல்:**

1. வியாபாரத்தைப் பெருக்குவது எப்படி?*
2. உறவு காக்கும் வணிகம்*
3. வியாபார முன்னேற்றச் சிந்தனைகள்
4. நிர்வாகச் சிந்தனைகள்
5. நீதி நூல்களில் நிர்வாகம்
6. வள்ளுவர் வகுத்த வாணிபம்
7. வெற்றிகரமான நிர்வாகியாக
8. நிர்வாக மந்திரங்கள்

**பாரதியியல்:**

1. மானுடத்தின் மகாகவி
2. மகாகவி பாரதி (சில ஒப்பீட்டுப் பார்வைகள்)

---

* தமிழ் வளர்ச்சித்துறை பரிசு பெற்றவை.

**தொகுப்பு: [பாரதியியல்]**

1. மகாகவி பாரதியார் மணிமொழிகள்
2. பாரதி அறுபது
3. தமிழ்நாட்டு மாதருக்கு பாரதியார்
4. நெஞ்சில் கனல் மணக்கும் பூக்கள்
5. பாரதி — யார்?
6. தாகூர் கதைகள்

**தொகுப்பும் பதிப்பும்: [பொது]**

1. குருநாதர் மகிமை
2. ஆனந்த மடம்
3. பாரத ஜனசபை

**நல்லி குப்புசாமி செட்டியார் பற்றிய நூல்கள்:**

1. மனிதருள் மாணிக்கம் : பொன் பரமகுரு
2. கலைமாமணி நல்லி : ஆர். நடராஜன் (தொகுப்பு)
3. நல்லி அறுபத்தாறு : சரஸ்வதி ராமநாதன்
4. உழைப்பின் சிகரம் : முத்து ஸ்ரீனிவாசன்

## இசைக் கையேடுகளின் சிறப்பு

(லண்டனிலிருந்து பத்திரிகையாளர் மாலி)

கர்நாடக இசை ராகங்களையும் கீர்த்தனங்களையும் அவற்றை இயற்றியவர்கள் பற்றிய தகவல்களையும் தொகுத்து ஒரு கையேடும், டிசம்பர் இசை விழா நிகழ்ச்சிகளை நிரல் படுத்தி இன்னொரு கையேடும் கலைமாமணி நல்லி குப்புசாமி செட்டியார் வருடா வருடம் வெளியிட்டு வருகிறார். சென்னையில் உள்ள பெரும்பாலான சபாக்களுக்கு புரவலர். கலைகளின் காவலர். அந்தக் காலத்து மன்னர்களைப் போல இவர் கலைகளை ஆதரித்து வருகிறார்.

*லண்டன் மாநகரிலிருந்து வெளியாகும்*
*'அஞ்சல்' இதழின் மதிப்புரையிலிருந்து*

பழந்தமிழ் இலக்கிய மேற்கோள்களை வைத்துக் கொண்டே புதிய துறையான நிர்வாகக் கூறுகள் பற்றித் தம் கருத்துக்களை மிகத் தெளிவாகவும், கோர்வையாகவும் எழுதியிருக்கிறார் பிரபல பட்டு ஜவுளி வணிகர் டாக்டர் நல்லி குப்புசாமி செட்டியார்.

ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி, உலகநீதி, வெற்றி வேற்கை, நீதி வெண்பா, நன்னெறி, அறநெறிச் சாரம், நீதிநெறி விளக்கம், நாலடியார் ஆகிய பதினோரு பழந்தமிழ் நூல்களிலிருந்து மொத்தம் 120 மேற்கோள்களைத் தேர்ந்தெடுத்து ஒவ்வொன்றுக்கும் ஒரே சீராக இரண்டிரண்டு பக்கங்கள் என்ற அளவில் விளக்கம் தந்திருக்கிறார். ஒவ்வொரு மேற்கோளின் சாரமும் 'நறுக்' கென்று சொல்லப்படுகிறது. ஆசிரியர் ஆங்காங்கே தன் அனுபவங்களையும், இன்றைய வாழ்க்கைப் போக்கு களையும் மிக எளிய தமிழில் எடுத்துச் சொல்கிறார். வாழ்க்கைக்கும் வியாபாரத்திற்கும் வழிகாட்டக்கூடிய துணி வியாபாரியின் நூல் இது. நூலின் எந்தப் பக்கத்திலும் அனாவசியச் சொற்கள் இல்லை. விளக்கம் நாட்டு நடப்பு, மனித குணம் சார்ந்து அமைந்துள்ளது.

இந்த ஒரு நூலைப் படிப்பது மூலம் பல நூல்களின் அறிஞர்களின் போதனை நமக்குக் கிடைக்கிறது. ஆராய்ச்சியாளர்கள் பலர் செய்யத் தவறியதை இந்த அனுபவஸ்தர் செய்து காட்டுகிறார். இதனுடன் சேர்ந்து பத்து நூல்களை எழுதியுள்ள திரு. நல்லி குப்புசாமி செட்டியார் நவீன நிர்வாக வியலுக்குச் செழுமையான பங்கு அளித்திருக்கிறார்.

(மாலி, ஆசிரியர், அஞ்சல், லண்டன் — ஜனவரி 15, 1999)

(மஞ்சரி இதழ் மதிப்புரையிலிருந்து)

வாடிகையாளர்களுக்கும், வர்த்தகர்களுக்கும் இடையே ஏற்படும் மிக நல்ல — சுமுகமான உறவு வர்த்தகத்தின் வெற்றியில் பெரும் பங்கு வகிக்கிறது. இந்த முக்கியமான விஷயத்தை விரிவாகவும் மனதில் நன்கு பதியும்படியும் விளக்கும் வகையில் 'உறவு காக்கும் வணிகம்' என்ற நூலை எழுதி இருப்பவர் இதற்குப் பொருத்தமான பிரபல வர்த்தகர் டாக்டர் நல்லி குப்புசாமி செட்டியார். முப்பத்திரண்டு கட்டுரைகளின் மூலம் ஆசிரியர் பல நுட்பமான வியாபார அம்சங்களையும், உத்திகளையும் திறம்பட விளக்குகிறார். குறிப்பாக, வாடிக்கையாளர்களை எப்படி நடத்த வேண்டும் — அவர்கள் மனம் கோணாமல் வியாபாரம் செய்வது எப்படி? — பலதரப்பட்ட வாடிக்கையாளர் களிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும்? நிரந்தரமாக வாடிக்கையாளர்களைத் தன்னிடம் தக்க வைத்துக் கொள்வது எப்படி? — போன்ற வர்த்தகத்துக்கு அவசியமான விஷயங்களை இந்தப் புத்தகத்தைப் படித்துத் தெரிந்து கொள்ளலாம். நூல் ஆசிரியரின் சொந்த அனுபவங்களும், பிறரது அனுபவங்களும், கட்டுரைகளில் எடுத்துக் காட்டப்படுவதால் நல்ல தெளிவைத் தருவதாய் அமைகிறது இந்த நூல்.

வணிகத்தில் மனித உறவுகள் எவ்வளவு முக்கியம் என்பதையும் அதை எவ்விதம் பாதுகாத்து வணிகத்தில் வெற்றி பெற வேண்டும் என்பதையும் Brain Bank வெளியீடான 'உறவு காக்கும் வணிகம்' என்ற இந்த நூல் பிரமாதமாக விளக்குகிறது. டாக்டர் நல்லி குப்புசாமி செட்டியார் அவர்களின் அனுபவபூர்வமான சிந்தனை களின் தொகுப்பு இது.

(நூல் மதிப்பீடு: மஞ்சரி. வி. எஸ். ஸ்ரீதரன்; ஜூலை 1998)

## நீதி நூல்களில் நிர்வாகம்

சில மாதங்களுக்கு முன்பு தங்கள் கடையில் புடவை வாங்க வந்தபோது எதேச்சையாக இந்தப் புத்தகம் கண்ணில் பட்டது. சேல்ஸ் மேனேஜரிடம் கேட்டுப் பெற்றுக் கொண்டோம். சின்னச் சின்ன நீதி விளக்கங்கள், படித்து ஒவ்வொருவரும் புரிந்து கொள்ள வேண்டியவை. பெரிய படிப்பின் பயன் சின்ன உரைநடையில் எளிமையாக, மிக அருமையாக உள்ளது. நானும் என் மனைவியும் விரும்பிப் படித்தோம். தங்கள் பட்டுச் சேலைக்கு மேலாகத் தங்கள் புத்தகம் சொல்லழகு பெற்றுள்ளது.

பெங்களூர் — எஸ். சுந்தரராஜன்
20.9.99 — வாடிக்கையாளர் / வாசகர்

## வாழ்த்துப் பா

**பேராசிரியர் பொ. முத்தரசு அவர்கள்**
**ஸ்ரீ வைகுண்டம் 29.04.99**

'நீதி நூல்களில் நிர்வாகம்' என்ற நூலை முழுவதும் படித்து மகிழ்ந்தேன். மிகவும் நன்றாக எழுதப்பட்டுள்ளது. எடுத்துக்கொண்ட நீதி நூல் தொடர் ஆழமாகவும், நிர்வாகத் துறைக்குப் பொருந்தும் வகையிலும் எளிய, இனிய, தமிழ் நடையில் விளக்கப்பட்டுள்ளது. மூல நூலைப் படிக்க வேண்டும் என்ற ஆர்வத்தை எழுப்பக் கூடியது.

இந்நூல் பற்றி என் உள்ளத்தில் எழுந்த கருத்து பின்வரும் வெண்பாவாக வடிவுற்றது:

*நிர்வாகம் தேற நெடுமொழிகள் பல்வகைய*
*நிர்வாகம் செய்வோர் நினைந்தேற்க – நிர்வாகம்*
*சார்ந்த பெருநூல் தனையளித்தார் குப்புசாமி*
*ஆர்ந்தறிஞர் கொண்டேத்த ஆய்ந்து.*

## நீதிநூல்களில் நிர்வாகம்

பாலபாட நீதி நூல்களிலிருந்து தொழில், நிர்வாகம், மற்றும் மேலாண்மைத் துறைக்கான நெறிமுறைகளையும் அவற்றில் வெற்றி பெறும் வழிவகைகளையும் "நீதி நூல்களில் நிர்வாகம்" என்ற இந்நூலில் ஆசிரியர் அளித்துள்ளார். இரண்டு, மூன்று சொற்களைக்கொண்ட ஆத்திசூடி, மூதுரை, நல்வழி ஆகியவற்றின் சாரத்தைத் தனது பரந்த அனுபவங்களோடு கலந்து, சிறந்த கட்டுரைகளாக்கித் தந்துள்ளார் ஆசிரியர். இவ்வாறு 120 கட்டுரைகளில் தனது ஆழ்ந்த சிந்தனைகளை, அனுபவங்களை எளிய இனிய நடையில் விளக்குகிறார். பாரதி, வள்ளுவர், பட்டுக் கோட்டையாரின் வைர வரிகளும் தமிழ்ப் பழமொழிகளும் ஆசிரியரின் கருத்துகளுக்கு அணி சேர்க்கின்றன. நூலின் இறுதியில் கொடுத்துள்ள முதல் சொல், கருச்சொல் நிரல்களும், ஆத்திசூடி, நாலடியார், கொன்றைவேந்தன் ஆகியவற்றின் தொகுப்பும் நூல் படிப்போர்க்குப் பயன் தருபவை.

(தினமணியில் திரு. கா. மீனாட்சி சுந்தரம்)

## பழங்கதைகளில் வாழ்வியல்

நமது பழைய கதைகளில் காணப்படும் வாழ்வியல் நீதிகளை அன்றாட நிகழ்ச்சிகளுடன் பொருத்திப் பார்ப்பது ஒரு கலை. அதிலும் நல்லி குப்புசாமி செட்டியார் போன்ற பிரபல வணிகர் தனது தொழில் சார்ந்த அனுபவங்களுடன் அவற்றை ஒப்பிட்டு புதிய கண்ணோட்டத்துடன் நீதி விளக்கம் தருவது இந்த நூலில் தனிச் சிறப்பாக அமைந்திருப்பதைக் காண முடிகிறது. கதைகள் பழையனதான். ஆனால் அவற்றில் பொதிந்து கிடக்கும் நீதிகளை இன்றைய சூழ்நிலைக்கு ஏற்ப பொருத்திப் பார்த்துக் கட்டுரைகளாகப் படைத்திருக்கும் நூலாசிரியர் பாராட்டுக்குரியவர். கதைகளுக்கு ஓவியர் தாமரை வரைந்துள்ள ஓவியங்கள் சிறப்பாக உள்ளன.

(தினமலரில் திரு. ஜனகன்)

'ஹிந்து' நாளிதழ் மதிப்புரையிலிருந்து

The reviewer feels that there is no proverb either in Tamil or in any language stating that "proverbs can be used to produce a purposeful book." Nalli Kuppuswamy Chettiar, running a prosperous business house, has chosen to take the Tamil reading public by storm by writing this attractive book on Tamil proverbs.

After selecting 100 proverbs, he goes into each proverb and brings out first its popular meaning and then explains the inner connotations. He devotes only a page and half for each proverb to present a crisp and capsule-like presentation.

The reader is treated to a wealth of knowledge and the book will be absorbing interest to the ordinary reader.

The author also writes lucidly as to how to treat one's assistants. He details about the training to be given to various cadres and their work allotment. His advice that the partners of a firm, though they may be blood relations, should live separately as this will ensure their unity, is very sound.

Though meant to deal with 100 proverbs, the author quotes innumerable proverbs in between to strengthen his arguments. The book will be useful to, besides the general reader, businessmen who employ and manage workers and staff.

(Review by Makharam, **The Hindu,** May 19, 1998.)



தமிழில் நிர்வாகவியல் நூல்கள் பல எழுதியுள்ள தொழிலதிபர் டாக்டர் நல்லி குப்புசாமி செட்டியார் இருமுறை தமிழ் வளர்ச்சித்துறைப் பரிசுகளைப் பெற்றுள்ளார். சமயம், இலக்கியம், ஆன்மிகம், நுண்கலைகளில் நாட்டம் கொண்டுள்ள இவர் அண்மையில் சரித்திர மாமணி என்ற பட்டத்தைப் பெற்றுள்ளார். தமிழக அரசு கலைமாமணி விருது அளித்துப் பெருமைப்படுத்தியுள்ளது. குடியரசுத் தலைவர் பத்மஸ்ரீ விருது வழங்கிச் சிறப்பித்துள்ளார்.